

# கவுன் புதிதா?



## இல்லை, லக்ஸால் சலவை செய்தது

பால் மணம் மாறாத இச் சிறுமியின் கவுன் கோடித் துணிபோல புத்தம்புதுக் கருக்குடன் விளங்குகிறது! காரணம், மென்மையான லக்ஸ் தூள்களால் அவள் தாய் அதை சலவை செய்கிறாள். நேர்த்திமிக்க பட்டு, பருத்தி முதல் மிருதுவான கம்பளிகள் வரை உங்கள் துணிகள் எல்லாவற்றையும் மென்மையான லக்ஸ் நுரையிடம் ஒப்படையுங்கள்—ஆடைகளின் வர்ண மும் புதுமையும் குன்றாமல் பாதுகாப்பது லக்ஸ்.




**அழகான ஆடைகளுக்கு நெடுங்காலம்**
**புதுமைத் தோற்றம் அளித்துக் காப்பது லக்ஸ்**

மும்பாயிலுள்ள ஹிந்துஸ்தான் லீவர் லிமிடெட் கம்பெனியின் தயாரிப்பு

LX. 138A-50 TM

# கல்கி

## பொருளடக்கம்



"கல்கி"யில் வெளியாகும் கதைகளில் உள்ள பெயர்கள் எல்லாம் கற்பனைப் பெயர்கள்; சம்பவங்களும் கற்பனையே.



மலர் 17
இதழ் 17

தமிழ்த்திரு நாடு தன்னைப் - பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா —பாரதியார்

ஹேவிளம்பி
கார்த்திகை 9

# பாட புத்தகப் பிரசுரம்

உற்பத்தித் தொழில் முறைகளைத் தேசியமாக்குவது நாட்டுக்கு நல்லதல்ல என்று நாம் பல முறை வற்புறுத்தி எழுதி வந்திருக்கிறோம்.

சென்னை சர்க்கார் பஸ் ஓட்டும் பொறுப்பை ஏற்றுக் கொண்டதிலிருந்து பொது மக்கள் அனுபவித்து வரும் கஷ்டங்கள் சொல்லி முடியாது. குறித்த நேரத்துக்கு பஸ் வரும் என்று நிச்சயமில்லை. எந்த இடத்துக்கு எந்த பஸ் போகிறது என்பது தெளிவாகப் பெயர் பலகைகளில் எழுதப்பட்டிருக்காது. பஸ்ஸுக்குள் அடைந்து கிடக்கும் நாசிக்கும் துர்க்கந்தத்துக்கும் அளவு கிடையாது. இவற்றையெல்லாம் பற்றிச் சொல்லிச் சொல்லிப் பொதுமக்களுக்குப் போதும் போதும் என்றாகிவிட்டது. திருத்த முடியாத விஷயத்தைப் பற்றிப் பேசிப் பயனில்லை என்று சகித்து வருகிறார்கள்.

இன்று பாரதம் உள்ள நிலையில் எந்தக் காரியத்தைச் சர்க்கார் எடுத்துக் கொண்டாலும் திறம்பட நடத்த முடிவதில்லை. இந்த உண்மை சர்க்கார் மேற்பார்வையில் நடக்கும் தொழில் ஸ்தாபனங்களின் நிர்வாகத்திலிருந்து உறுதியாகிறது. இந்த வேளையில் சென்னை சர்க்கார் பள்ளிக்கூட பாட புத்தகங்களையும் தாங்களே வெளியிடப் போவதாக அறிவித்திருக்கிறார்கள்.

இதை நமது கல்வி மந்திரி அவர்கள் சென்னை சட்டசபைகளில் அறிவித்திருக்கிறார்.

சென்ற வாரம் 'லிப்கோ' கம்பெனியார், பதிப்பித்த அறுபத்து நான்கு நூல்களின் குறைந்த விலைப் பதிப்புகளின் வெளியீட்டு விழா டாக்டர் சி. பி. ராமசாமி அய்யர் அவர்கள் தலைமையில் நடைபெற்றது.

அந்த விழாவிலே ராஜாஜி அவர்களும் டாக்டர் சி. பி. அவர்களும் பள்ளிக்கூடப் பாட புத்தகங்களைச் சர்க்கார் வெளியிட வேண்டாம் என்று மிக வன்மையாக எச்சரிக்கை செய்திருக்கிறார்கள்!

ஒரு வேளை பாட புத்தகக் கமிட்டிகளில் லஞ்ச ஊழல்கள் மிகுந்திருப்பதால் சென்னை சர்க்கார் பள்ளிக்கூட பாட புத்தகங்களைத் தாங்களே போடத் தீர்மானித்திருக்கலாம் என்று ராஜாஜி ஊகித்துச் சொன்னார்.

ஆனால் அதற்காக, பாட புத்தகப் பிரசுரத் தொழிலைச் சர்க்காரே எடுத்துக் கொள்வது நீதியாகாது.

பாரத நாட்டிலே, வேலை வாய்ப்புக்கள் மிகச் சொற்பமாக இருக்கும் இந்நாட்களில் ஏதோ ஒரு சிலர் பாடபுத்தகப் பிரசுரத் தொழிலில் ஈடுபட்டு ஜீவனம் செய்து வருவதை ஒரே அடியாக அழிப்பது சர்க்காருக்கு நியாயமாகாது. பாட புத்தகக் கமிட்டியில் லஞ்ச ஊழலிருந்தால், அத்தகைய அங்கத்தினர்களை எடுத்து விட்டு லஞ்சத்துக்கும் மற்ற சபலத்துக்கும் இடம் கொடுக்காத நபர்களை அங்கத்தினர்களாக நியமித்துச் சீர்திருத்துவதே அறிவுடைமையாகும்; சர்க்காரின் கடமையுமாகும்.

கேரள சர்க்கார், ஊழல் மலிந்த பள்ளிக்கூட நிர்வாகத்தைத் தாங்கள் எடுத்துக் கொண்டு நிர்வகிக்கப் போவதாகச் சொன்னபோது, தங்கள் கம்யூனிஸக் கொள்கைகளை மாணவர்களுக்குப் போதிக்க வழி செய்கிறார்கள் என்று காங்கிரஸ்காரர்களும் மற்றவர்களும் குற்றம் சாட்டினார்கள்!

சென்னையில் இன்றுள்ள காங்கிரஸ் சர்க்கார் இந்தக் காரியத்தைச் செய்தால், நாளை வரும் வேறொரு கட்சியினர் இந்தக் காரியத்தைத் தங்கள் கட்சிக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொள்ள மாட்டார்களா?

நமது கல்வி மந்திரி "முதல் மூன்று வகுப்புக்களுக்குத்தான் பாட புத்தகம் போடப் போகிறோம். அதில் தோல்வியடைந்து விட்டால் விட்டுவிடப் போகிறோம். இதில் ஒன்றும் விசேஷ சட்டதிட்டம் கிடையாது" என்று சொல்லி இருக்கிறார்.

இன்றைய சர்க்கார் தோல்வியடைந்து விட்டால், இது என்றென்றைக்கும் முடிந்துபோன காரியமாகாது. அடுத்தாற்போல் வரும் வேறொரு கட்சி சர்க்கார் 'காங்கிரஸ் சர்க்கார் செய்து காட்டியதை வெற்றிகரமாக நாங்கள் செய்து காட்டுகிறோம்!' என்று ஆரம்பிக்கத்தான் செய்வார்கள்.

ஒருவித போட்டியு மில்லாமல் எந்தத் தொழில் நடத்தப்பட்டாலும் அது வர வர கெட்டுத்தான் போகும். தற்போது பல புத்தக ஆசிரியர்கள், பதிப்பாளர்கள், அச்சகத்தார் தங்கள் பிரசுரங்களுக்குப் பல்வேறு ஜில்லாக்களிலும் இடம் பெற்று வருகிறார்கள். இதனால் பிரசுரத் தொழில் ஓரளவு நடைபெற்று வருகிறது. சர்க்கார் பாட புத்தகப் பிரசுரத் தொழிலைச் சமுதாயமாக்கியவுடன் போட்டி அற்றுப் போகும்.

பொதுவாக, பள்ளிக்கூட பாடபுத்தகங்கள், பாடங்கள் இவை எப்பொழுதும் கல்வியாளர்கள் கையிலேயே இருக்க வேண்டும் என்று முடிவு செய்ய வேண்டுமே தவிர இவற்றில் சர்க்கார் பிரவேசிக்கக் கூடாது!

தமிழில் போதிக்கும் கொள்கைக்கும் ஆங்கில புத்தகங்களை உபயோகப்படுத்துவதற்கும் மாறுபாடு ஒன்றுமில்லை. விஞ்ஞானத்தில் முன்னணியில் நிற்பவர்களின் ஆங்கிலபுத்தகங்களைத்தான் ஆசிரியர்களும் மாணவர்களும் உபயோகிக்க வேண்டும்.

போதனை முறை தமிழில் இருக்க வேண்டுமே தவிர அந்த போதனை விளக்கத்தை உதவியாக வைத்துக் கொண்டு உயர்தர மூல புத்தகங்களைப் படிப்பதில் யாதொரு ஆட்சேபணையுமில்லை. சர்வகலாசாலைப் படிப்பில் ஆங்கில பாஷை படிப்பும் கட்டாயம் சேர்ந்திருக்கவே வேண்டும் என்பது தீர்மானம். ஆனபடியால் ஆங்கில புத்தகங்களைப் பகிஷ்கரிக்க வேண்டியதில்லை.

இரண்டாந்தர விஞ்ஞான ஆசிரியர்களைக் கொண்டு மொழிபெயர்க்கப்பட்ட புத்தகங்களைப் படித்தால் மாணவர்கள் அதிக தேர்ச்சி அடைய மாட்டார்கள். சர்வகலாசாலையில் விஷயங்களை விளக்குவது தமிழின் மூலமாக இருந்தபோதிலும் படிப்பதும் ஆராய்ச்சி செய்வதும் ஆங்கில புத்தகங்களைக் கொண்டு தான் நடைபெற வேண்டும்.

ஆங்கிலத்தில் எழுதப்பட்டு, தற்போது உபயோகத்தில் உள்ள புஸ்தகங்களைத் தமிழில் மொழிபெயர்ப்பதற்காக ஆட்களைச் சேர்த்துப் பணம் செலவழிக்க வேண்டிய அவசியமில்லை. அப்படிச் செலவழித்தாலும் இரண்டாந்தர ஆசிரியர்களைக் கொண்டு மொழிபெயர்ப்புப் புத்தகங்களை உண்டாக்கித் தருவது விஞ்ஞான அறிவு வளர்ச்சிக்காவது, விஞ்ஞான படிப்புக்காவது வழியாகாது.

# பெவன் போட்ட 'பல்ட்டி'!

**பி**ரிட்டிஷ் தொழிற் கட்சியினரில் சிலர் அணுகுண்டு - ஜலஜ குண்டுகள் உற்பத்தியை நிறுத்த வேண்டும் என்று சொல்லி வந்தனர். எந்த வல்லரசு இதற்கு இணங்கினாலும், இணங்காவிட்டாலும் பிரிட்டன் முன்னணியில் நின்று தார்மிக வழியை உலகுக்குக் காட்ட வேண்டும். இதுவே தொழிற்கட்சியின் லட்சியம் என்று பல மகாநாடுகளில் கூறி வந்தனர். இந்தக் கொள்கைக்குத் தலைவராக பெவன் விளங்கி வந்தார். இந்தக் கொள்கையைப் பற்றிப் பேசப் பேசத் தொழிற்கட்சியின் செல்வாக்கு நாட்டில் பெருகி வந்தது.

அதிகார பீடத்திலிருக்கும் கன்ஸர்வடிவ் கட்சி எகிப்து மீது பைத்தியக்காரத்தனமாகச் சென்ற ஆண்டு போர் தொடுத்து வேண்டிய அளவு கெட்ட பெயர் சம்பாதித்துக் கொண்டு விட்டது. இதன் காரணமாகவும் பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் செல்வாக்குப் பெருகியது.

அடுத்த தேர்தலில் தொழிற்கட்சி பதவிக்கு வரலாம்; அது வெற்றி பெறுவது பெரும்பான்மையும் உறுதி என்ற அளவுக்கு பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் செல்வாக்கு நாட்டில் பெருகியது.

இப்படியொரு சூழ்நிலை ஏற்பட்டுள்ள போது, பொதுவாக பிரிட்டனில் அடுத்த தொழிற்கட்சி மந்திரிசபை ஏற்பட்டால் பெவன்தான் வெளிவிவகார மந்திரியாக நியமிக்கப்படுவார் என்றும் பேசிக்கொள்ளத் தலைப்பட்டனர். ஏனெனில் பெவன்தான் பல வெளிநாடுகளுக்கெல்லாம் சுற்றுப் பிரயாணம் செய்து தொழிற்கட்சியின் வெளிநாட்டுக் கொள்கையை அவ்வப்போது நிர்ணயித்து வந்தார். இந்நிலையில் சென்ற அக்டோபர் மாதம் பிரைட்டன் என்ற ஊரில் தொழிற்கட்சி மகாநாடு நடைபெற்றது! அந்த மகாநாட்டில்தான் பெவன் தமது மகத்தான, அதிஅற்புத குட்டிக்கரண வித்தையைச் செய்து காண்பித்தார்!

"ஜலஜ குண்டுகளை விட்டொழிப்பதற்கில்லை. அந்தக் குண்டுகளை விட்டுத் தொலைத்தால் உலக அரங்கிலே நமக்குச் செல்வாக்கு இருக்காது; மதிப்பிருக்காது! ஜலஜ குண்டுகளை விட்டொழித்துவிட்டு, அன்னிய வல்லரசுகள் கூடியுள்ள மகாநாட்டுக்குப் போவது நிர்வாணமாகப் போவதற்கு ஒப்பாகும்!" என்று பேசியிருக்கிறார்.

இப்படி அவர் பேசும்போதே கூட்டத்தில் பெரும் எதிர்ப்பு ஏற்பட்டது. அங்கத்தினர் பலர் அவர் பேச்சைக் "குப்பை" "கூளம்" என்று கூறித் தங்கள் கண்டன உணர்ச்சிகளைத் தெரிவித்தனர். இருபது நிமிஷங்களுக்கு மேல் ஒரே குழப்பம் நிலவியது!

மொத்தத்தில் பிரிட்டிஷ் தொழிற்கட்சியின் போக்கு பிரிட்டனில் பெரும் அதிர்ச்சியை உண்டாக்கி யுள்ளது.

"மற்ற வல்லரசுகள் பின்பற்றினாலும் சரி, பின்பற்றாவிட்டாலும் சரி, தர்ம நியாயமான




"நான் நிர்வாணமாகத்தான் சென்றேன் அப்பனே, வெற்றியுடனும் திரும்பினேன்" —காந்தி

Courtesy : Daily Mirror

முறையில் நடந்து கொள்வதே சரியான வழி. இந்த எண்ணத்தைக் கொண்டு பிரிட்டன் தன் அணுகுண்டு ஜலஜ-குண்டு சோதனைகளை நிறுத்த வேண்டும்! உற்பத்தியை நிறுத்த வேண்டும்! இதுவே தார்மிக வழி; பொருளாதார வழி. ராஜதந்திரமான வழியும் கூட!" என்று இன்று பிரிட்டனில் பல்லாயிரக்கணக்கான பேர்கள் எண்ணுகிறார்கள்.

'நியூ ஸ்டேட்ஸ்மன்' என்ற பிரபல பிரிட்டிஷ் பத்திரிகையில் ஜே. பி. பிரிஸ்ட்லி என்ற புகழ் பெற்ற மேதாவி இந்தக் கருத்தை வலியுறுத்தி எழுதி யிருக்கிறார்:

"உலகில் ஏதாகிலும் ஒரு நாடு, விஷகுண்டு உற்பத்தி என்னும் சூதாட்டத்தில் கலந்து கொள்ளக் கூடாது என்றால் அது பிரிட்டன் தான். வல்லரசுகள் மகாநாட்டுக்கு மந்திரிகளை நிர்வாணமாக அனுப்பக் கூடாது என்று சொல்லப்படுகிறது. ஆனால் மகாநாட்டுக்கு நிர்வாணமாக வந்துள்ள மந்திரியைப் பார்த்து அடிப்படை மானுட தர்மம் இன்றைய தினம் அடைந்துள்ள பரிதாப நிலையைப் பற்றிச் சற்றுச் சிந்திக்க உதவும்!" என்று ஜே. பி. பிரிஸ்ட்லி எழுதி யிருக்கிறார்.

இந்தக் கட்டுரையை ஆதரித்துப் பெட்ராண்டு ரஸ்ஸல் என்ற அறிஞரும் இன்னும் பலரும் எழுதி யிருக்கிறார்கள்!

விக்கி என்ற உலகப் பிரசித்திபெற்ற கார்ட்டூன் சைத்திரிகர் பெவன் அவர்களுக்குச் கடச்கடப் பதில் கொடுத்திருக்கிறார்!

அதை மேலே பார்க்கலாம்.

1954-ம் வருஷம் டிசம்பர் மாதம் அமெரிக்காவுக்கு ராஜாஜி சொன்ன யோசனை பிரிட்டனில் நல்ல பலம் பெற்று வருகிறது என்பதையே இவையெல்லாம் காட்டுகின்றன.

"ருஷ்யா பின்பற்றினாலும் சரி, பின்பற்று விட்டாலும் சரி அமெரிக்கா அணு-ஜலஜ குண்டுகளைத் தூரக் கடலில் எறிந்து விட்டு, இனி இந்தப் பயங்கரக் குண்டுகளைச் செய்யப் போவதில்லை என்று உலகுக்கு அறிவிக்க வேண்டும். இந்த ஆத்ம பலம் அமெரிக்காவுக்கு உண்டு. அதைப் பயன்படுத்த வேண்டும்!" என்றார். இந்தக் கொள்கை பிரிட்டனில் பரவ ஆரம்பித்து விட்டது.

# நிதிக் கமிஷன் சிபாரிசுகள்

இரண்டாவது நிதிக் கமிஷன் சிபாரிசுகள் வெளியாகி யிருக்கிறது. இந்த நிதிக் கமிஷன் சிபாரிசுகளைப் பொதுவாக எல்லாரும் மிக உற்சாகமாக வரவேற்றிருக்கிறார்கள். இந்த நிதிக் கமிஷனுக்குத் திரு க. சந்தானம் தலைவராகப் பணியாற்றி பலருக்கும் திருப்தி யளிக்கும் வகையில் தமது சிபாரிசுகள் செய்தமைக்குத் தமிழ் மக்கள் பெருமைப்பட வேண்டும்!

இந்த நிதிக் கமிஷன் செய்த பணி என்ன?

மத்திய சர்க்கார் பல வரிகள் விதித்து மக்களிடமிருந்து பணம் வசூலித்து வருகிறார்கள். உதாரணமாக, வருமான வரி, கலால் வரி முதலியன யாவும், மத்திய சர்க்காருக்கே போகிறது. ஆனால் மத்திய சர்க்கார் எந்த எந்த ராஜ்யத்துக்கு எவ்வளவு சத விகிதம் பகிர்ந்து அளிக்க வேண்டும், எந்த அடிப்படையில் பகிர்ந்தளிக்க வேண்டும் என்று நிர்ணயிக்க ஐந்து வருஷத்துக்கொரு முறை நிதி விஷயம் தெரிந்த அறிவாளிகளைக் கொண்ட ஒரு கமிஷன் நியமிப்பது வழக்கம். சென்ற வருஷம் திரு சந்தானம் தலைமையில் ஒரு கமிஷன் நியமிக்கப்பட்டது. இந்தக் கமிஷன் அங்கத்தினர்கள் ஒவ்வொரு ராஜ்யமாகப் பிரயாணம் செய்து அவ்விடத்திய நிதி நிலைமைகளைப் பரிசீலனை செய்து, ஒரு அறிக்கை தயாரித்தார்கள். வருமான வரியில் இது காறும் ராஜ்யங்களுக்கு ஐம்பத்தைந்து சத விகிதமே ஒதுக்கி யிருந்தது. நிதிக் கமிஷன் அறுபது சத விகிதம் ஒதுக்கும்படி சிபாரிசு செய்துள்ளது.



திரு கே. சந்தானம்

அதுவும் ஒவ்வொரு ராஜ்யத்துக்கும் இந்த வருமான வரியை வினியோகிக்கும் போது அந்தந்த ராஜ்யத்தின் ஜனத் தொகையை 90 சதவிகிதமாகவும் வசூலை 10 சத விகிதமாகவும் அடிப்படையாகக் கொண்டு விநியோகிக்கும்படி சிபாரிசு செய்துள்ளது. ஜனத்தொகை அதிகமாக உள்ள கேரளம், சென்னை போன்ற ராஜ்யங்களுக்கு நிதிக் கமிஷனின் இந்தச் சிபாரிசினால் சற்று அதிகத் தொகை கிடைக்கும்.

எல்லா வகையிலும் ராஜ்யங்களுக்கு அதிக வருமானத்துக்குக் கமிஷன் ஏற்பாடு செய்துள்ளது. அந்தத் தொகைகளைச் சிக்கனமாகவும் பெருவாரியான மக்களுக்குப் பயன் அளிக்கும் வகையில் செலவழிப்பது அந்தந்த ராஜ்ய சர்க்கார்களின் சாமர்த்தியத்தையும் திறமையையும் பொறுத்த விஷயமாகும்.

## அந்தோ, பரிதாபம் !

கட்சிக் கொள்கைகள்

பாட புத்தகங்களைச் சர்க்கார் வெளியிடும் திட்டம்

# அருள் வாக்கு

சர்ச்சைகளில் புகாமல், சில வார்த்தைகளின் மூலங்களை நாம் ஆராய்ந்தால், ஒரு காலத்தில் உலகம் பூராவிலுமே ஒரே கலாசாரம், ஒரே நாகரிகம் நிலவி வந்திருக்கிறது என்பது புரியும். அவை க்ஷீணித்துப் போய்ப் புது கலாசாரமும், நாகரிகமும் உலகின் சில பகுதிகளில் தோன்ற ஆரம்பித்தன. ஆனால், வேறுபகுதிகளில் பழைய நாகரிகம் அப்படியே இருந்திருக்கிறது. அதற்குத்தான் ஸனாதன தர்மம் என்று பெயர். கிறிஸ்துவ மதம் ஏற்படுவதற்கு முன்பு, வேதத்தில் வர்ணிக்கப்படும் 'மைத்ரா வருணம்' ஐரோப்பாவின் சில பகுதிகளில் நிலவியதாக நம்ப ஆதாரமிருக்கிறது. சில நாடுகளில் மன்னர்கள் முஸ்லிம்களாயிருந்த போதிலும், புது அரசன் பட்டத்துக்கு வரும்போது ஹிந்து சாஸ்திரங்களில் விதிக்கப்பட்டுள்ள சம்பிரதாயங்களே பின்பற்றப்படுகின்றன. 'அதோ இருப்பது' ('தத்') என்று வேதங்கள் முறையிடுவது ஈசுவரனைத்தான். வேதாந்த தத்துவம் என்பது ஈசுவர சொரூபத்தைஅறியும் இறுதியான முக்திநிலையேயாகும். கட்டைவிரல் ஆள்காட்டிவிரல்இரண்டையும் நுனியில் ஒன்றாகச் சேர்ப்பது ஞானமுத்திரை. தொலைவில் இருப்பது போல்தோன்றுவது உண்மையில் நம்முள்ளேயேதான் இருக்கிறதுஎன்பதையே அந்தமுத்திரைகாட்டுகிறது. அடிவானத்தில் பூமியும், வானமும் ஒன்றுசேருவதைப்போல நமக்குத் தோன்றுகிறது. அந்த இடத்தை நோக்கி நடந்து சென்றுகொண்டேயிருந்தால், அந்தச்சேருமிடம் பின்னால் போய்க்கொண்டேயிருக்கும்; முடிவில் புறப்பட்ட இடத்துக்கேதான் வந்து சேருவோம். ஒரு சிறுகதை சொல்லுகிறேன். உலகிலேயே மிகவும் பெரிய மனிதனைத்தான் மணம் செய்து கொள்ளுவது என்று ஒரு பெண் தீர்மானித்தாளாம். அரசன்தான் மிகப்பெரிய மனிதனென்று அவளுக்குத் தோன்றியது. ஆனால், அரசன் ஒரு சன்யாசியிடம் மிகுந்த மரியாதையுடன் நடந்து கொள்வதைப் பார்த்தாள். அப்படியானால் அரசனைவிட சன்யாசி தான் பெரியவராயிருக்க வேண்டுமென்று நினைத்தாள். இப்படியாக இந்தக் கதை நீண்டுகொண்டே போகிறது. கடைசியில் தன் பெற்றோர்கள் நிச்சயித்த பையனையே அவள் மணந்துகொண்டாள். அதோ இருப்பது ('தத்')என்பதுதான் இறுதிஉண்மை. ஆயினும்'இதோ' 'இதோ' ('இதம்') - என்பது மூலம் இல்லாமல் இருக்க முடியாதென்று உபநிஷத்துக்கள் கூறுகின்றன. மண்ணிலிருந்து செடி முளைக்கிறது. அதற்கு ஊட்டம் கொடுப்பது மண்தான். முடிவில் அது பட்டுப் போகும்போது மண்ணிலேயே சேர்ந்துவிடுகிறது. நமது ஐம்புலன்களுக்கெட்டுவதெல்லாம் 'இதோ' ('இதம்') - புலன்களுக்கு எட்டுபவைகளுக்கும் மூலகாரணமாயிருப்பது நம்முள் இருக்கிறது. மின்சார விளக்குகளில் பச்சை, சிவப்பு என்ற பல வர்ணங்கள் இருக்கின்றன. ஆனால் அதைப் பிரகாசிக்கச் செய்யும் மின்சாரம் ஒன்றேதான். அதைப்போலவே, நம்முள் இருக்கும் ஈசுவரன், தன்னில் அடங்கியுள்ள எல்லாப் பொருள்களையும், நமது புலன்கள், அறிவு என்ற பலகணிகளின் வழியாகப் பார்க்கிறார். 'இதோ' என்பதின் மூலம் அறிவு. இது தனிப்பட்டவர்களின் மனத்தைப் பற்றியது போல் தோன்றினாலும் அது பரிபூரணமானது. சர்வ வியாபகமானது. எல்லா உயிரினங்களின் மூலமும் இந்த ஞானத்தில்தான் உறைந்திருக்கின்றன. அதுதான் வேதாந்தத்தில் கூறும் 'அதோ இருப்பது' ('தத்'). கீதையும் இதைத்தான் சொல்லுகிறது.

– ஸ்ரீ சங்கராச்சாரியார், காஞ்சிகாமகோடிபீடம்

# உலக புலால் மறுத்தல் மகாநாடு

கொல்லான் புலாலை மறுத்தானைக் கைகூப்பி யெல்லா வுயிருந் தொழும்.

கொல்லா விரதம் பூண்டு, புலால் உண்ணாமல் இருப்பவனை இவ்வுலகில் உள்ள உயிர்கள் அனைத்தும் கைகூப்பித் தொழும் என்பது தெய்வப் புலவர் வள்ளுவர் வாசகம்.

அஹிம்ஸா தர்மத்தை அநுசரிப்பதற்காக மட்டுமல்லாமல் உடல் நலத்துக்கும், அறிவு வளர்ச்சிக்குமே காய்கறி உணவுதான் ஏற்றதென்று உலகப் பிரசித்தி பெற்ற பல டாக்டர்கள் விஞ்ஞானிகள் பேரறிஞர்கள் முதலானோர் கூறுகிறார்கள்.

நம் நாட்டுப் பெரியோர்களான பீஷ்மர், மனு இவர்கள் முதல் காந்திஜி வரையில் பல ஞானிகள் சைவ உணவே மனிதனுக்கு உகந்தது என்று வற்புறுத்தி வந்திருக்கிறார்கள். வெளி நாட்டிலும பைதாகொரஸ், ப்ளுடார்க் முதல். சமீபகாலத்தில் பிரசித்தி பெற்று வாழ்ந்த டால்ஸ்டாய் வரையில் பல பெரியோர்கள் காய்கறி யுணவின் அவசியத்தை எடுத்துக் கூறியிருக்கிறார்கள். இன்று மிகவும் புகழ் பெற்றிருக்கும் பல மேதைகள் டாக்டர் ஆல்பர்ட் ஷ்வைட்ஸர் போன்றவர்கள் காய்கறி யுணவுதான் தேகாரோக்கியத்துக்குச் சிறந்ததென்று ஒப்புக்கொண்டு, கடைப்பிடித்தும் வருகிறார்கள்.

காய்கறி யுணவின் சிறப்பை விளக்குவதே உலக புலால் மறுத்தல் மகாநாட்டின் முக்கிய நோக்கமாகும். இந்த மகாநாட்டில் கலந்து கொள்ள பல தேசங்களிலிருந்து டாக்டர்களும், விஞ்ஞானிகளும் நம் நாட்டுக்கு வந்திருக்கிறார்கள். அவர்கள் சைவ உணவின் தன்மையையும், அது எவ்வாறு மாமிச உணவைவிடச் சிறந்ததென்பதையும் தங்களுடைய பிரசங்கங்களில் விளக்குவார்கள்.

எல்லோரும் காய்கறி உணவு சாப்பிட ஆரம்பித்து விட்டால் உலகில பஞ்சம் ஏற்பட்டுவிடும் என்று சிலர் பயமுறுத்தி வருவதைப் பார்க்கிறோம். அப்படி நேராது என்பதற்குப் பல அத்தாட்சிகள் இருக்கின்றன.

ஒரு ஏக்கர் நிலத்தில் காய்கறி உணவு மாமிச உணவைவிடப் பல மடங்கு அதிகமாக உற்பத்தி செய்ய முடியும் என்பதை ஐக்கிய அமெரிக்காவின் விவசாய இலாகா புள்ளி விவரங்களுடன் வெளியிட்டிருக்கிறது இங்கிலாந்தில் உள்ள தேசிய விவசாயிகள் சங்கமும் இதை ஒப்புக் கொண்டிருக்கிறது.

புலால் மறுத்தலின் அவசியத்தை உணர்ந்து உலகுக்கு அறிவித்த நாடு பாரத நாடுதான். நம் நாட்டில் பரம்பரைபரம்பரையாகப் புலால் உணவை விலக்கி வருபவர்கள், இது ஒரு உத்தமமான காரியம் புனித கைங்கர்யம் என்பதற்காகவே செய்து வருகிறார்கள். இவர்களுக்கும் இந்தப் பதினைந்தாவது உலக புலால் மறுத்தல் மகாநாடு ஒரு விழிப்பை ஏற்படுத்தும் என்று எதிர்பார்க்கிறோம்.

ராஷ்டிரபதி ராஜேந்திர பிரசாத் அவர்கள் இந்த மகாநாட்டை ஒட்டித் தயாரிக்கப்பட்டிருக்கும் மணிமலருக்கு அனுப்பியிருக்கும் செய்தியில் "உணவைப் பற்றி எந்த அளவுக்குச் சிந்திக்க வேண்டுமோ அந்த அளவுக்கு நாம் சிந்திப்பதில்லை; நாம் சாப்பிடுவதற்காக வாழ்கிறோமே தவிர வாழ்வதற்காக சாப்பிடுவதில்லை என்று எண்ணத் தோன்றுகிறது. உணவும், உணவுப் பழக்கங்களும் நமது அறிவையும் பண்பாட்டையும் உருவாக்குகின்றன. நமது உடல் ஆரோக்கியத்துக்கும், அமைப்புக்கும் ஏற்ற உணவு காய் கறி உணவுதான். எளிய வாழ்க்கைக்கும் உயர்ந்த சிந்தனைக்கும் ஏற்ற உணவு காய்கறி உணவுதான்" என்று கூறியிருக்கிறார்.

பம்பாயில் நவம்பர் ஒன்பதாம் தேதி முதல் பன்னிரண்டாம் தேதி வரை உலக புலால் மறுத்தல் மகாநாடு நடைபெற்றது. இந்த மகாநாட்டையும் நமது ஜனாதிபதி அவர்கள்தான் திறந்து வைத்தார்.

மகாநாட்டின் அகில இந்திய வரவேற்புக் கமிட்டியின் தலைவரான ஸ்ரீமதி ருக்மிணி தேவி அவர்கள் மகாநாட்டின் நோக்கத்தைத் தெளிவாகத் தமது தலைமை உரையில் எடுத்துக் கூறியிருக்கிறார்.

சென்னையில் நவம்பர் 28, 29, 30 மூன்று தேதிகளிலும் இந்த மகாநாடு நடைபெறப் போகிறது. மௌண்ட்ரோடில் உள்ள சட்டசபை மண்டபத்தில் நடைபெறும் இந்த மகாநாட்டில் தமிழ் நாட்டில் பிரசித்தி பெற்ற டாக்டர்களும், பேரறிஞர்களும் கலந்து கொள்கிறார்கள்.

இருபத்தொன்பதாம் தேதி வெள்ளிக்கிழமை மாலை இந்த மகாநாடு கிண்டி காந்தி மண்டபத்தில் பிரார்த்தனைக் கூட்டமாகக் கூடுகிறது.

இந்த மகாநாட்டை ஒட்டி ராஜாஜி மண்டபத்தில் ஒரு பொருட்காட்சி நடைபெறுகிறது. இவை அனைத்திலும் சென்னை நகரப் பெருமக்கள் கலந்து கொண்டு பெரும் பயனடைவார்கள் என்று எதிர்பார்க்கிறோம்.

### அடிமையின் காதல்

காதலுக்காக அடிமை அரீப் புரிந்த தியாகத்தை விவரிக்கும் 'அடிமையின் காதல்' என்னும் பரிசுக் கதையில் வரும் ஒரு காட்சியை இந்த இதழ் அட்டையில் வண்ண ஓவியமாக வழங்கி யிருக்கிறார் ஓவியர் வினு.

# பாண்ட்ஸ் கோல்டு க்ரீம்

## உபயோகிக்கும் பெண்மணியை

# —அவன் விரும்புகிறான் என்பதை அவன் மறைப்பதில்லை

முகத்தைக் கழுவியபின், எப்பொழுதும், அற்புத குணம் வாய்ந்த பாண்ட்ஸ் கோல்டு க்ரீமை உபயோகியுங்கள். இது சருமத்தைப் பாதுகாக்கும் இயற்கை எண்ணெய்களின் நஷ்டத்திற்கு ஈடு கட்டி, உங்கள் சருமத்தைப் புதுமையுடனும் மாசற்றதாயும் வைக்கும். பாண்ட்ஸ் கோல்டு க்ரீம் சருமத் துவாரங்களில் ஊடுருவிச் சென்று அழுக்கை அகற்றி, உங்கள் சருமத்தை முற்றிலும் சுத்தமாக வைககும்.

**இலவச புஸ்தகம்**

அழகுபற்றிய குறிப்புகள் கொண்ட Lovelier with Pond's என்ற எமது புத்தகத்தை வரவழையுங்கள்.
பீ. ஓ. பாக்ஸ் நம்பர் 1012
டிபார்ட்மெண்ட் நீ. 28 ஸீ. பம்பாய் 1
என்ற விலாசத்திற்கு எழுதவும்




சீஸ்ப்ரோ - பாண்ட்ஸ் இன்கார்ப்பொரேடெட்
(வரையறுக்கப்பட்ட பொறுப்புடன் யு. எஸ். அமெரிக்காவில் இணைக்கப்பெற்றது)

# வள்ளுவர் வாசகம்

ராஜாஜி

## 5

நெறி தவறாமல் குடும்ப வாழ்க்கை ஒருவன் நடத்தி வந்தால், அதுவே அவனுக்கு எல்லாப் பயனையும் தரும். துறவியாகித் தவம் செய்ய வேண்டும் என்றில்லை.

> **அறத்துஆற்றின் இல்வாழ்க்கை**
> **ஆற்றின் புறத்துஆற்றில்**
> **போஒய்ப் பெறுவது**
> **எவன்.**

இல்லறத்தைச் சரியாகத் தருமநெறியில் நடத்தி விட்டால், துறவு பூண்டு அதிகமாக அடையும் பயன் ஒன்றில்லை.

[அறத்து ஆற்றின் - தரும மார்க்கத்தில். இல்வாழ்க்கை ஆற்றின் - இல்வாழ்க்கை நடத்தினால். புறத்து ஆற்றின் - துறவு மார்க்கத்தில். பெறுவது எவன் - பெறுவது ஒன்றுமில்லை.]

நெறி தவறாத இல்லறத்தில் கிடைக்காத பயன், துறவறத்தில் ஒன்றுமில்லை.

• • •

அதிகப் பயன் இல்லை என்பது மட்டுமல்ல, மேன்மையும் இல்லை. முறைப்படி இல்வாழ்க்கை நடத்துவது, மற்ற விரதங்களைவிட மேம்பட்டதே யாகும்.

> **இயல்பினான் இல்வாழ்க்கை**
> **வாழ்பவன் என்பான்**
> **முயல்வாருள் எல்லாம்**
> **தலை.**

**இயல்பினான்** : முறைப்படி, அதற்கு இட்ட நியதியினின்று பிறழாமல். **என்பான்** : முறைப்படி இல்லறம் நடத்துகிறான் என்று எல்லாரும் சொல்லும்படி நல்ல பெயர் சம்பாதித்தவன். **'முயல்வது'** என்றால் தவம் முதலிய முயற்சிகளை எடுப்பது. இந்த முயற்சிகள் கடினம் என்பது குறிப்பாகக் காட்டப்படுகிறது.

இல்லறத்தை முறைப்படி நடத்துவது எளிது என்று எண்ண வேண்டாம். துறவிகளின் நோன்பைப் போலவே, அதாவது பசி, காமம், குரோதம் முதலியவற்றை அடக்கி யாள்வதில் துறவிகள் எவ்வளவு வைராக்கியம் காட்ட வேண்டியதாகிறதோ அவ்வளவு, இல்லறத்தை நடத்துகிறவனும் தன்னுடைய கடமைகளைச் செலுத்துவதில் காட்டவேண்டியதாகிறது. தருமம் வழுவாமல் நடத்தப்படும் இல்லற வாழ்க்கையில் பெருந் தவமுயற்சி இருக்கிறது. துறவிகளுக்கு வேண்டிய ஆன்ம சக்தி நெறி தவறாத குடும்பஸ்தனுக்கும் வேண்டும். இல்லறமும் தவநிலைக்கு ஈடாகும்.

> **ஆற்றின் ஒழுக்கி**
> **அறன்இழுக்கா இல்வாழ்க்கை**
> **நோற்பாரின் நோன்மை**
> **உடைத்து.**

செய்ய வேண்டிய கடமைகளைக் குறைவறச் செய்தல் **'ஆற்றின் ஒழுக்கி'** என்பதில் அடங்கும். **'அறன் இழுக்கா'** என்றும் சொன்னது, நல்வழியினின்று பிறழாமல், அதாவது பாபம் ஏதும் செய்யாமல் இல்வாழ்க்கை நடத்த வேண்டும் என்பதற்காக.

சரியான முறையில், செய்யவேண்டியதை யெல்லாம் செய்தும், செய்யக்கூடாததை யெல்லாம் செய்யாமல் விலக்கியும், நடத்தப்படும் குடும்ப வாழ்க்கையில் துறவிகளின் தவப்பண்பெல்லாம் உண்டு. குடும்ப வாழ்க்கையும் ஒரு தவமே — சரியாக நடந்தால்.

• • •

அப்படிப்பட்ட குடும்பத் தலைவன் தேவர்களுக்குச் சமானமாவான்.

> **வையத்துள் வாழ்வாங்கு**
> **வாழ்பவன் வானுறையும்**
> **தெய்வத்துள் வைக்கப்**
> **படும்.**

வாழவேண்டிய முறையில் வாழும் இல்லறத்தான், தேவர்களுக்குச் சமானமாகக் கருதப்படுவான். **'வானுறையும்'** என்று நான்காவது சீரில் நிறுத்திப் பாடியிருப்பது, மேலோங்கி அடைந்த தெய்வ நிலையைக் காட்டுகிறது.



# வட்ட மேஜை

## அறிவு வளர்ச்சிக்குத் தடையா?

பாடபுத்தகங்களைச் சர்க்காரே பிரசுரிப்பதால், ஏற்படக் கூடிய நிலைமைகளைச் சுட்டிக் காட்டியிருக்கின்றார்கள் ராஜாஜி, சி. பி. போன்ற அறிஞர்கள். சர்க்கார் இதுபோன்ற தனியார் நடத்தும் தொழிலை மேற்கொள்வதால் புத்தகப் பிரசுரக் கம்பெனிகள், அச்சுக் கூடங்கள் போன்ற இடங்களில் பலர் வேலையிலிருந்து நீக்கப்படுவார்கள். புத்தகம் வாங்கி விற்பனை செய்யும் சிறிய கடைக்காரர்களின் நிலைமை மோசமாகும். பிரசுரகர்த்தர்களுக்குப் புத்தகம் எழுதியும், ப்ரூப் பார்த்தும் ஊதியம் பெற்று வரும் அனேக ஏழை ஆசிரியர்களுக்கும் துன்பம் நேரும். இதனால் லஞ்ச ஊழலும் அதிகமாகும். ஆகையால் குழந்தைகளின் அறிவு வளர்ச்சிக்குத் தடை போட வேண்டாம்; வேலையில்லாத் திண்டாட்டத்தை மேலும் பெருக்க வேண்டாம் என்று கேட்டுக் கொள்ளுகிறேன்.

சென்னை - 6
12—11—57

கி. நாகராசன்

## மாஸ்கோவில் தமிழர்கள்

"கல்கி"யில் ஸ்ரீ சுந்தாவின் கட்டுரையைப் படித்தேன். லண்டனிலுள்ள தமிழர்களைப்பற்றி வெகு அழகாக எழுதி இருக்கிறார்:

நான் சமீபத்தில் சோவியத் யூனியனுக்குச் சென்றிருந்தேன். அங்கு மாஸ்கோவில் சுமார் எழுபது இந்தியர்களுக்குமேல் (இந்திய தூதுவர் காரியாலயத்திலிருப்பவர்களைத் தவிர) இருப்பதைப் பார்த்து மகிழ்ந்தேன். நண்பர் உம்ரணிகர் மூலம் அவர்களுடைய ஒரு கூட்டத்துக்கு நானும் என்னுடன் வந்த மதுரை நண்பர் சுந்தரமும் சென்று எல்லோரையும் சந்தித்தோம். அவர்களில் பெரும்பான்மையோர் அன்னிய மொழிப் புத்தக வெளியீட்டு நிலையங்களிலும் மற்றவர்கள் மாஸ்கோ வானொலி நிலையத்திலும் வேலை பார்த்து வருகிறார்கள்.

அன்னிய மொழி புத்தக வெளியீட்டு நிலையங்களில் அநேக தமிழர்கள் இருக்கிறார்கள். இந்த நிலையத்தின் நோக்கம் ரஷ்யப் புத்தகங்களைப் பிராந்திய மொழிகளிலும், பிராந்திய மொழிப் புத்தகங்களை ரஷ்ய மொழியிலும் மொழி பெயர்ப்பதே ஆகும். ஸ்ரீமான்கள் பூர்ணம் சோமசுந்தரம், சுப்பிரமணிய அய்யர், மணி, கிருஷ்ணமூர்த்தி ஆகிய பலர் வேலை பார்க்கிறார்கள். இவர்களுக்கு மாதம் 2500 ரூபிள் முதல் 5000 ரூபிள்கள் வரை சம்பளம் கிடைக்கிறது. அழகிய சிறு வீடுகள் கொடுத்திருக்கிறார்கள். அவைகளுக்கு வாடகை 120 ரூபிள்கள். தமிழிலிருந்து சில சிறுகதைகளை ரஷ்ய மொழியில் மொழி பெயர்த்திருக்கிறார் நண்பர் சோமசுந்தரம். இன்னும் சிலப்பதிகாரம் முதலிய காப்பியங்களை மொழி பெயர்க்கப் போகிறார். நண்பர் மணியின் கையில் டி. கே. சி.யின் கம்ப ராமாயணப் புத்தகத்தைப் பார்த்தேன். மாஸ்கோவிலும் எனது குருநாதர் டி. கே. சி.யின் புத்தகத்தைப் பார்க்கும் பாக்கியம் எனக்குக் கிடைத்தது. மாஸ்கோவில் சோமசுந்தரத்தின் இல்லத்தில் ரஸம், சாம்பாருடன் அருமையான தமிழ் விருந்தும் கிடைத்தது!

நண்பர் சோமசுந்தரம் பல ரஷ்யர்களுக்குத் தமிழ் போதிக்கிறார். ஒரு ரஷ்ய இளைஞர் இவருக்கு பகவத்கீதையின் ரஷ்ய மொழி பெயர்ப்பைத் தமிழ் கையொப்பத்துடன் பரிசாகக் கொடுத்திருக்கிறார். வெகு அழகிய புத்தகம். ஓம்காரத்துடன் ஆரம்பித்து அழகிய தெய்வங்களின் படங்களுடன் அச்சடித்திருக்கிறார்கள். தமிழ்நாட்டில் தெய்வப்படங்களைக் கொளுத்தும் காலத்தில் ரஷ்யாவில் தெய்வப் படங்களுடன் அழகிய பகவத்கீதையைப் பார்க்கும்பொழுது மனத்துக்கு ஆறுதல் ஏற்படுகிறது. கீதை அவர்களுக்காவது உபயோகப்படட்டும். துளசிதாஸ் ராமாயணம், காளிதாஸரின் கவிதைகள், மகாபாரதம் இவைகளை வெகு அக்கறையுடன் ரஷ்ய மொழியில் மொழிபெயர்த்திருக்கிறார்கள்.



1. தலையை வாரிக் கொண்டு......



2. பௌடர் டப்பாவைத் திறந்து......

நண்பர் சோமசுந்தரத்தைப் பல ரஷ்யர்கள் சைவ சித்தாந்தத்தைச் சொல்லித் தரும்படி கேட்கிறார்களாம். அவரிடம் அதற்கு வேண்டிய மூல நூல்கள் கிடையாது. இங்கிருந்து சைவ மடாதிபதிகளும், சிவ பக்தர்களும் அவருக்கு இந்த மூல நூல்களை அனுப்பினால், சைவ சித்தாந்தத்தை ரஷ்யர்களுக்குப் போதிக்கும் வாய்ப்பு ஒரு தமிழருக்குக் கிடைக்கும். தங்கள் பத்திரிகையின் மூலம் இந்தப் பணி செய்தால் தமிழும் சைவமும் மாஸ்கோவில் வளரும். வாழ்க தமிழ்!

திருச்சி
12-11-57 ஜி. சி. பட்டாபிராமன்

*ரஷ்யாவிலுள்ள தமிழ் அன்பரின் விலாசம் :*

Sri P. Somasundaram
House No. 1-8, Quarter No. 357.
Boroveskoye Shosse, Moscow.

## தாமதமும் தவிப்பும்

ஓர் உதவி பெறும் ஆரம்பப் பாடசாலையில் பல்லாண்டுகள் ஊழியம் புரிந்த பின்னர் 1-6-57-ல் உரிய வயதில் நான் ஓய்வு பெற்றேன். ஆனால் இவ்வளவு நாட்களாகியும் எனக்கு 'க்ஷேம நிதித் தொகை' இன்னும் பட்டுவாடா செய்யப்படவில்லை! அரசியலார் தரு மான்யத் தொகையைப் பெறுவதில் கால தாமதம் தவிர்க்கப்பட இயலாதாயினும், தபால் ஆபீசில் சேமிக்கப்பட்டிருக்கும், ஆசிரியர் நிர்வாகத்தினது தொகையாவது உடனடியாக அளிக்கப்பட வேண்டாமா? வீண் தாமதம் ஏற்படுவானேன்? ஓய்வுற்ற காலத்தில் உள்ளதைக் கொண்டு கால் வயிற்றுக் கூழோ, கஞ்சியோ குடிக்கவாவது, உரிய தொகை உற்ற காலத்தில் கிடைத்தாலன்றோ சாத்தியமாகும்? இத் தாமதத்தின் மூலம் ஆசிரியர் பெறுவது உதவியா அல்லது தண்டனையா என்பது விளங்கவில்லை. எனவே, இந்த 'க்ஷேம நிதி'ப் பட்டுவாடாவின் பொறுப்பை ஏற்றுள்ள கல்வி அதிகாரிகள் அனுதாபத்துடன் கவனித்து, தாமதத்தைத் தவிர்ப்பார்களாயின், அவர்கள் ஓய்வுபெற்ற ஆரம்ப ஆசிரியர்களது பாராட்டுதலுக்கும், மனமார்ந்த நன்றிக்கும் ஆளாவார்கள்.

தஞ்சை
10-11-57 ஓய்வு பெற்ற ஆசிரியர்

## மேட்டூர் அணை

திங்களின் 10-11-57 இதழின் அட்டைப் படம் கண்டேன். கூத்தனும் கூத்தியும் லலிதமாக அதில் காட்சியளிக்கும் நிலை கண்டேன். 'காதலாகி கசிந்து கண்ணீர் மல்கி' என்று என்றோ பாடின பட்டினத்துப் பிள்ளையின் பாடல் என் மனத்திடையே நல்லிடம் பெற்றது. இம்மாதிரியான நல்ல கருத்தை ஊன்றும் ஓவியங்கள் முகப்புப் படத்தில் முதலிடம் பெற்றால் கலை தழைக்கும். பக்தி பெருகும். அன்பு நிலவும். நிலை உயரும்.

தாயின் மேலாடையைத் தாங்காது எங்கே ஒடிந்து விடுமோ என்ற நிலையிலுள்ள இடுப்பும் கைகளில் காணும் லளிதமும், அன்பின் அடையாளமாகக் கரத்திலே தவழும் மலரும் எல்லோருடைய மனத்தையும் மலர வைக்கட்டும். அந்தத் தண்டை யணித் திருப்பாதங்கள் நம் மனத்தை விட்டு என்றுமே நீங்காது நிலைத்திருக்க அருள் புரியட்டும்!

மேட்டூர் அணை
7—11—57 ஆர். கே. சுந்தரம்

## ஜில்லா போர்டின் போக்கு

சேலம் ஜில்லா போர்டில் 31-10-57 அன்று பலருக்கு ஆசிரியர் வேலை கொடுத்தார்கள். அதில் பயிற்சி பெற்ற ஆசிரியர்கள் பலருக்கு ஆர்டர் வராமல் பயிற்சி பெறாதவர்களுக்கு ஆர்டர் வந்துள்ளது. இதன் மர்மம் என்ன என்று விளங்கவில்லை. இரண்டு ஆண்டு அரசாங்கம் ஆசிரியர்களுக்குப் பயிற்சி அளிப்பதின் நோக்கம் என்ன? இதுமாதிரி செய்யவா? இதைச் சம்பந்தப்பட்ட அதிகாரிகள் கவனித்து ஆவன செய்வார்களா!

சேலம்
7—11—57 பயிற்சிபெற்ற ஆசிரியர்



3. பௌடர் போட்டுக் கொண்டு......

4. வெளியே கிளம்பத் தயாராகிறாள் குழந்தை!
—போட்டோ : ஏ. வி. ராமமூர்த்தி

# நமது இறக்குமதி வர்த்தகம்

எம். எஸ். சிவஸ்வாமி

இந்தியாவின் ஏற்றுமதி வியாபாரத்தைப் பெருக்குவதற்காக மேற்கொள்ளப்பட்ட முயற்சிகளெல்லாம் கணிசமான அளவில் பயனளிக்கவில்லை என்பதையும் ஏற்றுமதி அதிகமாவதற்குப் பதிலாகக் குறைந்து வந்திருக்கிறது என்பதையும் சென்ற வாரம் பார்த்தோம். இறக்குமதி வியாபாரம் எந்த நிலையில் இருக்கிறதென்பதை இப்போது கவனிக்கலாம்.

சுதந்திர நாடாக இந்தியா ஆவதற்கு முன்பெல்லாம் இந்தியா முக்கியமாக மூலப் பொருள்களை வெளிநாட்டுக்கு அனுப்பி ஆலைகளில் உற்பத்தி செய்யப்பட்ட சாமான்களை இறக்குமதி செய்தது. நமக்குத் தேவைப்பட்ட பல சாமான்கள் அயல்நாட்டுத் தொழிற்சாலைகளில் உற்பத்தி செய்யப்பட்டு நமக்கு அனுப்பப்பட்டன. நம்முடைய வியாபாரத் தொடர்பும் பெருவாக இங்கிலாந்துடன்தான் இருந்தது. நம் வியாபாரத்தில் பெரும் பகுதியே அந்த நாட்டுடன்தான். இங்கிலாந்துக்கு அடுத்தபடி அமெரிக்கா. இதர நாடுகள் அதிகமாக நம் நாட்டு வியாபாரத்தில் பங்கு கொண்டதில்லை. இங்கிலாந்துடன் நாம் அரசியல் சம்பந்தமாக இணைக்கப்பட்டிருந்ததால் வியாபாரத்தில் இவ்விதப் போக்கு காணப்பட்டதில் ஆச்சரியம் ஏதும் இல்லை.

இந்தியா சுதந்திரம் பெற்ற பின் கடைப்பிடித்துவரும் கொள்கைகள் காரணமாகவும், இதர நாடுகளுடன் நட்புறவு கொண்டு தொடர்பு ஏற்படுத்திக் கொண்ட காரணத்தினாலும், நம்முடைய வியாபாரம் இதர நாடுகளுடன் இப்போது பெருகியிருக்கிறது. இங்கிலாந்து இப்போதும்கூட நம்முடைய முக்கிய வியாபார நாடாக இருந்தாலும், மேற்கு ஜெர்மனி, எகிப்து, பிரான்ஸ், இத்தாலி, பாகிஸ்தான், ரஷ்யா, ஜப்பான் முதலிய பல நாடுகளுடன் நாம் வியாபாரம் செய்கிறோம். மேலும், இறக்குமதிப் பொருளாக இதுவரையில் இருந்துவந்த சில பண்டங்கள் இப்போது ஏற்றுமதிப் பொருளாக மாறியிருக்கின்றன. ஜவுளி இனுசுகள் முன்னைப் போல் இறக்குமதி செய்யப்படுவதில்லை. சர்க்கரையும் இறக்குமதி செய்யப்படுவதில்லை. சிமெண்டும் அவ்வாறே. இவையெல்லாம் நாம் தொழில் துறையில் முன்னேறிக் கொண்டிருக்கிறோம் என்பதைக் காட்டுகின்றன. இதுவுமன்றிப் பல சாமான்கள் நம்முடைய ஆலைகளில் உற்பத்தி செய்து நம்முடைய அண்டை நாடுகளுக்கு அனுப்பும் நிலைமையில்கூட நாம் இப்போது இருக்கிறோம். நம்முடைய வியாபாரப் போக்கில் இது ஒரு முக்கியமான மாறுதல்.

நம்முடைய ஐந்தாண்டுத் திட்டங்களின் காரணமாக ஏற்பட்ட சில மாறுதல்களும் குறிப்பிடத் தக்கவை. புது ஆலைகளை நிர்மாணிக்கவும், பழைய தொழிற்சாலைகளை விஸ்தரிக்கவும், தேய்ந்துபோன யந்திரங்களைப் புதிப்பிக்கவும், புது யந்திரங்களைச் சேர்க்கவும் பல திட்டங்கள் நாம் வகுத்திருக்கிறோம். இதற்கு வேண்டிய சாமான்களெல்லாம் வெளிநாடுகளிலிருந்து வாங்கித்தான் ஆகவேண்டும். இது தவிர்க்க முடியாதது. திட்டங்கள் வகுக்கப்பட்டபோது எதிர்பார்க்கப்பட்டது. இம்மாதிரி சாமான்கள் இறக்குமதியாகிக் கொண்டிருக்கும் வரையில், இறக்குமதி வியாபாரத்தின் தன்மையும் போக்கும் இதன் காரணமாகப் பாதிக்கப்பட்டே இருக்கும்.

சில நாடுகளுக்குப் பதிலாகப் பல நாடுகளிலிருந்து இறக்குமதி செய்வதால் இறக்குமதிகளின் "திசை" மாற்றம்; உடனடியாகப் பயன்படக்கூடிய உபயோகப் பொருள்களுக்குப் பதிலாகப் பெருமளவுக்கு யந்திரச்சாமான்கள் தருவிப்பதால் இறக்குமதியின் "தன்மை" மாற்றம்; கணிசமான அளவுக்குச் சாமான்கள் வாங்கப்படுவதால் இறக்குமதியின் 'தர' மாற்றம்; இவ்வாறு இறக்குமதி வியாபாரத்தின் போக்கில் பொதுவாக மாறுதல்கள் தோன்றியுள்ளன. இவற்றில் மிகவும் முக்கியமானது இறக்குமதியின் தரத்திலும் தன்மையிலும் ஏற்பட்ட மாறுதல்கள். திட்டத்தின் காரணமாக இவை ஏற்பட்டதனால், நாட்டின் இறக்குமதியை மிகவும் ஜாக்கிரதையுடன் கண்காணிக்க வேண்டியது அவசியமாகிறது; அவசியமான யந்திரங்கள் தருவிப்பதைத் தவிர்க்க முடியாதாகையால், அவசியமில்லாத பொருள்களை இறக்குமதி செய்வதைக் கூடுமான வரையில் தவிர்க்க வேண்டிய பொறுப்பு அரசாங்கத்தில் இந்த இலாகாவை நிர்வகிப்பவர்களுக்கு ஏற்பட்டுள்ளது. எவ்வளவு தூரம் இந்தக் கண்காணிப்பும் பொறுப்பும் நிர்வாகத்தில் காணப்பட்டது என்பது கடந்த மூன்று அல்லது நான்காண்டுகளில் இறக்குமதியான சாமான்களின் விவரங்களிலிருந்து ஒருவாறு வெளிப்படுகின்றது. நான்கு வருஷத்திய இறக்குமதி விவரங்கள் கீழே கொடுக்கப்பட்டிருக்கின்றன.

| வருஷம் | இறக்குமதி (கோடி ரூபாய் கணக்கில்) |
|---|---|
| 1953-54 | 591·8 |
| 1954-55 | 681·6 |
| 1955-56 | 747·7 |
| 1956-57 | 1100·0 |

இதிலிருந்து நம் நாட்டின் இறக்குமதி படிப்படியாக அதிகமாகி வந்திருப்பது புலப்படும். கடந்த ஆண்டில் (1956-57) மற்ற வருஷங்களைக் காட்டிலும் கணிசமான அளவுக்கு இது அதிகரித்திருப்பதும் விளங்கும்; ஒரே வருஷத்தில் சற்றேறக் குறைய 350 கோடி ரூபாய் மதிப்புள்ள சாமான்கள் அதிகப்படியாக இறக்குமதி செய்யப்பட்டிருப்பது கவனிக்கத்தக்கது. சராசரி வருஷாந்திர இறக்குமதியே 725 அல்லது 750 கோடி ரூபாய் மதிப்புள்ளது. இந்தச் சராசரி அளவுக்கும் மிஞ்சிவிட்டது கடந்த ஆண்டு இறக்குமதி.

இந்த விவரங்களைத் தொடர்ந்து மேலும் ஆராய்ந்தால் எந்தெந்த அம்சங்களில் இறக்குமதி அதிகரித்திருக்கிறது என்பது தெரிய வரும். கீழே கொடுத்துள்ள விவரங்கள் இதை உணர்த்துகின்றன.

| இனங்களின் பெயர்: | 1954- | 1955- | 1956 |
|---|---|---|---|
| | | (லக்ஷ ரூபாய் கணக்கில்) | |
| பால் பவுடர் வகைகள் | 465 | 605 | 651 |
| பால் பவுடர் நீங்கலாக இதர டின் உணவுப் பொருள்கள் முதலியன | 393 | 567 | 830 |
| வாசனை உணவுப் பொருள்கள் | 451 | 562 | 812 |
| சணல் பேல்கள் | 1234 | 1741 | 1382 |
| நுணுக்கக் கலைக் கருவிகளும் சாதனங்களும் | 1954 | 2628 | 3473 |
| உலோகப் பொருள்கள் (மூலப்பொருள்களல்லாதவை) | 5007 | 7532 | 13949 |
| ரஸாயனப் பொருள்கள் (உரங்களைத் தவிர்த்து) | 1700 | 1959 | 2448 |
| செயற்கைப் பட்டு நூல் | 1295 | 1429 | 1646 |
| காகித வகைகள் (நியூஸ்பிரிண்ட் நீங்கலாக) | 534 | 662 | 831 |
| வண்ணங்களும் வர்ணச் சாமான்களும் | 195 | 237 | 268 |
| சைக்கிள் சாமான்கள் | 258 | 325 | 400 |
| ரஸாயன உரங்கள் | 179 | 212 | 371 |
| இதர சில்லறை இனங்கள் | 10614 | 11216 | 12424 |

சில்லறை இனங்கள் என்று மேலே சொல்லியிருப்பது இருநூற்றுக்கு மேற்பட்ட பல வகை இறக்குமதிப் பொருள்களின் மொத்தம். சாதாரணமாக, மக்களின் தினசரி தேவைகளுக்காக வாங்கப்படும் பல பொருள்கள் இதில் அடங்கியுள்ளன. இவற்றின் இறக்குமதியை அவ்வப்போது கவனித்து ஆறுமாதத்துக்கொரு தடவை அதிகரிக்கவோ, குறைக்கவோ வர்த்தக இலாகா செய்கிறது. பிரத்தியேகமாக 'லைசென்ஸ்' வேண்டப்படாமல், அந்தந்தப் பண்டங்களின் வியாபாரத்தில் ஈடுபட்டிருப்பவர்கள் பொதுவாக இறக்குமதி செய்ய அனுமதி வழங்கப்படுகிறது. செலாவணி நெருக்கடியைப் பற்றி அதிகமாகப் பிரஸ்தாபிக்கப்படும் போதும், இறக்குமதிக் கொள்கைகளைப் பற்றிக் கண்டனங்கள் கேட்கப்படும் போதும் அரசாங்கம் இந்த இனங்களில் சிலவற்றின் இறக்குமதியைக் குறைத்துத் தங்கள் சமாதானத்தைத் தெரிவிப்பது வழக்கம். அன்னிய வியாபாரத்தில் ஈடுபட்டிருக்கும் பல சிறு வியாபாரிகளுக்கு, இம்மாதிரி ஆறு மாதத்துக்கொருமுறை சுமார் 400 அல்லது 500 பொருள்களின் இறக்குமதிக் கொள்கைகளை மாற்றுவதால் ஏற்படும் சிரமங்கள் கொஞ்சமல்ல. பொது ஜனங்களுக்கும்கூட இந்த மாறுதல்களின் விளைவு திடீர் திடீரென்று உணர்த்தப்படும். இருந்தாற் போல் ஒரு நாள் க்ஷவர பிளேடுகள் மாயமாக மறைந்து விடும். விலை ஒன்றுக்கு இரண்டாகவும் உயர்ந்து வரும். ஹார்லிக்ஸ், கோகோ, ஓவல்டின் முதலியவைகளின் விலை உயரும். இதெல்லாம் ஆறு மாதத்திய இறக்குமதிக் கொள்கை அறிவிப்பு வந்ததும் ஏற்படும் சம்பவங்கள். இதன்மூலம் அவசியமில்லாத பொருள்களின் இறக்குமதியைத் தடை செய்ய அரசாங்கம் தவறுவதில்லை என்றும் அன்னியச் செலாவணியைச் செலவிடுவதில் அரசாங்கம் மிகவும் ஜாக்கிரதையுடனேதா விருந்து வருகிறதென்பதையும் ஜனங்கள் புரிந்துகொள்ள வேண்டுமென்பது கருத்து. இதைத் தவிர, சிற்சில சமயங்களில், குறிப்பிட்ட சில சாமான்களை இறக்குமதி செய்ய மாமூலான விதிகளுக்குப் புறம்பாக 'அட்-ஹாக்' லைசென்ஸ் வழங்கித் தருவித்துக் கொள்ளுவதும் உண்டு. குறிப்பிட்ட சாமான்களுக்குத் தட்டு ஏற்பட்டதென்றோ, விலைவாசி அதிகமாக உயர்ந்து விட்டதென்றோ அரசாங்கம் இம்முறையைக் கையாளுவது வழக்கம். இவ்வாறு இறக்குமதி செய்யப்பட்ட பலவகைகளும் இந்த இனத்தில் அடங்கியுள்ளன.

சின்னஞ் சிறு விஷயங்களில் மக்களுக்குக் கஷ்டங்கள் விளைந்தாலும், உண்மையிலேயே அரசாங்கம் இறக்குமதி விஷயத்தில் ஒழுங்கான கட்டுப்பாட்டு முறைகளை அநுசரித்து அதன் முழுப் பயனையும் நாடு அடையும்படி செய்தால் அதைப் பற்றி மகிழ்ச்சி கொள்ளலாம். ஆனால் பூசணிக்காய் போவது தெரியாமல், கடுகு போவதைத் துருவித் துருவிக் கவலிப்பவர்களின் செயலைத்தான் ஒத்திருக்கிறது நடைமுறையில் அவர்கள் கொள்கை.

இறக்குமதிப் பொருள்கள் ஜாபிதாவில் இடம் பெற்றுள்ளது முக்கியமாக உணவுப் பண்டங்களும், ராணுவ சம்பந்தமான சாமான்களும். இவை இரண்டும் தனி ரகத்தைச் சேர்ந்தவை என்பதற்காக மேலே கொடுத்துள்ள புள்ளி விவரக் கணக்கில் இது சேர்க்கப்படவில்லை. உணவு வகைகள் மக்களுக்கு ஜீவாதாரமானவை. ராணுவச் சாமான்கள் நாட்டின் பாதுகாப்புக்கு இன்றியமையாதவை. இவ்விரண்டு இனங்களுமே சுமார் 150கோடி ரூபாய் அளவுக்கு 1956-57 இறக்குமதியில் இடம் பெற்றிருக்கின்றன!

முதல் ஐந்தாண்டுத் திட்டமே உணவு உற்பத்தியைப் பெருக்கி நாட்டை இந்த விஷயத்திலாவது தன் தேவைகளைத் தானே பூர்த்தி செய்து கொள்ளும் நிலைக்கு உயர்த்தி விட வேண்டுமென்பதை அடிப்படையாகக் கொண்டு வகுக்கப்பட்டது. திட்டத்தின் பல்வேறு அம்சங்கள் நிறைவேற்றியாகிவிட்டன. ஓரிரண்டு அம்சங்கள் குறித்த காலத்துக்குள் நிறைவேற்ற முடியாமற் போனவற்றை இரண்டாவது திட்ட காலத்தில் நிறைவேற்றப்பட்டுள்ளன. இவற்றின் விளைவாக உணவு உற்பத்தி பெருகித்தான் இருக்க வேண்டும் என்று எதிர்பார்க்கலாம். அவ்வப்போது உணவு உற்பத்தி நிலையும் பெருகி விட்டதென்றுகூடக் கூறப்பட்டது. எனினும்

இந்தியா வெளிநாட்டிலிருந்து இன்னமும் உணவு இறக்குமதி செய்ய வேண்டிய நிலையில் இருப்பதை நோக்கச் சற்று வியப்பாகவே இருக்கிறது! அமெரிக்காவிடமிருந்தும் கானடாவிலிருந்தும் உபரியாக உள்ள கோதுமை நமக்கு அனுப்பி வைக்கும்படி அவர்களைக் கேட்டுக் கொண்டேதானிருக்கிறோம். அதற்கு வேண்டிய அன்னியச் செலாவணியும் கொடுக்கிறோம் — அதாவது கடனுகக் கிடைக்காத பகுதிக்கு. நிலைமை இவ்வாறு இருந்தால் உணவு உற்பத்திப் பெருக்கைப் பற்றி இதுவரையில் எடுத்துக் கொண்ட நடவடிக்கைகள் என்ன பலன்களை விளைவித்தன என்று கேட்கத் தோன்றுகிறது!

இவ்விரண்டு இனங்களுக்கு அடுத்தபடி முக்கியத்துவம் பெற்றது இரும்பு எஃகு சாமான்களின் இறக்குமதி. கடந்த பதினெட்டு மாதங்களில் சுமார் நாலு கோடி டன்களுக்கு அதிகமாக இறக்குமதி செய்யப்பட்டு, இவற்றுக்காகவும் யந்திர சாதனங்களின் இறக்குமதிக்காகவும் சுமார் 310 கோடி ரூபாய் அன்னியச் செலாவணி வழங்கப் பட்டிருக்கின்றன. இவை எல்லாமே அரசாங்கத்தின் கணக்கில், "அரசாங்கத் தொகுதி"த் தொழிற்சாலைகளுக்காக இறக்குமதி செய்யப்பட்டவை அல்ல. நாட்டின் இதர ஆலை விஸ்தரிப்புத் திட்டத்துக்காகவும், புது ஆலை நிர்மாணத் திட்டத்தின்படியும் இறக்குமதி செய்யப்பட்ட சாமான்களும் அடங்கியுள்ளன. இதிலிருந்து இந்த இனங்களின் இறக்குமதி நான்கைந் தாண்டுகளில் செய்யப்பட வேண்டியவற்றைக் குறுகிய காலத்தில் வெகு வேகமாகச் செய்யப்பட்டு விட்டனவே என்றுகூட நினைக்க இடம் ஏற்படுகிறது. இவ்விஷயத்தைப் பற்றியும் கவனிப்புக் குறைவாயிருந்திருக்கலாம் என்று எண்ண இடமுண்டு எனச் சிலர் கருதுகின்றனர்.

இதர அம்சங்களின் இறக்குமதி விவரங்கள் மேலே கொடுக்கப்பட்டுள்ளன. எல்லாவற்றிலுமே ஒரு ஒழுங்கான இறக்குமதி கோட்பாடும் அதைத் தொடர்ந்து செயல் முறையில் கவனிக்கும் முறையும் நிலவவில்லை என்பதை இந்தக் கணக்கு விவரங்கள் உணர்த்துகின்றன. தொழில் வளம் பெருகுவதற்காக இறக்குமதி அதிகமாகத்தா னிருக்கும் என்ற பொதுப்படையான உண்மையை எல்லோரும் அங்கீகரிக்கின்றனர். அதேபோல் ஏற்றுமதி நாடுகளில் ஏற்பட்ட விலை உயர்வு காரணமாக இறக்குமதிப் பொருள்களின் விலையும் உயர்ந்து விட்டதால் இறக்குமதி பட்டியலில் ஒரே அளவு சாமான்களுக்கு ரூபாய்க்கணக்கில் சொல்லும்போது அதிகப்படியான மதிப்பு ஏற்பட்டு அதிகமாக இறக்குமதி செய்துவிட்டது போன்ற பிரமையை உண்டாக்குகிறது என்பதையும் ஒப்புக்கொள்ளுகின்றனர். உதாரணமாக 1955-56 வருஷத்திய கணக்கில் 9.7 சதவீதம் உயர்வுக்குக் காரணம் இம்மாதிரி விலை உயர்வு. இதனுல் அடிப்படையான கோட்பாடுகளிலும் கொள்கைகளிலும் குறைபாடுகளில்லை என்று கூற முடியாது. இறக்குமதி பொதுவாகப் படிப்படியாகக் குறைந்துவருவதற்கு மாறுக உயர்ந்து வருவது இம்மாதிரி குறைபாடுகளைப் பரிசீலனை செய்ய வேண்டுவதன் அவசியத்தை வலியுறுத்துகிறது.

# மற்றொரு வாய்க்கு உணவு !



உலகின் ஜனத்தொகை நாளுக்கு நாள் பெருத்து வருகிறது. இன்னும் 25 ஆண்டுகளில், உலகின் ஜனத்தொகை 100 கோடிக்குமேல் அதிகரிக்கும் என்று கணக்கிடப்பட்டிருக்கிறது. அதாவது மற்றும் 100 கோடி மக்களுக்கு உணவு தேடியாகவேண்டும். விவசாயிக்கு இது ஒரு பெரிய சோதனையாகும். ஆனால் அதிகப்படியான நிலத்தை சாகுபடிக்குக் கொண்டு வந்தும், விவசாயத்தில் அபிவிருத்தி செய்யப்பட்ட முறைகளைக் கையாண்டும் இந்நிலை சமாளிக்கப்பட்டுவருகிறது. பூச்சி வர்க்கத்திலும் பசியால் துடிக்கும் பூச்சிகள் கோடிக்கணக்கில் உள்ளன. பயிர்கள் இவைகளுக்கு இரையாகி வருகின்றன. ஆனால் இந்த பூச்சிகளை திறம்பட, சிக்கனமான முறையில் அழிக்க புதிய கிருமிநாசினிகளை, இன்றைய விஞ்ஞானம் விவசாயிகளுக்குக் கொடுத்து உதவுகிறது. இந்த பூச்சிநாசினிகளில் முதன்மை ஸ்தானம் வகிப்பவை. 'ஷெல்' பூச்சிநாசினிகளான ஆல்டிரின், டைல்டிரின், மற்றும் என்டிரின். இவைகள் பயிர்களை அழிக்கும் எல்லா பூச்சி இனங்களையும் கட்டுப்படுத்துகின்றன. சிறு அளவு உபயோகித்தாலுங்கூட போதும் ஏனெனில் இவைகள் தீவிர சக்தி வாய்ந்தவை, மற்றும் இவைகள் பயிர்களுக்கு யாதொரு கேடும் விளைவிக்காது. பர்மா-ஷெல் ஸ்தாபனத்தார், இந்தியாவெங்குமுள்ள விவசாயிகளுக்கு தயாராக கிடைக்குமாறு, ஆல்டிரின், டைல்டிரின், மற்றும் என்டிரின் இவைகளை விநியோகிக்கிறார்கள். பர்மா-ஷெல் ஸ்தாபனம், விவசாயத்திற்கு ஒத்தாசை புரிவதில் கையாளும் அநேக வழிகளில் இது ஒன்றாகும். இதனால் உணவின் உற்பத்தியை அதிகரிக்கவும் அவர்கள் உதவுகிறார்கள்.

**பர்மா-ஷெல் . . . பாரத நாட்டின் வாழ்க்கையில் ஈடுபட்டிருக்கிறது**

## மாதர்குலதிலகங்கள்

# திருமதி லக்ஷ்மி அம்மாள்



**வா**ழ்க்கையில் ஏற்படக் கூடிய துரதிர்ஷ்டத்தைப் பரோபகாரத் தொண்டின் மூலம் அதிர்ஷ்டமாகச் செய்து கொள்ளக் கூடிய சில உத்தமர்கள் உண்டு. திருமதி லக்ஷ்மி அவர்கள் இந்தக் கூட்டத்தைச் சேர்ந்தவர். தம்முடைய பத்தொன்பதாம் வயதில் இருந்து இடைவிடாமல் பரோபகாரத் தொண்டுகள் செய்து வருகிறார். சேவாஸதனம் என்னும் சிறந்த கல்வி ஸ்தாபனத்தைப் பற்றி அறியாதவர்கள் இருக்க முடியாது. ஏழைக் குழந்தைகள், திக்கற்ற விதவைகள், அநாதைக் குழந்தைகள் முதலியோருக்குச் சேவை செய்வதே இந்த ஸ்தாபனத்தின் முக்கிய நோக்கம். இப்பொழுது இந்த ஸ்தாபனத்தில் தம்முடைய தளர்ந்த வயதிலும் தொண்டாற்றி வருகிறார் திருமதி லக்ஷ்மி அம்மாள்.

திருமதி லக்ஷ்மி அவர்கள் சின்னஞ்சிறு பிராயத்தில் பள்ளிக்குச் சென்றதில்லை. ஆனால் பத்து வயதிலேயே ஆங்கிலத்திலும் தமிழிலும் புலமையுடன் திகழ்ந்தார். தந்தை திரு அ. மாதவய்யா அவர்கள் தம் மகள் லக்ஷ்மிக்குத் தம்முடைய அநுபவத்தையெல்லாம் கற்றுக் கொடுத்தார். பள்ளிப் படிப்பு இல்லாத குறையே இருக்கக் கூடாது என்பதற்காக இந்தப் பாரத நாட்டின் பண்பு அத்தனையும் பயிலும்படி செய்தார். காலத்தில் திருமணமும் செய்து வைத்தார்; அறியாப் பருவத்தில் பெண்களுக்கு எது ஏற்படக் கூடாதோ அது ஏற்பட்டது. கணவர் அன்பில்லாதவராக இருந்தார். கணவரின் தாயாரோ பழங் காலக் கதைகளில் வரும் 'மாமியாராக' விளங்கினார். இல்லற வாழ்வு பெருந் துன்ப வாழ்வாகி விட்டது. அதனால் மனமுடைந்து தம்முடைய கவனத்தையெல்லாம் கல்வித் துறையில் செலுத்தினார்.

ராணி மேரி கல்லூரியில் ஜூனியர் இண்டர்மீடியட் வகுப்பில் சேர்ந்தார். பள்ளிப் படிப்பே இல்லாத திருமதி லக்ஷ்மியை அவருடைய திறமை ஒன்றைக் கருதியே கல்லூரி வகுப்பில் சேர்த்துக் கொண்டனர். ஆனால் அந்த ஆண்டுக்குள்ளாகவே 'கேம்பிரிட்ஜ் ஜூனியர்' பரீட்சை பாஸ் செய்துவிட வேண்டும் என்று நிபந்தனை விதித்திருந்தனர். திருமதி லக்ஷ்மி இண்டர்மீடியட் வகுப்பில் படித்துக் கொண்டிருக்கும் போதே கேம்பிரிட்ஜ் ஜூனியர் பரீட்சையிலும் தேறியதுடன் இண்டர்மீடியட் பரீட்சையிலும் முதல் வகுப்பில் தேறினார். பின்னர் பிரஸிடென்ஸி கல்லூரியில் ஆங்கில இலக்கிய ஹானர்ஸ் வகுப்பில் சேர்ந்து மாகாணத்திலேயே முதல்வராகத் திகழ்ந்தார். மேலும் கல்வி பயிலுவதற்காக லண்டன் நகரம் சென்றார். பெட்போர்டு பெண்கள் கல்லூரியின் மூன்றுண்டு பட்டப் படிப்பில் சேர்ந்து அந்தப் படிப்பை இரண்டாண்டுகளிலேயே முடித்துப் பட்டம் பெற்றுத் திரும்பினார். தமக்கு முதலில் இடம் கொடுத்த ராணி மேரி கல்லூரியிலேயே ஆங்கில ஆசிரியராகச் சேர்ந்து பணியாற்ற முன்வந்தார். படிப்படியாக அவர் பதவி உயர்ந்தது. ஆசிரியர் பதவியிலிருந்து பேராசிரியர் பதவிக்கும் அதிலிருந்து கல்லூரியின் பிரின்ஸிபல் பதவிக்கும் உயர்ந்தார். பின்னர் லேடி வெல்லிங்டன் டிரெயினிங் கல்லூரியின் பிரின்ஸிபல் பதவியை ஏற்றுக் கொண்டு திறம்படப் பணியாற்றினார்.

முப்பது ஆண்டுகளுக்கு முன்னால் ஒரு தமிழ்ப் பெண்மணி இத்தகைய பதவிக்கு வந்திருப்பதைக் கண்டு தேசமே ஆச்சரியத்தில் மூழ்கியிருந்தது. அந்தக் காலத்திலும் திருமதி லக்ஷ்மி அவர்கள் தம்முடைய பதவியின் புகழுக்கு அடிமையாகாமல் கல்லூரியின் சுற்றுப் புறங்களில் உள்ள ஹரிஜனச் சேரிகளுக்குச் சென்று சேவை செய்து வந்தார்.

லேடி வெல்லிங்டன் டிரெயினிங் கல்லூரியிலிருந்து ஓய்வு பெற்றதும் திருமதி லக்ஷ்மியின் உறவினர்களும் நண்பர்களும் எவ்வளவோ சொல்லியும் கேட்காமல் மீண்டும் பெண் குலத்துக்குத் தொண்டாற்றுவதற்குச் சேவாஸதனத்தில் சேர்ந்து விட்டார்.

திருமதி லக்ஷ்மி அவர்கள் ஆங்கிலத்திலும் தமிழிலும் அபாரமான வாக்கு வன்மை பெற்றவர். ஒழுக்கத்தால் உயர்ந்தவர். வினயத்தில் சிறந்தவர்; பகவானிடம் பரிபூரண பக்தி கொண்டவர்: அதற்கு ஒரு படி அதிகமாக ஏழை எளிய மக்களுக்குத் தொண்டு செய்வதில் பக்தி கொண்டவர். வாழ்க லக்ஷ்மி அம்மாள்! வாழ்க அவர் தொண்டு!




# இதுவே உங்களுக்கு உத்திரவாதம்

நீங்கள் ஆயுள் இன்ஷ்யூரன்ஸில் செய்யும் முதலீடுகள், நாட்டிலே உயர்ந்த ஸ்தாபனத்தினால், அதாவது இந்திய சர்க்காரால், பாதுகாக்கப்படுகின்றன என்பதற்கு இந்த "இரு கரங்களின்" சின்னமே ஒரு நிதர்சனமான உத்திரவாதம்.

இது உங்கள் தேவைகளைக் கவனிக்கவும், உங்களுக்கு பணியாற்றவும் செய்கிறது. மேலும், உங்கள் பாலிஸித் தொகையை வழங்கும் சமயம் வரும்பொழுது, உங்கள் உரிமைகளைத் துரிதமாயும் திறம்படவும் நாங்கள் தீர்த்து வைப்போம் என்பதை உறுதியாக நம்பலாம்.

இந்த சின்னம் உத்திரவாதமும் வாக்குறுதியும் ஆகும்.



லைப் இன்ஷ்யூரன்ஸ் கார்ப்பொரேஷன் ஆப் இந்தியா,
சென்ட்ரல் ஆபீஸ்: ஜீவன்கேந்திரா, சர்ச்கேட் ரிக்லமேஷன், பம்பாய்-1

**Life Insurance Corporation of India**

ஜோனல் ஆபீஸ்கள்: பம்பாய் . புதுடில்லி . கல்கத்தா . மதராஸ் . கான்பூர்.
டிவிஷனல் மற்றும் பிராஞ்ச் ஆபீஸ்கள் இந்தியாவில் எல்லா இடங்களிலும் இருக்கின்றன.

A3F/LIC-6





# பேசும் பொற்சித்திரம்

பேராசிரியர் அ. சீநிவாசராகவன்

இது குழந்தைகள் வாரம்.

போன வாரம் பெய்த மழை, என் வீட்டின் எதிரே கிடந்த பள்ளத்தை அலைமோதும் குளமாக்கி விட்டது. பூமா தேவியின் வீணைத் தந்திகளைப் போல், பச்சைப் பசுங்கோரையின் விரல்கள், தண்ணீரிலிருந்து வெளியே நீண்டு, மெல்லத் துடிக்கின்றன.

மழை நீரைத் துளைத்துக்கொண்டு நாலைந்து குழந்தைகள் கும்மாளம் அடிக்கின்றனர். சிறுமி ஒருத்தி, நடுங்கும் கைகளால், சின்னஞ்சிறு காகிதக் கப்பலைச் சேற்று வெள்ளத்தில் மிதக்க விடுகிறாள். அவள் முகத்தில்தான் எவ்வளவு கரிசனம், எவ்வளவு கவலை, எவ்வளவு ஒருமைப்பாடு! கப்பல் கவிழ்ந்து போகாமல் மிதந்து செல்ல வேண்டுமே! அவள் மனமெல்லாம், கப்பலாக அவளுக்குத்தோன்றும் அந்த அழுக்குச் சிறு காகிதத் துணுக்கோடு மிதந்து செல்கிறது. எங்கே போகிறது, அந்தப் பொம்மைக் கப்பல், எங்கே போகிறது அந்தக் குழந்தை மனம்? எனக்கு விளங்கவில்லை.

குழந்தைகள் துள்ளிக் குதிக்கிறார்கள், நீரை அள்ளி வீசுகிறார்கள், கூச்சல்போடுகிறார்கள். என்ன ஆனந்தம் அவர்களுக்கு! எதற்காக? அதுதான் புரியவில்லை.

கப்பல் விட்ட சிறுமி அழுகிறாள். கப்பல் - அவளுடைய காகிதக் கப்பல் கவிழ்ந்து விட்டது. தண்ணீர்க் கரையிலே சேற்றிலே விழுந்து, அந்தச் சிறுமி விம்மி விம்மி அழுகிறாள், உலகத்தையே பறி கொடுத்தவள்போல. அப்படி என்ன உலகம் பறி போய் விட்டது? அதுதான் எனக்குத் தெரியவில்லை.

இது குழந்தைகள் வாரம். அது தெரிகிறது. ஆனால் குழந்தைகளைத் தான் என்னால் அறிய முடியவில்லை. அறியாவிட்டால் என்ன? அவர்களைப் பார்க்கும் போதெல்லாம், அவர்களை எண்ணும் போதெல்லாம், பாரதியாரின் சொற்கள் நினைவுக்கு வருகின்றன.

பிள்ளைக் கனி அமுதே-கண்ணம்மா
பேசும் பொற் சித்திரமே!
அள்ளி அணைத்திடவே-என் முன்
ஆடி வருந் தேனே.

இச்சொற்களின் மருடி நாதத்தில் என் நெஞ்சு மண்டலமிட்டு ஆடுகிறது.

பாட்டைத் திரும்பவும் சொல்லிப் பார்க்கிறேன். குழந்தை எப்படிப் பேசும் பொன் சித்திரமாகக்காட்சி அளிக்கிறது. எப்படி ஆடி வரும் தேனாக மாறியது என்பதற்குப் பாரதியார் ஏதாவது காரணம் சொல்லுகிறாரா? சொல்லவில்லை. தேனை அள்ளி அணைக்க முடியுமா என்றும் அவர் 'ஆராய்ச்சி' செய்யவில்லை. குழந்தைகளைக் கண்டதும் நம் எல்லோருக்கும் உண்டாகும் இன்பத்தை, இந்தக் கவிஞரும் உணர்ந்தார். ஆனால், நாம் உணர்வது ஏதோ ஒரு துளி என்றால், கவிஞரோ, கடல் போல் பொங்கி அலைமோதும் இன்ப வெள்ளத்தைத் தம் நெஞ்சிலே கண்டார். அது பாட்டாகப் பெருக்கெடுத்து ஓடுகிறது. உடனே, பேசுகின்ற பொன் சித்திரமாக, ஆடி வரும் தேனாக, பிள்ளைக்கனி அமுதமாக, நம்முடைய மனத்தில் இடம் பெற வருகிறது குழந்தை. அதை அள்ளி அணைக்க, நம்முடைய கையும், உயிரும் நீள்கின்றன. அவ்வளவுதான்; பாட்டு என்ற மாயம், தன் அற்புத சாதனையை நிறைவேற்றி விட்டது. அதைத் திரும்பத் திரும்பச் சொல்லுகிறோம், திரும்பத் திரும்பப் பாடுகிறோம், திரும்பத் திரும்ப இன்பவெறி கொள்ளுகிறோம்.

இன்னொரு பாட்டைப் பார்க்கலாம். இது பழைய பாடல். இதைப் பாடியவர் பாண்டியன் அறிவுடை நம்பி என்ற ஓர் அரசர். உலகத்திலே இன்பத்துக்கும், போகத்துக்கும் கருவியாக உள்ள செல்வம் எல்லாம் பெற்றவர். 'எத்தனை செல்வம் இருந்தும் என்ன, பலரோடு அதைச் சேர்ந்து அனுபவிக்கும் அளவுக்கு அதைப் பெற்றிருந்தாலும் என்ன' என்று தொடங்குகிறார் அவர்.

படைப்புப்பல படைத்துப் பலரோடு உண்ணும்
உடைப் பெரும் செல்வர் ஆயினும்

'எவ்வளவு செல்வம் உடையவர்களாக இருந்தாலும்' என்று தொடங்கும் இந்தக் கவிஞர், என்ன சொல்லுகிறார், தெரியுமா? எவ்வளவு செல்வம் உடையவராக இருந்தாலும், ஒன்று இல்லாவிட்டால், வாழ்நாளில் பயனே இல்லை.

பயக்குறை இல்லை தாம் வாழும் நாளே

என்று முடிவு கட்டுகிறார். அது என்ன?

குழந்தை ஒன்று, நின்று நின்று, தயங்கித் தயங்கித் தளர் நடை இட்டு வருகிறது. சின்னஞ் சிறு பாதத்தை, சிறுகச் சிறுகத் தூக்கி வைத்து நடந்து வருகிறது. ஆமாம், நம்மை நோக்கித்தான். பக்கத்திலே, 'நெய்யுடை அடிசில்,' நெய் கலந்த சோறு உள்ள பாத்திரம். அதன் அருகில் வந்து விட்டது குழந்தை. தன் சிறு கையை நீட்டுகிறது. சோற்றை மெல்ல எடுத்துத் தரையிலே போடுகிறது. தொட்டுப் பார்க்கிறது. பிஞ்சு விரல்களால் எடுத்து வாயிலே கவ்விக் கொள்கிறது. கலத்தில் உள்ள சோற்றையெல்லாம் கையால் அளைகிறது. சோற்றை எங்கும் இறைத்து உடம்பெல்லாம் பூசிக் கொள்ளுகிறது.

இதைக் கண்டு இன்ப மயக்கமே ஏற்பட்டு விடுகிறது கவிஞருக்கு. 'என்னை மயக்குகின்ற குழந்தைகள், இன்ப வெறியிலே ஆழ்த்துகின்ற குழந்தைகள், சோற்றை அள்ளி வீசி உடம்பெல்லாம் சோறாக வரும் இந்தக் குழந்தையின் மூலமாக அல்லவா, அழகின் எல்லையை, இன்பத்தின் எல்லையைத் தொட்டு விட்டேன்! எவ்வளவு செல்வம் இருந்தும் என்ன, இந்த இன்பம் இல்லாவிட்டால், வாழ்க்கையில் சுவையே இராது, வாழ்நாளில் பயனே இராது' என்று பாடுகிறார்:

படைப்புப் பல படைத்துப்பலரோடுஉண்ணும்
உடைப்பெரும் செல்வர் ஆயினும், இடைப்படக்
குறு குறு நடந்து சிறுகை நீட்டி
இட்டும் தொட்டும் கவ்வியும் துழந்து
நெய்யுடை அடிசில் மெய் பட விதிர்த்து
மயக்குறு மக்களை இல்லோர்க்கு
பயக்குறை இல்லை தாம் வாழு நாளே

[படைப்பு-மனிதன் உண்டாக்கும் செல்வம்; படைத்து-பெற்று; உடைப் பெரும் செல்வம்: உடைமை ஆகிய செல்வம்; இடைப்பட-நின்று, நின்று, தயங்கித் தயங்கி; குறு குறு-சின்னஞ்சிறு அடியிட்டு; இட்டும்-கீழே போட்டும்; தொட்டும்-பிசைந்தும்; கவ்வியும்-வாயால் கவ்வியும்; துழந்து-கையால் துழாவியும்; நெய்யுடை அடிசில்-நெய்யை உடைய சோறு; மெய்பட உடம்பிலே படும்படி; விதிர்த்தும்-இறைத்தும்; மயக்குறு-மயக்குகிற மக்களை இல்லோர்க்கு-குழந்தைகள் இல்லாதவர்களுக்கு; பயக்குறை இல்லை-பயன் இல்லை.]

குழந்தையின் மூலமாக இவ்வளவு இன்பம் வருவதற்குக் காரணம் என்ன என்பதை இந்தக் கவிஞரும் சொல்லவில்லை. 'வருகிறது. அடாடா, வந்து என்னை மயக்குகிறது. இதைப் பெற்றால் போதும், வாழ்ந்ததன் பயன் இதுதான், மற்றையச் செல்வம் எல்லாம் செல்வமாகுமா?' என்று தன் பரவசத்தைச் சொல்லிலே தேக்கி, நமக்கும் தருகிறார்.

இக் கவிஞர்களைப் போலத்தான் குழந்தைகளும். அவர்கள் உலகத்தில் மிகப் பெரிய உணர்ச்சிகள் மூளுகின்றன. நாம் - வயதான நாம் - இதற்குக் காரணம் கேட்கிறோம். மழைத் தண்ணீர் தேங்கி இருக்கிறது. இதைக் கண்டு, குழந்தைகள் கும்மாளி போடுகிறார்கள். குட்டையிலே தேங்கி இருக்கும் சேற்று நீர் இவ்வளவு ஆனந்தத்துக்குக் கார





இதோ
உங்களுக்கு
முற்றிலும் புதிய
மாதிரியான
இரு பவுடர்கள்
"GOKUL"
SANTOL
TOILET POWDER
GOKUL
SANDAL
TOILET POWDER
ஸாண்டால்
சந்தனத்துடன் கூடிய
டால்கம் பவுடர் ...
ஸாண்டல் வுட்
டாய்லட் பவுடர்
சுத்தமான தனி
சந்தனத்தை
மென்மையாக்கப்பட்டது.
டி.எஸ்.ஆர். & கோ
கும்பகோணம்

ணமா? சே, சிறுபிள்ளைத்தனம் என்று ஒதுக்குகிறோம்.

ஆனால்....

பாரதியாரும், பாண்டியன் அறிவுடை நம்பியும் தங்கள் உணர்ச்சிக்கு ஏதாவது காரணம் சொன்னார்களா? இல்லை. ஆனால் அவர்களுடைய உணர்ச்சியை நமக்கு எப்படியோ சொல்லின் மூலமாகத் தந்து விட்டார்கள். அதைப் பெற்ற நமக்கு, அந்த உணர்ச்சிப் பெருக்கு சத்தியப் பொருளாகத் தோன்றுகிறது. அதற்குக் காரணம் ஏது? ஒன்றை அனுபவமாகப் பெற்ற பிறகு, அதற்குக் காரணம் தேடுவானேன்? அனுபூதியிலே ஆழ்ந்து நிற்கும் போது, காரணத்தைப் பற்றிய எண்ணந்தான் எப்படி வரும்?

குழந்தைகளும் தம்முடைய அனுபவங்களை இப்படிக் கவிஞர்களைப் போல நமக்குத் தந்துவிட்டால், நாம் காரணம் கேட்க மாட்டோம். சிறுபிள்ளைத்தனம் என்று அவர்களைப் பார்த்துச் சிரிக்க மாட்டோம். ஏதோ அவர்களைவிட உயர்ந்த அறிவு நிலையில் இருப்பதாக எண்ணி, நம்முடைய குருட்டுத் தனத்தை வளர்க்க மாட்டோம். ஆனால் குழந்தைகள் கவிஞர்களைப் போல் உணர்ச்சிப் பெருவெள்ளத்தில் மிதந்த போதிலும், அந்த வெள்ளத்தை நமக்கு அவர்களால் தர முடிவதில்லை. அதனால் அவர்களுக்கு உணர்ச்சி எதுவும் இல்லை என்று சொல்லிவிட முடியுமா? இதோ, குழந்தைகளின் களிப்பு ஆரவாரம் காதில் விழுகிறது. கப்பல் விட்ட சிறுமியின் அழுகையும் கூடவே வருகிறது. இந்த ஆரவாரமும் அழுகையும் கவிஞனுடைய சொல்லைப் போல என் மனத்தில் அவற்றின் காரணமாக உணர்ச்சிகளை எழுப்பவில்லை. அது குழந்தைகளின் குற்றமா? குழந்தைகளின் அழுகையை, ஆரவாரத்தைப் புரிந்து கொள்ளாத என்னுடைய குற்றமல்லவா?

அப்படிப் புரிந்து கொண்ட கவிஞர் ரவீந்திரநாத் தாகூர் என்ன சொல்கிறார், கேட்போம்:

'கோயிலுக்கு முன்புறத்தில் சந்தை கூடி இருந்தது. விடியற்காலையிலிருந்து ஒரே மழை. பகல் முழுதும் மழை. இப்போது பகல் தன் முடிவை நெருங்கியது. சந்தைக் கூட்டத்தில் ஒரே உற்சாகம்.

சிறுமி ஒருத்தி ஒரு காசுக்குப் பனை ஓலை ஊதல் வாங்கினாள்.

சந்தைக் கூட்டத்தில் ஒரே குதூகலம்: ஆனால் அந்த ஆனந்த ஒலியை விடப் பிரகாசமாக இருந்தது எது தெரியுமா? ஊதல் வாங்கி மகிழ்ந்த சிறுமியின் ஒளி மலர்ந்த சிரிப்பு.

அவளுடைய ஊதலின் ஆனந்தக் குரல், சந்தையில் திரண்ட சந்தடிக்கும் சிரப்பிற்கும் மேலே, ஓங்கி மிதந்தது.

மக்கள் கூட்டங் கூட்டமாகத் திரண்டனர்; ஒருவரை யொருவர் இடித்துக் கொண்டு சென்றனர். சாலை எங்கும் சேறு, ஆற்றிலே வெள்ளம், வயலெங்கும் அடைமழை நீரின் தேக்கம்.

மக்கள் அவதிப்பட்டனர்.

ஆனால் அவர்கள் துயரத்தை எல்லாம் விடப் பிரும்மாண்டமாய்த் திரண்டது எது தெரியுமா? சிறுவன் ஒருவன் வர்ணக் குச்சி ஒன்று வாங்கத் தன்னிடம் ஒரு காசு இல்லையே என்று ஏங்கும் அந்த ஏக்கந்தான்.

அதோ, அந்தச் சிறுவன் ஆவலோடு, தாபத்தோடு, தவிப்போடு வர்ணக்குச்சி வைத்திருக்கும் கடையைப் பார்த்துக்கொண்டு நிற்கிறான். அந்த ஏழைச் சிறுவனின் துயர விழிகள், சந்தையில் உள்ள மக்கள் கூட்டத்தைப் பொருளற்ற அற்பமாக்கி விட்டன.

குழந்தைகளின் உணர்ச்சிகளில்-எல்லையற்ற அந்தப் பெருவெள்ளத்தில்-முழுகுவதற்கு இந்தக் கவிஞரைப் போல் கற்றுக்கொண்டால்; குழந்தை எப்படிப் பேசும் பொற்சித்திரமாகிறது என்பதை உணர்வோம். குழந்தைகள் வாரத்தை உண்மையில் கொண்டாடியவர்கள் ஆவோம்- ஆமாம், அதற்கு வழி? தாகூர், அறிவுடை நம்பி, பாரதியார் போன்றவர்களின் கவிதை உலகத்துக்குச் சென்று அங்கே வாழ்வதுதான்.



"மங்களகரமான மஞ்சள் 

 மரகதப் பச்சை

முல்லை வெண்மை 

 பவழச் சிவப்பு

கண்ணைப் பறிக்கும் வர்ணங்கள்
அல்லது இலேசான நிறபேதங்கள், நீங்கள் எந்த
வர்ணத்தை விரும்பினாலும்—

குட்லாஸ் **நெரோலாக்** பெயின்டுகளையே
உபயோகியுங்கள்



குட்லாஸ் நெரோலாக் பெயின்ட்ஸ் பிரைவேட் லிட்.

ஏஜென்ட்கள் :
ஹாரிஸன்ஸ் & கிராஸ்பீல்ட் லிட்.
தபால் பெட்டி நெ. 4. கொச்சின்
டி. டி. கிருஷ்ணமாச்சாரி & கோ.,
தபால் பெட்டி நெ. [illegible], சென்னை

# பாவை விளக்கு

## அத்தியாயம் 29

## இன்பச் சிறை

தணிகாசலத்தின் கரங்களை இறுக்கிப் பிடித்தவர் மெதுவாக அவனை அறையை விட்டு வெளியில் வரச் செய்தார். இருளில் முகங்கள் தெரியவில்லை என்றாலும் உருவங்கள் தெரிந்தன. போலீஸ்காரர்கள் சாதாரண உடையில் கைது செய்வதற்குவந்திருக்கிறார்களா? ஆனால், யார் அங்கு சற்றுத் தூரத்தில் ஒதுங்கி நிற்கும் பெண் பிள்ளை?

மாணவர்களில் ஒருவன் தணிகாசலத்தின் அறைக்குள் நுழைந்து விளக்கைப் போட்டான். நின்றுவிட்ட இருதயம் படபடவென்று துடிக்கத் தொடங்கியது, தணிகாசலத்துக்கு. அவனுடைய கரங்களைப் பற்றி யிருந்தவர் தேவகியின் அண்ணா சுப்பையா. தேவகி சற்று விலகி நின்று கொண்டிருந்தாள். விடுதியின் சொந்தக்காரரும் மாணவர்களும் கலைந்து சென்றவுடன் சுப்பையா அவனுடன் உள்ளே வந்து கட்டிலில் உட்கார்ந்தார். தேவகி நாற்காலியில் அமர்ந்தாள்.

"இப்போதே நீ வீட்டுக்குப் புறப்பட வேண்டும். பேச வேண்டியதை அங்கு வைத்துக் கொள்ளலாம்!" என்றார் சுப்பையா.

"உம், புறப்படு! நாழியாகிறது!" என்றாள் தேவகி.

"காலையில் வருகிறேன், அண்ணா! பாதி ராத்திரி வேளையில்......"

"தணிகாசலம்!" என்று அதட்டினார் சுப்பையா. "பதில் பேசாமல் எழுந்து வா! இந்த இடத்தில் நாம் பேசிக் கொண்டிருப்பது சரியில்லை!"

தேவகி அவனைக் கோபத்துடன் உருட்டி விழித்துப் பார்த்தாள்.

அறையைப் பூட்டிக் கொண்டு மூவரும் கிளம்பினார்கள். வழியில் அவனிடம் தேவகியோ, சுப்பையாவோ பேச்சுக் கொடுக்கவில்லை. குற்றவாளியைக் கூண்டுக்கு அழைத்துச் செல்வதுபோல், அவனுக்கு இருபுறமும் அவர்கள் நடந்து வந்தார்கள். நள்ளிரவில் கண்ணபுரத்தின் அரவம் அடங்கி விட்டது. தெரு நாய்கள் குரைப்பதுடன் நிறுத்திக் கொண்டன. வானத்திலும் தரையிலும் கவிந்து கிடந்த இருளைத் தெரு விளக்குகளின் வெளிச்சம் மிகைப்படுத்திக் காட்டுவதுபோல் தோன்றியது.

சிவகாமி அண்ணி கதவைத் திறந்து விட்டுத் தணிகாசலத்தைப் பயத்துடன் பார்த்தாள். குழந்தை தூளியில் தூங்கியது; தேவகியின் தாயார் இருமும்



சத்தம் கேட்டது. "உன்னை நல்ல பிள்ளை என்று நினைத்தேன்; நீ பொல்லாதவனாக மாறி எதையெல்லாமோ செய்கிறாயே?" என்று கேட்டாள் சிவகாமி. பிறகு அவன் பதிலுக்குக் காத்திராமல் தூளிக்குப் பக்கத்தில் படுக்கப் போய் விட்டாள்.

சுப்பையாவின் அலுவல் அறைக்கு மூவரும் வந்தார்கள். தணிகாசலத்திடம் அவன் வேலைக்குப் போனதிலிருந்து நடந்தது முழுவதையும் விசாரித்தார். கேட்ட கேள்விகளுக்கெல்லாம் பதில் கூறினான். வேலை போன காரணம், வேலை யில்லாத் திண்டாட்டம், வெளியில் சொல்லாமல் மறைத்தது, பொன் வயல் போக முடியாத நிலை—இவ்வளவையும் அவன் மறைக்கவே இல்லை.



"மாணவர்கள் கிளர்ச்சியை நீதான் நடத்தினாயா?" என்று கேட்டார் சுப்பையா.

"எனக்கும் ஓரளவு அதில் பங்கு உண்டு என்பது உண்மை."

"இப்போது ரகசியமாய் நாச வேலையில் இறங்கி யிருக்கிறாயா? நான் யாரிடமும் சொல்ல மாட்டேன்; உண்மையைச் சொல்?"

"இல்லவே இல்லை!" என்று மறுத்தான் தணிகாசலம். "வேண்டுமென்றே இப்படிப் புகார் கட்டி விட்டிருக்கிறார்கள். எனக்கு இந்த மன்னரிடமும் மக்களிடமும் அன்பு உண்டு. சும்மா இருப்பவனைப் போலீஸ்காரர்கள் பயங்கரவாதியாக்கப் பார்க்கிறார்கள்!"

"உன்னைப் பிடித்துப் பாதுகாப்பில் வைக்கப் போகிறார்கள், தெரியுமா?"

"தெரியும்."

தேவகி, "தெரியுமா?" என்று கோபத்தோடு கேட்டாள்.

"ஆமாம்."

தேவகியின் ஆத்திரத்தை அவனுடைய பொறுமையான பதில் கிளறிவிட்டது. "உனக்குப் பெண்டாட்டி பிள்ளை எதற்கு? தாய் தங்கை எதற்கு? உன்னை நம்பிக்கொண்டு ஒரு குடும்பம் திண்டாடுவதை மறந்து விட்டாயா?"

தணிகாசலம் வாய் திறக்கவில்லை. மழை பொழிந்து கொட்டுவதைப் போல் தேவகி கொட்டித் தீர்த்துவிட்டாள். அவனுடைய குடும்பத்தைப் பற்றி அவன்கூட அவளைப் போல் எண்ணிப் பார்த்ததில்லை.

சுப்பையா அவனை அங்கு அழைத்து வந்த காரணத்தைத் தெரிவித்தார்.

"கண்ணபுரத்துக்கு மாற்றலாகி நேற்றுச் சாயங்காலந்தான் திரும்பி வந்தேன். நீ கைதாகி உடனே விடுதலை செய்யப்பட்ட செய்தி இரண்டு நாட்களுக்கு முன்பு பத்திரிகையில் வந்திருந்தது. தேவகிக்கு ஒன்றும் தெரியவில்லை. இன்றைக்குக் காலையில் மராமத்து இலாகா ரங்கராஜன் நடந்த விஷயங்களைச் சொன்னார். போலீஸ் இன்ஸ்பெக்டர் எனக்குத் தெரிந்தவர்; அவரிடம் போய்க் கேட்டால் உன்னைப் பற்றி நிறையச் சொல்கிறார்."

தணிகாசலம் வாய் பேசாமல் தலையைக் குனிந்து கொண்டான்.

"அவர்களுக்கு இன்னும் தேவையான ருசு கிடைக்கவில்லை. கிடைக்காவிட்டாலும் உன்னைச் சந்தேகத்தின் பேரில் உள்ளே வைக்கப் போவதாகச் சொன்னார். நீ என்ன சொல்கிறாய்?"

"நான் ஒன்றும் செய்யவில்லை; செய்யப் போவதும் இல்லை. சந்தேகத்தை நான் எப்படித் தீர்க்க முடியும்?"

"உனக்காக நான் அவரிடம் பொறுப்பெடுத்துக் கொண்டு வந்திருக்கிறேன். ஒரு மாதத்துக்காவது நீ இந்த சமஸ்தானத்தில் இருக்கக் கூடாதென்று நினைக்கிறார். நாளைக்கே உன்னை இவ்வூரைவிட்டு வெளியில் அனுப்புவதாகச் சொல்லி வந்திருக்கிறேன். நீ பொன்வயலுக்கு உடனே புறப்பட வேண்டும்."

முடியாது என்பதுபோல் அவன் மெதுவாகத் தலையாட்டினான்.

"ஏன்?"

"இனிமேலும் நான் என் தாய்க்குச் சுமையாக இருக்க மாட்டேன். வேலையில்லாமல் அங்கே போனால் ஏசாது தூற்றுவார்கள். அதனால்தான் நான்



தேவகி அக்காள் முகத்தில்கூட விழிக்க விரும்பவில்லை. இந்த நிலையில் வெற்று மனிதனாய் என்னைப் பொன்வயலுக்குப் போகச் சொல்லாதீர்கள்.''

சுப்பையா யோசனை செய்து பார்த்தார். ''கிடைத்த வேலையையும் தொலைத்து விட்டாய். இதில் இருந்திருந்தால், பிறகு எப்படியோ நான் சொல்லி யடித்து, உன்னை முன்னுக்குக் கொண்டு வந்திருப்பேன். இனிமேல் நான் ஒன்றுமே உதவ முடியாத அளவுக்குச் செய்து விட்டாய். ...எதற்கும் காலையில் பேசிக்கொள்வோம்: படுத்துத் தூங்கு'' என்றார்.

தணிகாசலம் படுக்கைக்குச் சென்ற பிறகும் அண்ணனும் தங்கையும் அவனைப் பற்றிப் பேசிக் கொண்டிருந்தார்கள். தேவகியின் தூண்டுதல் இல்லாமல் சுப்பையா அவனுக்காக இவ்வளவு தூரம் அலைந்திருக்க முடியாது. அவர் நல்லவர்தான்; ஆனால் சுறுசுறுப்புக் குறைந்தவர். அவருக்குப் பின்னால் இருந்து இயக்கிய தேவகியை நினைத்துக் கொண்டு தணிகாசலம் கவலையின்றித் தூங்கி யெழுந்தான்.

மறு நாள் காலையில் விடுதியிலிருந்த பெட்டி-படுக்கை! சாமான்கள் வீட்டுக்கு வந்து சேர்ந்தன. சுப்பையா மாலையில் வந்து பேசுவதாய்ச் சொல்லி அலுவலகம் சென்றார். அடுக்களையில் சிவகாமி அண்ணியை விட்டு விட்டு, அவள் குழந்தையைத் தூக்கிக் கொண்டு தேவகி தணிகாசலத்திடம் வந்து சேர்ந்தாள்.

''நானும் அண்ணாவும் ஒரு முடிவுக்கு வந்திருக்கிறோம்'' என்று தொடங்கினாள் தேவகி. ''அண்ணாவின் சிறிய மாமனார் குற்றாலத்தில் குழந்தைப் பள்ளிக்கூடம் வைத்து நடத்துகிறார். குழந்தை குட்டி இல்லாத

வர். நல்ல மனிதர். அவருடைய பள்ளிக்கூடத்தில் உனக்கொரு வேலை போட்டுத் தரச் சொல்லி எழுதப் போகிறார்; அண்ணா! கட்டாயம் வேலை கிடைக்கும். அது வரையில் நீ பொன்வயலுக்குப் போய்த் தங்கியிரு. அண்ணாவின் கடிதம் கண்ட பிறகு நீ அங்கிருந்தே குற்றாலம் போய் விடலாம்.''

குற்றாலத்தின் பெயரைக் கேட்பதற்கே தணிகாசலத்துக்குக் குளுமையாக இருந்தது. நேற்று கௌரியின் கடிதம் கண்ட பிறகு அவனுக்குப் பொன்வயல் நினைவும் வராமல் இல்லை.

''பொன்வயலில் நீ வேலையில்லாமல் இருப்பதைச் சொல்ல வேண்டாம்'' என்றாள் தேவகி. ''அதிலிருந்து கொண்டே புது வேலை தேடிக் கொண்டதாகச் சொல். குற்றாலத்திலிருந்து மாமா மாணிக்கவாசகத்தின் கடிதத்தைக் கண்டவுடன் அண்ணா உனக்கு எழுதுவார், நீ போய்ச் சேர்ந்தவுடன் எனக்குத் தெரியப்படுத்து.''

தணிகாசலத்துக்குப் புது வாழ்வின் அறிகுறிகள் தென்பட்டன.

தேவகி தன் கையிலிருந்த குழந்தையை அவனிடம் கொடுத்தாள். சுப்பையாவைப் போலவே உருண்டு திரண்டிருந்தான் பையன். தன்னுடைய மணிக் கண்களால் தணிகாசலத்தைப் பார்த்துச் சிரித்தான்.

''தணிகாசலம்! இனிமேல் இப்படி வீண் வம்பில் அகப்பட்டுக் கொண்டு திண்டாடாதே. நீ சிறைக்குப் போயிருந்தால் உன் தாயாரும் கௌரியும் மாத்திரம் கஷ்டப்பட்டிருக்க மாட்டார்கள். நான் எவ்வளவு வேதனைப்படுவேன். தெரியுமா? என்னிடம் நீ நடந்ததை மறைக்கும்படி நான் என்ன கெடுதல் செய்து விட்டேன்?''—கலங்கிய கண்களைத் துடைத்துக் கொண்டாள் தேவகி. ''என்னுடைய ஆசைகள் உனக்குத் தெரியாது! சீக்கிரம் உனக்கும் கௌரிக்கும் இப்படி ஒரு பையன் பிறந்தால் அவனை நானே எடுத்து வளர்த்துக் கொள்வேன்....''

தணிகாசலம் தேவகியின் ஆசையைக் கண்டு பெருமை கொண்டான். நேற்று கௌரி எழுதிய கடிதத்தை அவளிடம் காட்ட வேண்டும் போல் தோன்றியது. அதைக் கண்டுவிட்டால் குழந்தை பிறந்தது போலவே அவள் கூத்தாடுவாள். வெட்கம் குறுக்கே நின்று தடுத்ததால் அவன் அதைச் சொல்லவில்லை. 'பெண்களுக்குக் குடும்பத்தின் ஆசையும் பாசமுமே பெரிது; என்னைப் போன்ற ஆண்கள் இருதலைக்கொள்ளிகள்; ஒரு பக்கம் வீடும் மறு பக்கம் வெளி உலகமும் பற்றிக் கொண்டிருக்கின்றன' என்று மனத்துக்குள் நினைத்துக்கொண்டான்.

மாலையில் வீடு திரும்பிய சுப்பையா, தேவகி கூறிய அதே செய்திகளைக் கூறிவிட்டு, அவனை மூட்டை கட்டிப் பொன் வயலுக்கு அனுப்புவதில் முனைந்தார். இன்ஸ்பெக்டரிடம் அன்றைக்கு இரவே அவனை ஊருக்கு அனுப்புவதாக வாக்குக் கொடுத்து வந்திருந்தாராம். ''நமக்கு அவர்களிடம் பயம்! அவர்களுக்கோ உன்னிடம் பயம்!'' என்று கூறிச் சிரித்தார்.

மறுநாள் காலையில் பொன்வயல் காளி கோயில் தெருவில் இரண்டு வீடுகள் ஆச்சரியக் கடலில் ஆழ்ந்தன. புது மாப்பிள்ளைக்கு ஏகப்பட்ட வரவேற்பு. கௌரிக்கு மட்டிலும் தன் கடிதத்தைக் கண்டுவிட்டு, அவன் திடீரென்று புறப்பட்டு வந்திருப்பதாக எண்ணம். தரையில் கால்கள் பாவுவது தெரியாமல் துள்ளித் திரிந்தாள். கல்யாணம் செய்து கொண்ட இந்தச் சில மாதங்களுக்குள் அவள் மதமதவென்று வளர்ந்துவிட்டாள். உள்ளத்தின் பூரிப்பு உடல் சுற்றைப் பெருக்கடித்து விட்டது. கனிந்த மாம்பழமாக அவள் கன்னக் கதுப்பு சிவப்பேறி யிருந்தது.

யாருமில்லாத வேளையில் அவனை எட்டிப் பார்த்துச் சிரித்தாள் கௌரி. ''என் கடிதம் கண்டவுடன் நீங்கள் ஓடிவந்து விட்டீர்களே!''

அவளுடைய புது மலர்ச்சி அவனைக் கிறங்க வைத்தது.

''ஓடி வரவில்லை; பறந்து வந்தேன்!''

போலீசுக்குப் பயந்தோடி வந்ததாய்ப் புது மனைவியிடம் சொல்லலாமா? காதலியிடம் உண்மையை மறைத்துப் புளுக வேண்டுமென்பது இயற்கை கற்றுக் கொடுக்கும் பாடம் போலும்!

அந்த வாரக் கடைசியில் அவன் சிறைக் கைதி ஆனான். கண்ணபுரத்து அரசாங்கக் கொட்டடியில் தனியே

பெருமூச்சு விட்டுக் கொண்டு புழுங்க நினைத்தவனுக்குப் பொன்வயல் புதிய சிறை இன்பம் தந்தது. கௌரியைத் தன்னுடைய அன்புக் கரங்களால் சிறை செய்து மகிழ்ந்தான்.

முன்போல் அவனைக் கண்டு கௌரி இப்போது ஒளிந்து கொள்வதோ, மறைந்துகொள்வதோ இல்லை. திரும்பிய இடத்தில் எங்கும் அவள் அவனைத் தேடிக் கொண்டு நின்றாள். கௌரி இப்போது அவனுடைய இணைபிரியாத தோழி; அழகு கொழிக்கும் விளையாட்டுச் சிற்பம். விந்தை நிறைந்த புது உலகத்தின் வழிகாட்டி.



மங்களத்துப் பாட்டிக்கு இன்னும் தன் உயிர்மேல் இருந்த ஆசை விடவில்லை. கல்யாணம் செய்து வைத்தவுடன் கைலாசம் போவதாகச் சொன்னவள், கைக் குழந்தையைப் பார்த்த பிறகுதான் போக முடியும் என்று கண்டித்துக் கூறி விட்டாள்!

கண்ணபுரத்திலிருந்து சுப்பையா கடிதம் அனுப்பியிருந்தார். மூன்று நான்கு கடிதங்கள் உறைக்குள்ளிருந்து விழுந்தன. தேவகியின் கடிதம், குற்றாலத்துப் பெரியவர் சுப்பையாவுக்கு எழுதியது. சுப்பையா அவருக்குக் கொடுத்திருந்த அறிமுகச் சீட்டு இவ்வளவும் இருந்தன. தணிகாசலம் கடிதங்களைக் காண்பித்துத் தன் புதிய வேலை பற்றிப் பெருமையடித்துக் கொண்டான். இரண்டு மூன்று மாதங்களில் கட்டாயம் வந்து அழைத்துச் செல்வதாய்க் கௌரியின் கண்ணீரைத் துடைத்தான். "உன்னை விட்டு விட்டு முன்போல் என்னால் இருக்க முடியாது, கௌரி! நிச்சயமாய்க் குற்றாலத்தில் புதுக் குடும்பம் நடத்துவோம்" என்றான்.

மங்களத்துப் பாட்டி ஏற்கனவே ஒருமுறை குற்றாலம் போய் வந்தவள். அவள் தன் பேத்திக்கு ஆறுதல் கூறினாள்: "கௌரி! பிள்ளையாண்டான் உன்னை மறந்தாலும் அவன் போகிற ஊர் உன்னை மறக்கவிடாது. குற்றாலத்து அருவியும் குளிர் காற்றும் புது மாப்பிள்ளைகளைப் பைத்தியமாய் அடித்து விடும். தன்னால் ஓடி வந்து உன்னை அழைத்துக் கொண்டு போகிறானா, இல்லையா, பார்!"

குடும்பமே வழியனுப்ப அவன் குற்றாலம் புறப்பட்டான்.

## அத்தியாயம் 30

# தந்தையும் மகளும்

திருச்சி சந்திப்பில் ரயில் மாற்றிக் கொள்வதற்காக அவசரமாகப் பொன்வயல் வண்டியிலிருந்து இறங்கி அடுத்த 'பிளாட்பார'த்துக்குச் சென்றான். அட்டவணையில் குறிப்பிட்டபடி திருவனந்தபுரம் எக்ஸ்பிரஸ் புறப்படுவதற்கு ஐந்து நிமிஷங்களே இருந்தன. ஆனால் வண்டி வந்து சேரவில்லை. 'செங்கோட்டை வழியாகத் திருவனந்தபுரம் செல்லும் எக்ஸ்பிரஸ் சுமார் இருநூறு நிமிஷங்கள் தாமதமாக வந்து சேரும்' என்று ஒலிபெருக்கிகள் அறிவித்தன. அப்போது இரவு மூன்றரை மணி. தணிகாசலம் பிளாட்பாரத்திலேயே ஒரு குட்டித் தூக்கம் போட்டு எழுந்தான். காப்பி சாப்பிட்டு விட்டுத் தயாராவதற்கும் வண்டி வருவதற்கும் சரியாக இருந்தது. பொழுது நன்றாய் விடிந்துவிட்டது.

பட்டாளத்தார்கள் நிறைந்த பெட்டியில் ஒரு மூலை காலியாகக் கிடந்தது. ஏற்கனவே பட்டாளத்தாரல்லாத நான்கு பிரயாணிகள் அதில் வசதியாக வந்தார்கள். தணிகாசலமும் ஏறிக் கொண்டான். நால்வரில் இரண்டு பேர்கள் வியாபாரிகள் போல் தோன்றியது. அடுத்த இரண்டு பேர்கள் தகப்பனும் பெண்ணும். தகப்பனுக்கு நாற்பது ஐம்பது வயதிருக்கலாம்! பெண்ணுக்குப் பதினைந்து பதினாறுக்குமேல் இருக்காது.

"அப்பா! அப்பா! திருச்சி வந்து விட்டது" என்று தன் தந்தையை எழுப்பினாள் பெண். "காப்பி சாப்பிடலாம், எழுந்திருங்கள், அப்பா!"

சன்னல் வழியே இருவரும் காப்பி-பலகார வண்டியை எட்டிப் பார்த்தார்கள். வண்டி பெட்டியின் மறு மூலைக்கு வருவதற்குள் பட்டாளம் அதைச் சுற்றி வளைத்துக் கொண்டது. காய்ந்துபோன கடைசிப் பூரியைக்கூட அது விட்டு வைக்கவில்லை. "இனிமேல் வண்டிகூட மிஞ்சாது, அப்பா!" என்று உதட்டைப் பிதுக்கினாள் பெண். அத்துடன், "காப்பி

சாப்பிடாவிட்டால் என்னுடைய தலை வெடித்துப் போகும்'' என்றும் அப்பாவைப் பயமுறுத்தினாள்.

இருவரும் கீழே இறங்கித் தொலைவிலிருந்த காப்பிக் கடைக்குச் சென்றார்கள். பார்த்தால் பட்டணத்து மனிதர்கள் போல் தோன்றியது. எதிரில் கிடந்த பெரிய தோல் பையில் பெரியவரின் பெயர் ஒட்டியிருந்தது: சந்திரசேகரன், தத்துவப் பேராசிரியர், புதுதில்லி. தணிகாசலம் பைக்குப் பக்கத்திலிருந்த பத்திரிகைகளையும் புத்தகங்களையும் பார்த்தான். புத்தம் புது 'மலர்க் கொத்து' அவன் கண்ணில் பட்டது. இன்னும் அது திருச்சிக்கு வரவில்லை. எடுத்துப் பிரித்தான். அரிசிப் பங்கீட்டுக் கடையில் அவனுக்கு அடிவாங்கிக் கொடுத்த அந்தச் சிறுகதை வெளியாகி இருந்தது. புரட்டிப் பார்த்து விட்டு எடுத்த இடத்திலேயே வைத்து விட்டான். மூக்கையும் உதட்டையும் ஒரு முறை தொட்டுப் பார்த்துக் கொண்டான்.

போனவர்கள் போனவர்கள்தாம்.

வண்டி நகரும் வேளையில் பெண்ணைப் பிடித்து இழுத்துக் கொண்டு இரைக்க இரைக்க ஓடி வந்தார் பேராசிரியர். வண்டிக்கு அருகில் வந்தவுடன் வெடுக்கென்று கையை உதறிக் கொண்டு விட்டாள் பெண். அவர் மட்டிலும் முன்னால் ஏறிக் கொண்டார். பிறகு, ''உமா! உமா!'' என்று கத்தினார்.

உமா அலட்சியமாய்ச் சிரித்து விட்டு, நாலெட்டு எடுத்து வைத்து, மேல்படியில் ஒரு காலும் கீழே ஒரு காலுமாய்த் தொங்கிக் கொண்டு நின்றாள். ஒரு கையால் கதவுப் பிடியைப் பிடித்துக் கொண்டுதான் இருந்தாள். என்றாலும் தணிகாசலம் பயந்தே போய் விட்டான்; கீழே விழுந்து தொலைத்துத் தலை நொறுங்கினால் என்ன செய்வது?



முரட்டுத்தனமாய் அவளைப் பிடித்து இழுத்து உள்ளே தள்ளினான். தகப்பனாரின் மேல் போய்ப் 'பொத்'தென்று விழுந்தாள் பெண். அவளுக்கு மூக்கின் மேல் கோபம் வந்து விட்டது. தகப்பனார் அவனுக்கு நன்றி கூறியதையும் மீறிக் கொண்டு முறைத்துப் பார்த்தாள். அத்துடன் விடவில்லை. ''உங்களை யார் என் வம்புக்கு வரச் சொன்னது?'' என்று கேட்டு, ''எனக்கு இதைவிட வேகமாய் ஓடும் ரயிலில் ஏறத் தெரியும்!'' என்று பெருமையடித்துக் கொண்டாள்.

தணிகாசலத்துக்கும் கோபம் வந்தது. ''விபத்து நடந்தால் வண்டி புறப்படத் தாமதமாகும்; எனக்குச் சீக்கிரம் போய்ச் சேர வேண்டும்'' என்றான்.

''பெரிய உதவி செய்து விட்டதாக எண்ணம்'' என்றாள் உமா.

''சும்மா இரு, உமா!'' என்று குறுக்கிட்டார் அப்பா. ''வம்புக்குப் போகிறாயே?''

''யாரப்பா வம்புக்குப் போனது? இவருக்கு என்ன அக்கறை வந்ததாம்?''

'மண்ணாங்கட்டி!' என்று தனக்குள் நொந்து கொண்டான் தணிகாசலம். தேவகியோ குற்றாலத்துக்குப் போய் வீண் வம்பில் அகப்பட்டுக் கொள்ள வேண்டாம் என்று எச்சரிக்கை செய்திருந்தாள். ஆனால் வீண் வம்போ குற்றாலம் வரை பொறுத்திருக்காமல், திருச்சி சந்திப்பிலேயே சந்தித்து விட்டது!

தணிகாசலம் தான் கொண்டு வந்திருந்த புத்தகங்களை எடுத்துப் பக்கத்தில் அடுக்கிக் கொண்டு ஒன்றைப் பிரித்தான். இரண்டு பக்கங்களைக் கூடச் சரியாகப் படிக்க விடாமல் அவள் அங்கே அப்பாவிடம் ரகளை செய்து கொண்டு வந்தாள். ரயிலையே கொள் முதல் செய்து விட்டவள் போல் அவள் அதற்குள் கூத்தடித்தாள். அப்பா அவளுக்குக் கொடுத்த செல்லமோ கொஞ்சம்கூடச் சகிக்கக் கூடியதாக இல்லை.

''அப்பா, அப்பா! இங்கே வந்து பாருங்களேன், கொக்கு பறக்கிறது! பெரிய பெரிய கொக்கு அப்பா!''

'மக்கு!' என்று திட்டினான் தணிகாசலம். பேராசிரியர் எழுந்தோடி அதையும் வேடிக்கைபார்த்தார்.

''ஆமாம், உமா! கொக்குதான்! பெரிய கொக்கு!''

அவள் வடக்கே காட்டினாள்; இவர் தெற்கே பார்த்துக் கொண்டு 'ஆமாம்' போட்டு வைத்தார்.

''போய், போய்! இந்தப் பக்கம் பாருங்கள், அப்பா! அழகாக, வரிசையாகக் காலை மடக்கிக்கொண்டு, சிறகை விரித்துக்கொண்டு...''

எந்தப் பக்கம் பார்த்தாலும் அவருக்கு ஒன்றுதான். அவர் போட்டுக் கொண்




# கலிங்கா டியூப்ஸ்

**தண்ணீர், காஸ், எஃகு, கலாய்**
**குழாய்கள் அரை அங்குலம்**
**முதல் இரண்டு அங்குலம் வரை**

(B. S. S. 1387/1947 :- Class A & B)

## கலிங்கா டியூப்ஸ் லிமிடெட்

**33, சித்தரஞ்சன் அவின்யூ, கல்கத்தா-12**

(பாக்டரி: சௌத்வார், கட்டாக்)



கேரளம், சென்னை, பாண்டிச்சேரி, மைசூர், ஆந்திர ராஜ்யங்களுக்கு
பிரத்தியேக விநியோகஸ்தர்கள்:

| | |
|---|---|
| சௌத் இந்தியா கார்ப்பரேஷன் (ஏஜன்ஸீஸ்) பிரைவேட் லிட்.<br>2, அர்மீனியன் தெரு - சென்னை-1 | எம். சி. சுந்தரராஜன் & கம்பெனி<br>280, லிங்கி செட்டித் தெரு<br>தபால் பெட்டி நெ. 182 - சென்னை-1 |



தென் பிராந்தியத்திற்கு ஸோல் ஏஜண்டுகள்:

**டியூப் ஸப்ளையர்ஸ் லிமிடெட்**
2, அர்மீனியன் தெரு - - சென்னை-1

டிருந்த மூக்குக் கண்ணாடி சோடா பாட்டில் அடி மூடி!

''அதோ பாருங்கள், அப்பா, கொடைக்கானல் மலை!''

''ஆமாம், கொடைக்கானல் மலை...''

''என்னை அடுத்த லீவுக்கு அங்கே அழைத்துக் கொண்டு போகிறீர்களா?''

''ஓ!''

''என்ன, 'ஓ?'—பொய்! இன்னும் டில்லிக்கே என்னை நீங்கள் அழைத்துக் கொண்டு போகவில்லை.''

''டில்லிக்கு என்ன? நீ சமர்த்தாய்ப் படித்துக் கொள்; லண்டன், அமெரிக்கா ஜப்பான் எல்லாம்...''

அடுத்த பலகையிலிருந்த பட்டாளத்துக்காரனுக்கும் இது பொறுக்கவில்லை. ''பட்டாளத்தில் சேர்ந்தால் அரேபியாவுக்கே போகலாம்'' என்றான்.



தணிகாசலம், 'இவன் பட்டாளத்துக்குப் போனால் வாய்ச் சண்டை போட்டே எதிரியை விரட்டி விடுவான்' என்று நினைத்துக் கொண்டான். பெண்ணைப் பெண்ணாக வளர்க்காமல் ஆண் பிள்ளையாக வளர்க்கிறார் என்று அவர்மேல் கோபம் தணிகாசலத்துக்கு. ஆண்பிள்ளைகள்கூட ஓடும் ரயிலில் ஏறுவதற்கு அஞ்சுவார்கள்.

தகப்பனாரை இந்தச் சன்னலுக்கும் அந்தச் சன்னலுக்கும் இழுக்க அடித்துத் திணறவைத்தாள் பெண். தகப்பனார் தகப்பனாராக இல்லை. கைக் குழந்தையாக, பச்சைப் பாலகனாக மாறினார். அந்தக் குழந்தைக்கு, கண் பார்வைக்குக் கண்ணாடியை நம்பியிருந்த குழந்தைக்கு, அவள் பசுமை கமழும் நெல் வயல்களைக் காட்டினாள். தளிர் நடுங்கும் வெற்றிலைக் கொடிக்கால்களையும், குலை தள்ளிநிற்கும் வாழைத்தோட்டங்களையும் காட்டினாள். தந்திக் கம்பிகளில் அலகுகளைக் கூராக்கும் தவிட்டுப் புறாக்களை அவள் சுட்டிக் காட்டியபோது தகப்பனார் தம்மை மறந்து கைகொட்டிச் சிரித்தார்.

பிறகு இருவரும் தங்களுடைய சொந்த விவகாரங்களைப் பற்றிச் சற்று நேரம் பேசிக் கொண்டார்கள்.

தணிகாசலம் அந்தப் பேச்சிலிருந்து சில தகவல்களைத் தெரிந்து கொண்டான். பேராசிரியர் தம்முடைய பெண்ணைச் சென்னையில் படிக்க வைத்துவிட்டுத் தில்லியில் வேலை பார்க்கிறார். அவருடைய தமக்கை வீட்டில் உமா வளர்ந்து வருகிறாள். அவளுக்குத் தாயார் இல்லை. 'இண்டர்' கால் வருடத் தேர்வு எழுதிவிட்டு விடுமுறையில் அப்பாவோடு குற்றாலத்துக்கு வருகிறாள்.

மதுரை சந்திப்பில் சாப்பிடுவதற்காக இறங்கிய தணிகாசலம் வேறு பெட்டியில் இடமிருக்கிறதா என்றுபார்த்தான். 'தெரியாமல் அதில்போய் ஏறிவிட்டோம்; அவள் போடுகிற கூச்சலில் ஒன்றுமே படிக்கமுடியாது. இரண்டு புட்டி தலைவலித் தைலமாவது இருந்தால் குற்றாலத்தில் பத்திரமாக இறங்கலாம்' — ஆனால், எங்குமே இட நெருக்கடி மிகுந்திருந்ததால் திரும்பவும் பழைய இடத்தில் வந்து உட்கார்ந்தான்.

ரயில் மதுரையை விட்டு நகர்ந்தவுடன் அவளுடைய ஆர்ப்பாட்டங்கள் ஒரு வழியாக ஓய்ந்தன. தகப்பனார் ஒரு தத்துவ விசாரணைப் புத்தகத்துக்குள் தலை கொடுத்தார். மகள் 'மலர்க் கொத்தை'ப் பிரித்துக் கொண்டு உட்கார்ந்தாள். மதுரை மீனாட்சியம்மனுக்கு நன்றி சொல்லி விட்டுத் தணிகாசலம் தன்னுடைய குறிப்புப் புத்தகத்தை எடுத்துச் சில வரிகள் கிறுக்கிக் கொண்டான். நடப்புக்களையும் மனிதர்களையும் பற்றி அவ்வப்போது குறிப்பெடுத்துக் கொண்டால் எப்போதாவது கதைகளுக்குப் பயன்படுத்தலாமல்லவா?

'பேராசிரியர் படிப்பாளி; மற்றவர்களுக்குப் பெரிய மனிதர்: அவருடைய குழந்தைக்குக் குழந்தை. கிராப்புத் தலையில் புது நரை விழுந்து விட்டிருக்

கிறது. வெள்ளைநிற ஜுப்பாவும் எட்டு முழ வேட்டியுமாய் எளிமைத் தோற்றத்தில் இருக்கிறார். ஒல்லியாகத் தோன்றினாலும் நல்ல உடற்கட்டு; நல்ல உயரம்.

'உமாவுக்கு ஒடித்து மடியில் கட்டிக் கொள்வது போன்ற மெல்லிய உடம்பு. காடுபோல் தலைமயிர் மண்டிக் கிடக்கிறது. அப்படியொன்றும் பேரழகி என்று சொல்லிவிட முடியாது. ஆனால் சிற்றுளியால் செதுக்கியதுபோல் எடுப்பான மூக்கு. கண்கள் கூடப் பெரிய கண்கள் இல்லை. நீண்டுகறுத்த கண்களில் கரு விழிகள் மட்டிலும் பெரிது பெரிதாய்த் தோன்றுகின்றன. அவளுடைய கட்டித்தனத்தையும், பந்து போல் குதித்தாடும் சுபாவத்தையும் அந்தக் கருவிழிகள் காட்டுகின்றனவா?—சிடுசிடுப்பும் குதூகலமும் மாறி மாறித் தோன்றக் கூடிய ஓர் கதாபாத்திரம்.

நஷ்டத்தில் லாபமடைய நினைத்த தணிகாசலம் குறிப்பை மூடித்துவிட்டு, வெளி உலகக் காட்சிகளை வேடிக்கை பார்த்துக் கொண்டு வந்தான்.

பத்து நிமிஷங்கள் சென்றன.

ரயிலுக்குள்ளே இலேசான விசும்பல் சத்தம் கேட்டது. திரும்பிப் பார்த்தான். உமாவின் கண்களில் இருநீர்க் கோடுகள்!

''என்ன உமா இது!'' பேராசிரியர் திடுக்கிட்டார். ''எதற்கு அழுகிறாய்?''

''அவனைப் போட்டு அடித்து விட்டார்கள், அப்பா! பாவம், ரத்தக் காயம் அவனுக்கு...''

''யாரைப் போட்டு அடித்தார்கள்?''

சுற்று முற்றும் பார்த்தார் தகப்பனார். யாரும் யாரையும் அடிக்கவுமில்லை; யாருக்கும் ரத்தக் காயம் வரவும் இல்லை.

''என்ன உமா உளறுகிறாய்?''

''போங்களப்பா! இதைப் பாருங்கள். நீங்கள் இதைப் படித்தீர்களோ?'' பத்திரிகையை அவரிடம் நீட்டினாள். ''கடைக்காரன் அவனைப் புரட்டி எடுத்து விட்டான், அப்பா...''

பேராசிரியர் பெரிதாய்ச் சிரித்தார்.

''போங்களப்பா! உங்களுக்கு எதற்கு எடுத்தாலும் சிரிப்புத்தான்.'' பத்திரிகையை வெடுக்கென்று பிடுங்கிக் கொண்டாள்.

தணிகாசலமும் முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டு சிரித்தான். தன்னுடைய கதை அது என்பது அவளுக்குத் தெரிந்து விட்டது. பிறகு மெதுவாக அவளைத் திரும்பிப் பார்த்தான். அவன் பார்வையிலிருந்த பரிகாசம் அவளுக்குக் கோபம் மூட்டியது. 'நீ ஒன்றும் என்னைப் பார்க்க வேண்டியதில்லை' என்று சொல்வதுபோல் பத்திரிகையால் முகத்தை மூடிக் கொண்டாள்.

''அசடு! பொய்க் கதையைப் படித்து விட்டு இப்படி யாராவது அழுவார்களா?'' என்றார் தந்தை.

தணிகாசலத்தின் கேலிச்சிரிப்பு மறைந்தது. பொய்க் கதையா அது?

''பொய்யை மெய்போல் சொல்வது தான் கதை உமா! அந்தப் பயல் உன்னை ஏமாற்றி விட்டான்'' என்றார்.

தணிகாசலத்துக்கு எரிச்சல் வந்தது. 'நீர்தாம் அவளை ஏமாற்றுகிறீர்; மெய்யைப் பொய் போலச் சொல்வதும் கதை தான்' என்று அவரிடம் சொல்லத் தோன்றியது அவனுக்கு. இருந்தாலும் தன்னை அடக்கிக் கொண்டான்.

இதுவரையில் உமாவை அடியோடு வெறுத்து வந்த தணிகாசலம் முதன் முறையாக அவள் மீது அனுதாபம்கொண்

டான். இருபது முப்பது கதைகளுக்கு மேல் அவன் எழுதியிருந்தும், செங்கமலம் முதல் கடிதம் எழுதியதைத் தவிர, ஒருவருமே அவனை மனம் விட்டுப் பாராட்டியதில்லை. முன்பின் தெரியாத ஒரு சிறுமி அவன் உணர்ச்சியைப் புரிந்து கொண்டோ, புரிந்து கொள்ளாமலோ அந்த இடத்தில் வெளிப்படுத்தியது ஆயிரம் பேர்கள் பாராட்டியதைப்போல் இருந்தது. அவன் வாங்கிய அடி வீண் போகவில்லை. அன்றைக்குத் தான் பட்ட வேதனைக்காக, தனக்கு முன்பின் தெரியாத ஒருத்தி இன்றைக்கு ஓடும் ரயிலில் தேம்பி அழுகிறாள்!

சன்னல் பக்கம் திரும்பி அவன் மூக்கையும் உதட்டையும் தொட்டுப் பார்த்துக் கொண்டான். மறைந்து போன வலியனைத்தும் மீண்டும் வேதனை தருவது போல் தோன்றியது.

பிறகு அவர்கள் இருவரும் புத்தகங்கள்-கதைகள் பற்றித் தங்களுக்குள் சண்டை போட்டுக் கொண்டு வந்தார்கள். அவர்களுடைய பேச்சில் உயிருடன் உள்ள மனிதர்கள் எவரும் அடிபடவில்லை. கதாபாத்திரங்களை திரும்பத் திரும்ப வந்தார்கள். 'சரியான புத்தகப் பூச்சிகள்' என்று நினைத்துக் கொண்டான்.



தென்காசிக்கு முதல் ஸ்டேஷனை கடையநல்லூரில் ரயில் நின்று புறப்பட்டவுடன் குற்றாலத்துக் குளிர் காற்று நல்வரவு கூறியது.

தென்காசி ரயிலடியில் பேராசிரியரையும் அவர் பெண்ணையும் ஒரு வயதான மனிதர் வந்து வரவேற்றார். அவருடன் வந்திருந்த வேலையாள் சாமான்களை இறக்கி வைத்தான். தணிகாசலமும் கீழே இறங்கி ஒன்றும் புரியாமல் நாலா பக்கமும் பார்த்தான். ரயில்வேக் கூலிகளைக் கூப்பிடலாமென்றால் அவர்களும் அகப்படவில்லை.

இதற்குள் அவர்களை வரவேற்க வந்த மனிதரின் சொற்கள் அவன் காதுகளில் விழுந்தன: ''இந்த வண்டியில் தணிகாசலம் என்றொரு பையன் வருகிறான். கொஞ்சம் பொறுங்கள்; அவனையும் தேடிப் பார்க்கிறேன்'' என்றார் அவர்.

''தணிகாசலமா?'' என்று கேட்டாள் உமா. ''கதை எழுதுகிறாரே, அந்தத் தணிகாசலமா?''

''அவனேதான்.''

தணிகாசலம் உற்சாகத்துடன் அவரிடம் நெருங்கிச் சுப்பையாவின் கடிதத்தை நீட்டினான். ''சுப்பையா அண்ணா கொடுத்தார்கள்...நான்தான் அது...''

''அட! நீதானா?'' பெரியவர் அவனை அன்போடு இறுக்கிப் பிடித்தார். ''பையனையும் ஒன்றாய் அழைத்துக் கொண்டு வந்து விட்டீர்கள்'' என்று சந்திரசேகரவிடம் கூறினார்.

உமாவுக்குத் தூக்கிவாரிப் போட்டது. திறந்த வாய் திறந்தபடி, கண்ணின் கருமணிகள் சுழலும்படி, கீழுதட்டில் விரலைப் பதித்துக் கொண்டு, விந்தை மனிதனைப் பார்ப்பது போல் உமா பார்த்தாள். காட்டில் பிடித்து வந்த யானை ஒன்றை வீட்டில் வளரும் குழந்தை பயத்தோடு வேடிக்கை பார்க்குமே அந்தப் பார்வை!

தகப்பனார் அவள் தோளைப் பற்றிக் குலுக்கினார். ''உமா! பையன் பொல்லாத பையன்; உன்னை ரயிலில் அழவைத்துவிட்டு, 'அது நான் தான்' என்று சொல்லாமல் வந்தாரே, அந்தப் பையன். கவனமாக இரு! இவரிடம் போய் நீ சண்டை போட்டுக் கொண்டு விட்டாயே?''

தகப்பனார் சிரித்தார்.

அவளுக்குச் சிரிப்பு வரவில்லை. பயத்தோடும் மரியாதையோடும் அவள் கண் இமைகள் படபடத்தன.

வண்டியோட்டி முன்னால் உட்கார்ந்து கொள்ள, மற்ற நான்கு பேர்களையும் சுமந்து கொண்டு துள்ளி ஓடியது காளை மாடு. 'ஜல், ஜல்' என்று கழுத்துச் சதங்கை பின்னணி கூட்டியது. அப்பாவுக்கு அருகில் கோழிக்குஞ்சு போல் ஒளிந்துகொண்டு வந்த உமா தணிகாசலத்தை நொடிக்கு நூறு தடவைகள் திரும்பிப் பார்த்தாள். தணிகாசலம் வண்டிக்கு முன்னால் நீண்டு கிடந்த மருத மரச் சாலையையும், மரங்களுக்குப் பின் தெரிந்த குன்றுகளையும், குன்றுகளில் குடியிருந்த பனிக்குவியலையும் உற்றுப் பார்த்தான். அவைகளினூடே இருந்துகொண்டு அவனுடைய கௌரி சிரித்தாள்.

(தொடரும்)

# மக்ளீன்ஸ் *இப்போது* பற்களை முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்கிறது!



மகத்தான ஓர் செய்தி! மக்ளீன்ஸ் தயாரிப்பில் இப்போது வியக்கத்தக்கதோர் புதிய பொருள் சேர்க்கப்படுவதால் அதை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யும்பொழுது பற்கள் முன்னைவிட அதிவெண்மையாகவும் சுத்தமாகவும் விளங்குவதுடன் நல்ல ஆரோக்கியத்தைக் குறிக்கின்றது. நீங்களும் மக்ளீன் பற்பசையை உபயோகித்து உங்கள் பற்கள் எவ்வளவு வெண்மையாக விளங்குகின்றன 'என்று கவனியுங்கள்.

## மக்ளீனால் வெண்மையாக்கப்பட்ட பற்கள்

## ஆரோக்கியமானதுமட்டுமல்லாமல் பற் சிதைவினின்றும் காப்பாற்றப்படுகின்றன

மக்ளீன்ஸ் பற்பசையினால் பற்களை சுத்தம் செய்யுங்கள். முதலில் குளுமையும் புதுமை மணம் கமழுவதையும் உணர்வீர்கள். பின்பு பற்கள் முன்னைவிட அதிவெண்மையாக சுத்தம் செய்யப்பட்டிருப்பதை குறிக்கின்றது. உங்களுடைய பற்களின்மேல் படர்ந்திருக்கும் வழுவழுப்பான அசுத்தத்தில் 'லைப்பாவிட்ஸ்' என்று கூறப்படும் அசுத்தம் கலந்திருக்கிறது இந்த 'லைப்பாவிட்ஸ்' முறையே சரிவர அகற்றப்படா விட்டால் அமிலங்கள் பற்களின் இனாமலை அரித்து, பற்கள் சிதைவடைகின்றன. 'லைப்பாவிட்ஸ்'ஸை அறவே அகற்ற, இதை கரையச் செய்வதுதான் சரியான வழி. மக்ளீன்ஸ் பற்பசை ஒன்றில் மட்டுமே 'லைப்பாவிட்'ஸை கரைக்கக்கூடிய விசேஷ பொருள் சேர்க்கப்பட்டிருக்கிறது. இது 'லைப்பாவிடஸை' மிருதுவாக, அபாயமின்றி. சீக்கிரத்தில் கரைத்து அப்புறப்படுத்துகிறது. இதுவே பற் சிதைவினின்றும் பற்களைத் தவிர்ப்பதற்கான சிறந்த மார்க்கம்.

சுத்தமான, வெண்ணிற, ஆரோக்கிய பற்களை அடைய தினந்தோறும் காலையிலும் இரவிலும் மக்ளீன்ஸ் பொராக்ஸைட் பற்பசையை உபயோகித்து பற்களைச் சுத்தம் செய்யுங்கள்.

**மக்ளீன்ஸ் பற்களை**
**அதிவெண்மையாக**
**சுத்தம் செய்கிறது**




MTY 43 TAM

# நாட்டு வைத்தியம்

ஸ்ரீஹரி

## 39. அதே பல்லவி

"ந அபிருஷ்ட: கஸ்யசித்ப்ரூயாத்" என்று வடமொழியில் ஒரு முதுமொழி. விரும்பிக் கேட்டாலன்றி யாருக்கும் எதையும் சொல்லக் கூடாது என்பது தான் இதன் கருத்து.

இதைப் பன்மடங்கு வலியுறுத்தும் வகையில் தமிழிலும் மேற்கோள்கள் இருக்கின்றன.

இதை மறந்து நாம் செய்யத் துணியும் கருமத்தின் பலனைத்தான், விழலுக்கு இறைத்த நீர், செவிடன் காதில் ஊதிய சங்கு என்னும் பழமொழிகளால் தெரிவிப்பது வழக்கம்.

ஸ்ரீமான் சுப்பன் நண்பர் குப்பனை பஸ் ஸ்டாண்டில் சந்திக்கிறார். இருவரும் 'இஹி ஹி' என்று இளித்தபடி 'வணக்கம்' என்று ஒருவரை யொருவர் கும்பிடு கின்றனர்.

பிறகு சுப்பன் குப்பனைப் பார்த்து, "எங்கே! தி. நகருக்குப் போறீங்களா?" என்று கேட்கிறார்.

குப்பன்: "இல்லீங்க, கொஞ்சம் முக்கியமான அலுவலுங்க. தி. நகர் வரையிலும் போய் வரலாமென்று புறப்பட்டேனுங்க."

சுப்பன் : "ஓகோ! அப்படீங்களா...! ஒருகால் தி. நகருக்குத்தான் போறீங்களோ என்று நினைத்தேன்."

இப்படி இரண்டு செவிடரின் சம்பாஷணையைக் கேட்டுக் கொண்டு அருகில் நின்றுகொண் டிருந்தவருக்குச் சிரிப்பை அடக்க முடியவில்லை.

இதைக் கண்டு சுப்பனும் குப்பனும், "என்ன சிரிக்கிறீங்க?" என்று ஏக காலத்தில் கேட்டனர்.

சிரித்தவர் பதிலொன்றும் சொல்லாது எட்ட நகர்ந்தார்.

இதைக் கண்ட சுப்பனும் குப்பனும், "பாவம் ஆசாமிக்குக் காது கொஞ்சம் மத்திமம் போலிருக்கிறது" என்றனர்.

நாட்டு வைத்தியம் பற்றி எழுதும் கட்டுரைகள் இப்படியாகக் கூடாதே என்ற கவலை பேலிடுகிறது. முக்கியமாக, தமிழ் மொழியிலுள்ள சித்தர் சமைத்த நூல்களிலிருந்து தேடித் தெளிந்து சொல்லும் முறைகள் இவ்விதமாகக் கூடாதென்ற கவலை நெஞ்சில் இடம் பெறுகிறது. வாசகர்களின் பதில்களை எதிர்பார்க்கிறேன்.

தனிப்படக் கேட்டவருக்கு அளித்த ஆலோசனைப்படி அவரவரே நாட்டு வைத்திய முறைகளைக் கையாண்டு வியக்கத்தக்க பலனையடைந்துள்ள விவரங்களை நன்றியுடன் எழுதித் தெரிவித்துள்ளனர். வேறு சிலர் நேரில் கண்டபோது தெரிவிக்கின்றனர். இந்த இரண்டாவது இனத்தைச் சேர்ந்த நண்பர்களும் தாம் அடைந்த பலனை யெல்லாம் எழுதித் தெரிவிப்பராஞல் ஏனைய வாசகர்களின் நலனுக்காகப் பிரசுரிக்க இயலும்.

இன்ன மருந்து இன்ன வியாதியில் பயன் தரும் என்று சாஸ்திரம்.... அல்லது எனது அனுபவம் என்று வாசகர்களுக்குத் தெரிவிப்பதை விட, வாசகருள் ஒருவரான இன்னர் இன்ன வியாதியில் இன்ன மருந்தைத் தானே செய்து உபயோகித்துக் குணமடைந்தார் என்று தெரிவிப்பது அதிக நம்பிக்கையையும் ஊக்கத்தையும் ஊட்டுமல்லவா? தாம் அடைந்த பலனைத் தரணியோர்க்கு ஈவதுதான் தருமம். எனவே, மேற்சொன்ன இரண்டாவது இனத்தைச் சேர்ந்த நண்பர்களுக்கு மேற்கண்ட வேண்டுகோள்.

சிரங்கு, சொறி புண்கள் விஷயமாகத் தெரிந்தெடுத்த மருந்துகளில் மேலும் சிலவற்றைத் தெரிவிக்கிறேன். சென்ற கட்டுரையில் 13 முறைகளைத் தெரிவித்திருந்தேன். இனி,

14. ஓம லேகியம் : ஓமம் பலம் 100. இதைச் சற்று இடித்து 4 மரக்கால் ஜலத்தில் இட்டுக் காய்ச்சி நாலிலொன்றாகக் குறுக்கி, மருந்தைக் கசக்கிப் பிழிந்து களைந்து கஷாயத்தை வடிகட்டிக் கொள்ளவும்.

இக் கஷாயத்தில் பூராச்சர்க்கரை 10 பலத்தைக்கரைத்துமறுபடியும்வடிகட்டி, பிறகு பாகாகக் காய்ச்சிக் கொள்ளவும்.

இப் பாகில், அமுக்கிராங் கிழங்கு, சுக்கில், பறங்கிப்பட்டை, கார்போகரிசி ஆகியவற்றில் வகைக்குப் பலம் ஒன்று விதம் பொடித்துத் தூவி ஒரு நாழி நெய் விட்டுக் கிளறிக் கிண்டி இலேகியமாக்கி வைத்துக் கொள்ளவும். இதில் வேளைக்கு 1 வராகனிடையாகக் காலை மாலை உட்கொண்டு - காய்ச்சி ஆறிய பாலில் ஒரு வாய் அனுபானமாகக் குடிக்கவும். இதனல் சிரங்கு, புண், கரப்பான், நஞ்சுக் கடிகள் ஆகியவை குணமாகும்.

15. கஸ்தூரி மஞ்சளை அரைத்துத் தேய்த்துக் குளித்து வரக் கரப்பான்— சொறி — சிரங்கு நமட்டுச் சிரங்கு ஆகியவைமட்டுமின்றிப் பெருபுண்ணும் குண

மாகும். [சகோதரிகள் கவனிக்க] வேறு மண மூட்டிப் பொருள்களோடு கஸ்தூரி மஞ்சளையும் சேர்த்துக் கடலே-பயறு ஆகியவற்றின் மாவுடன் கலந்து ஆடவரும் உபயோகிக்கலாமெனத் தெளிவது நலம்.

16. கமேலா என்று ஒரு கடைச் சரக்கு. இதைக் கபிலா, கமலா, கம்பில்லம் என்ற வேறு பெயர்களால் அழைப்பதும் உண்டு. இஃது ஒருவகை மரத்தின் பழங்களின் மீது படிந்திருக்கும் சிவந்த பொடி. மருந்துக் கடைகளில் கிடைக்கிறது.

இப் பொடியின் 1 பங்கை 8 பங்கு எண்ணெயுடன் இட்டுக் காய்ச்சி வடிகட்டி மேலுக்குத் தடவிவரச் சிரங்கு, படை முதலியவை தீரும்.

17. கொட்டைக் கரந்தை என்று ஒரு பூண்டு. இது வயல் நிலங்களிலும் தோட்டங்களிலும் வளர்ந்து கிடக்கும். இப்பூண்டு தென்னிந்தியாவுக்கே உரியது.



இப்பூண்டின் சமூலத்தை உலர்த்திப் பொடித்த சூரணத்தையோ — அல்லது அதனால் உண்டாக்கிய குடி நீரையோ, இலையை மட்டும் உலர்த்திப் பொடித்த சூரணத்தையோ சேவிக்க,

"கொட்டைக்கரந்தைதனைக் கூசாம
லுண்டவர்க்கு
............... —துட்டச்
சொறிசிரங்கு வன்கரப்பான் றேற்றுது
நாளும்
..............."

அகத்தியர் இவ்வாறு எழுதி உதவியுள்ளார்.

18. கரிசலாங்கண்ணி என்ற செடியில்-மஞ்சட்பூ உள்ளதொரு இனம். இதைப் பொற்றலைக் கையான் என்றும் சொல்லுவர். இதன் வேர்ப் பொடித்தகை, சிரங்கு சொறிகளுக்கு மட்டுமல்ல; தோலைப் பற்றிய எல்லா ரோகங்களுக்கும் உள்ளுக்குக் கொடுக்கலாம்.

19. கருங்காலி என்னும் கதிரம் குஷ்டம் போன்ற சரும ரோகங்களிலும் நல்ல பலனைக் கொடுக்கிறதென்று அன்றையவர் எழுதி வைத்ததல்லாது இன்றைய ஆராய்ச்சியாளரும் தெளிந்துள்ள விஷயம்.

இம் மரத்தின் பிசினைக் கால்—அரை வராகனிடை அளவில் நீரில் கரைத்து உட்கொள்ளக் கருங்கரப்பான் குணமாகும். சிரங்கு சொறிகளைப் பற்றிச் சொல்லவும் வேணுமா?

20. காஞ்சொறி என்று ஒருவிதக் குத்துச் செடி. இதைப் பூனைக் காஞ்சி என்றுஞ் சொல்வர். இதில் மூன்று வகைகள் உண்டு. குணம் எல்லாவற்றுக்கும் ஏறத் தாழ ஒன்றுதான்.

இக் காஞ்சொறியின் வேர், துளசி இரண்டையும் அரைத்துச் சரும ரோகங்களில் மேலே தேய்த்து வர நமைச்சல் நீங்கும். படைகளில் இதை உபயோகித்துப் பார்த்துக் குறைகுணங்களைத் தெரிவிக்கும்படி நேயர்களுக்கு விண்ணப்பம்.

21. கார்போகரிசி என்று ஒரு கடைச் சரக்கு.

"கார்போக மாமரிசிகண்டாற் கரப்பான்புண்
பீர்சருவ நஞ்சிவை போம்...—பார்மீதில்
வாதகப நமைச்சல் வன்சொறி சிரங்குமறுஞ்
..............."

என்று அகத்தியர் ஓதியுள்ளார்.

கார்போகரிசி, நீரடிமுத்து. கசகசா, பாதாம் பருப்பு, கொப்பரை, கருஞ்சீரகம், காட்டுச் சீரகம் இவைகளை ஒன்று சேர்த்துக் காடி நீர் விட்டு அரைத்து, தேகத்தில் பூசி ஊறவைத்து இள வெந்நீரில் குளிக்கச் சொறி சிரங்கு, அழுக்குப் படை, படர் தாமரை, மற்றுமுள்ள சாதாரண சருமரோகங்கள் குணமாகும்.

இவ்வித்தைப் பசும் பால் விட்டு அரைத்தும் தேய்த்துக் குளிக்கலாம்.

22. கீழ்க்காய் நெல்லி இலையை உப்புச் சேர்த்து அரைத்து மேற்பூசினலும் சொறி சிரங்கு நமைச்சல்கள் குணமாகும்.

23. பறங்கிச் சாம்பிராணி, நல்லெண்ணெய், வெள்ளை மெழுகு வகைக்கு 8 வராகன் எடை எடுத்து, சிறு தீயிட்டு உருக்கி வடிகட்டிக் கொண்டு, படர் தாமரை, நாட்பட்ட சிரங்கு சொறிகள்-புண் முதலியவற்றுக்கு மேற்பூச்சாக உபயோகிக்கக் குணமாகும்.

24. குப்பைமேனி இலையையும் உப்பையும் அரைத்துச் சொறி சிரங்குகளுக்குத் தேய்த்துக் குளித்துவர அவை குணமாகும். இவ்வகைப் பிரயோகங்கள் அனேகம் இருக்கின்றன. இப்போதைக்கு இம்மட்டோடு நிறுத்திக் கொள்ளலாம். (தொடரும்)




எல்லாக் குழந்தைகளும்
விரும்புவது மிக எளிதில்
ஜீரணமாகும் கௌ & கேட்
டாக்டர்களும் தங்களது
சொந்தக் குழந்தைகளுக்கு
தேர்ந்தெடுக்கும் உணவும்
அதுவே இன்றைய உலகில்
கௌ & கேட்டே தலைசிறந்த
உணவாகத் திகழ்கிறது என்
பதற்கு இதுவே தக்க சான்
றாகும். உங்கள் குழந்தைக்கு
கௌ & கேட்டை வற்புறுத்
திக் கேளுங்கள்.

5465

**COW & GATE MILK FOOD**

*The* FOOD *of* ROYAL BABIES

# அடிமையின் காதல்

கௌசிகன்

"குலால்! என்னை நீ 'அரிப்' என்றே பெயர் சொல்லிக் கூப்பிடு. அண்ணா என்று அழைக்காதே."

"ஊஹூம், நான் உங்களை அண்ணா என்று தான் கூப்பிடுவேன். இப்படிக் கூப்பிட யாருமில்லையே என்று எத்தனை ஏக்கம் தெரியுமா எனக்கு? யமுனையிலே மூழ்க இருந்த என்னைக் காப்பாற்றினீர்களே அண்ணா என்னை உங்கள் தங்கையாக ஏற்றுக் கொள்ளக் கூடாதா?"

"குலால்! இந்த உலகிலே உறவினர் என்று சொல்லிக் கொள்ள எனக்கு யாருமில்லை. அந்தக் குறையைப் போக்கிக்கொள்ள உன்னை என் சகோதரியாக ஏற்றுக் கொள்ளுகிறேன். போதுமா! உன் குறும்பு தவழும் கண்களிலே கண்ணீர்த் துளிகள் ஜ்வலிப்பதும் ஒரு தனி அழகாகத்தான் இருக்கிறது."

"அப்பாடா! இப்போதுதான் என் உள்ளம் மகிழ்ச்சியால் நிரம்பி வழிகிறது. அது சரி. அண்ணா! நீங்கள் என்னை ஜனானாவில் பார்த்தேன் என்றீர்களே, பொய்தானே?"

"பொய்யா? நான் பார்த்த அற்புதக்காட்சியைச் சொல்லட்டுமா? கடைந்தெடுத்த ஒரு தந்தச் சிலை. ப்ஹூம்! அது கூடத் தவறு. சிலை என்றால் உயிர் இருக்காதே. ஜீவனுள்ள சிலை என்றும் தந்தத்தின் வெண்மை உயிருப் சதையுமான உருவத்துக்கு ஒப்புவமையாகாதே. ரோஜா இதழ் மேனி துவளும் பசுங் கொடி போன்ற உடல். ஒய்யார நடை... உன் தோளிலே கையைப் போட்டுக் கொண்டு அடிக்கடி மோகனச் சிரிப்பையும் சிந்தவிட்டபடி."

"எங்கள் இளவரசியை அப்படியே வர்ணித்தீர்களே! நீங்கள் எப்படி அண்ணா ஜனானாவுக்குள் வந்தீர்கள்?"

"உன்னுடன் வந்ததே அழகுத் தெய்வம், அதுதான் இளவரசியா?"

"ஆமாம். இளவரசி ஜஹனாரா பேகமே தான்."

"ஓஹோ. ஆலம்பனாவின் அன்புக்கும் அந்தரங்கத்துக்கும் பாத்திரமானவள் என்று கேள்விப்பட்டிருக்கிறேன் இவள்தானா அது?"

"அரசரின் மூத்த மகள்......"

"அழகுக்கும் முதலிடம்......!" என்று ஒரு ஏக்கப் பெருமூச்சை அவிழ்த்து விட்டான் அரிப், எங்கோ பார்த்துக் கொண்டு. அவன் மனத்திரையிலே எத்தனை காட்சி வந்து நடனமாடியதோ, தெரியாது. சற்று நேரம் வரையில் தன்னையே மறந்து உட்கார்ந்து கொண்டிருந்த அவன் எதையோ நினைத்துக் கொண்டவன் போல், "ம்... குலால் எனக்கு ஒரு உதவி செய்வாயா?" என்று கேட்டான்.

"உடனே சொல், அண்ணா, உங்களுக்குச் செய்யாமலா?" என்றாள் குலால்.

"உங்கள் ஜனானாவின் தோட்டக்காரனாக எனக்கு ஒரு வேலை வாங்கித்தர வேண்டும்."

"ஐயோ! ஆண்களை உள்ளே விட மாட்டார்களே. அதுவும் உங்களைப் போன்ற அழகும் ஆண்மை





யும் உள்ள வாலிபர்களையா? உங்கள் திறமைக்கும் காம்பீர்யத்துக்கும் ராணுவத்திலே எத்தனை எத்தனையோ உத்தியோகம் காத்திருக்குமே, அண்ணா!'' என்றாள் குலால்.

''இல்லை, குலால்! கொல்லும் தொழில் எனக்குப் பிடிக்கவில்லை. இயற்கை எழில் கொஞ்சும் ஜமுனையின் பூந்தோட்டத்திலே என் இதயத்தைப் பறி கொடுத்து விட்டேன். உல்லாசமான அந்த உத்தியான வனத்தை ஒப்பற்றதொரு கலைக்கூடமாக்கி, உங்கள் இளவரசிக்குக் காணிக்கையாக அளிக்கப் போகிறேன். குலால்! இளவரசியின் இதயம் போன்ற நீ நினைத்தால் அந்த வேலையை எனக்கு வாங்கித் தரலாம்'' என்றான் அரீப்.

''அப்படியானால் நீங்களும் எனக்கு ஒரு உதவி செய்ய வேண்டும்'' என்று நிபந்தனை விதித்தாள் குலால்.

''என்ன குலால், சொல். உனக்குச் செய்யாமலா?''

''இளவரசி ஜஹானாராவின் முன்னால் நாட்டியமாட எனக்குப் புதிய புதிய பாடல்கள் புனைந்து கொடுக்க வேண்டும்.''

''இவ்வளவுதானே? தேனைப் புறக்கணிக்கும் வண்டு உண்டா? கற்கண்டைச் சுவைக்கக் கூலியா கேட்பார்கள்? உன் இளவரசியின் அகம் குளிர ஆயிரம்பாடல் இசைத்துத் தருகிறேன். ஆனால் ஒன்று...'' என்றான்அரீப்.

''என்ன?'' என்று கேட்டாள்.

''நான் இயற்றித் தரும் பாடல்களை நீயே இயற்றியதாகச் சொல்ல வேண்டும். அது மட்டுமல்ல, உனக்கு அரீப் என்று இப்படி ஒரு அசட்டு அண்ணன் இருப்பதாக யாரிடமும் எந்தச் சந்தர்ப்பத்திலும் நீ சொல்லவே கூடாது.''

''ஆகட்டும், அண்ணா! நீங்களும் தோட்டக்காரனாக, உங்கள் இளமையையும் அழகையும் மறைத்துக் கொண்டு கிழவனாக மாற வேண்டும்.''

''அப்படியே மாறுகிறேன், அம்மா!'' என்று நடுங்கும் குரலில் கிழவனைப் போலவே பேசினான் அரீப். அதைத் தொடர்ந்து இருவருமே கலகலவென்று பலமாகச் சிரித்து விட்டார்கள்.



ஆக்ராவின் சாதாரணப் பிரஜைகளில் ஒருவன் அரீப்; அழகன். அற்புதமாகப் பாடல்களை இயற்றும் ஆற்றலையும் அவனுக்கு ஆண்டவன் அளித்திருந்தான். அழகை ஆராதிக்கும் உள்ளம் படைத்த நாடோடியான அவன் பார்வையிலே ஒருநாள் ஷாஹின்ஷா ஷாஜஹானின் அருமைப் பெண் ஜஹானாரா பேகம் பட்டுவிட்டாள். இளவரசியின் எழிலிலே தன்னை மறந்தான் அரீப்; அத்தகைய அற்புத வடிவை அவன் கண்டதே இல்லை. அன்று முதல் அவன் கண்களை மூடினாலும், திறந்தாலும் அவளது எழிலுருவம்தான் முன்னால் வந்து நின்றது.

ஆண்டியான அவன் அரசகுமாரியான அவளைப் பற்றி நினைப்பது பைத்தியக்காரத்தனம் என்பது அரீபுக்குத் தெரியாமலில்லை. ஆனாலும் அந்த அழகை அவனால் மறக்க முடியவில்லை. நெஞ்சிலே பதிந்து விட்ட அவள் நினைவைப் பிய்த்து எடுக்க முடியாமல் பித்துப் பிடித்தவனைப் போல் சுற்றிக் கொண்டிருந்தான். மறுபடியும் அவளைப் பார்க்காவிட்டால் பைத்தியமே பிடித்து விடும்போலிருந்தது அவனுக்கு. அனாதையான அரீப் எங்கே?

ஆலம்பனாவின் அருமைப் பெண் எங்கே? ஆனால் சிந்தையில் எழும் எண்ணங்களுக்கு ஏற்றத் தாழ்வு உண்டா?

எப்போதாவது தன் தோழிகளுடன் உல்லாசமாக ஓடி விளையாட இளவரசி யமுனை நதிக்கரைக்கு வரமாட்டாளா என்று ஏக்கமுடன் காத்துக் கிடந்தான் அரிப். நதிக்கரையோரமாக ஒருநாள் இப்படிச் சுற்றிக் கொண்டிருக்கும் போதுதான் தவறித் தண்ணீரில் விழுந்து தத்தளித்துக் கொண்டிருந்த ஒரு பெண்ணைக் காப்பாற்றினான்.

அவன் அதிர்ஷ்டம், அவனால் காப்பாற்றப்பட்ட பெண் இளவரசி ஜஹானாராவின் இதயம் கவர்ந்தவளாக இருந்தாள்.

அவள் ஜனானாவிலே நாட்டியமாடும் நங்கையருள் ஒருத்தி; ஜஹானாராவின் அருமைத் தோழி. அற்புதமாக நாட்டியமாடும் ஆற்றல் படைத்தவள். குலால் ஆடுகிறாள் என்றால் ஜனானாவே வந்து கூடிவிடும்; அத்தனை ஒயிலாக ஆடுவாள். ஆட்டத்துக்கு ஏற்ற கட்டமைந்த உடல் அமைந்திருந்தது.

குருடனுக்குக் கோல் கிடைத்ததைப் போல் குலால் தனக்குக் கிடைத்து விட்டதாக எண்ணினான் அரிப். பரிவு காட்டி உறவு கொண்டாட யாருமில்லாத குழந்தையுள்ளம் கொண்ட குலாலும் அரிபைத் தன் அண்ணனாக ஏற்றுக் கொண்டாள். தன்னால் அடைய முடியாத அழகுப் புதையலை-தன் இதயம் கவர்ந்தவளை எப்போதும் அருகில் இருந்தபடி பார்த்துக் கொண்டிருக்கும் பாக்கியத்தையாவது குலால் மூலம் அடையலாம் என்று திட்டமிட்டான் அரிப்.

அண்ணனின் உண்மை எண்ணத்தை அறியாத தங்கை குலாலும் ஜஹானாராவிடம் ஒரு கிழத் தோட்டக்காரனுக்குச் சிபாரிசு செய்தாள். அதற்கடுத்த நாளே அரிப் கிழவன் உருவிலே ஜனானாவில் தோட்டக்காரனாகப் புகுந்தான்.

புதிய தோட்டக்காரன் வந்ததிலிருந்து புஷ்பங்கள் புதிய சோபையுடன் மலர்ந்தன. செடிகளையும் கொடிகளையும் விதவிதமாக வளர்த்து அழகுபட அமைத்தான் அரிப். காதலன் காதலியின் முகத்தை ஆவல் பொங்கப் பார்ப்பதுபோல் ஒரு பசுஞ் செடியையும் அதன் மேலே ஒரு கொடியையும் தொங்கவிட்டுப் பக்குவமாக அமைத்திருந்தான். அவன் கைபட்ட ஒவ்வொரு செடியும், கொடியும் ஒரு காதலன் தன் உள்ளத்தைக் காதலிக்குத் தெரிவிக்கும் கற்பனையாக இருந்தது. அவன் அந்தக் காதலனாக இருந்தான். ஆனால் இளவரசியோ...? அவன் இதயத்தையோ, இப்படி ஒருவன் தன் நினைவாகவே தவிக்கிறான் என்பதையோ அறியாதவளா யிருந்



தான். ஒரு தலைக் காதலாக அரீபின் காதல் வளர்ந்து வந்தது.

தோட்டத்திலே மலர்கள் பூத்துக் குலுங்கின. ஜஹானரா புதிய தோட்டக்காரனின் திறமையைப் பாராட்டினள். சிரிக்கும் மலர்களைக் கண்டு சிந்தையைப் பறி கொடுத்தாள். ஆனால் அவனோ அவள் சிரிப்பைக் கண்டு தனிமையிலே புஷ்பங்களோடு பேசினன்:

"ஏ சிங்கார மலர்களே! என் ஜஹானரா வின் ஒரு முறுவலின் முன்னே நீங்கள் சிந்தும் சிரிப்பெல்லாம்சோபை இழந்து சப்பென்று போய் விட்டதே!"

இப்போதெல்லாம் குலால் புதிய குதூகலத்துடன் காணப்பட்டாள். நாட்டியராணியான அவள் பாடலும் அமைத்துக் கொண்டு வந்தபோது ஜஹானராவே திகைத்தாள். இத்தனை நாளும் அவள் ஆடலின் அழகிலே மயங்கியவர்கள் இப்போது பாடலின் தரத்திலே தங்களை மறந்து போனார்கள்.

அரீப் தன் இதயத்திலே தேங்கிக் கிடக்கும் ஏக்கத்தை யெல்லாம் பாடல்களாக்கி இறைத்துக் கொண்டிருந்தான்.

* * *

ஒருநாள் அரீப் சிந்தனையிலே மூழ்கியவனாக உட்கார்ந்திருந்தான்.

கால்களிலே கட்டிய சலங்கையைக் கூட அவிழ்க்காமல் நாட்டிய மஹாலிலிருந்து குலால் சலங்கை குலுங்க வந்தாள். சலங்கை ஒலிகூட அவன் மோன நிலையைக் கலைக்கவில்லை. குலால் அவன் அருகில் வந்து குழந்தையைப்போல் காதில் கூவிய பிறகுதான் தன் உணர்வு பெற்றுத் திரும்பினன் அரீப்.

"என்ன அண்ணா! அத்தனை பலமான சிந்தனை?" என்று கேட்டவாறே கலகல வென்று சிரித்தாள் குலால்.

"சிந்தனை ஒன்றுமில்லை. உன் பிறந்த நாள் வருகிறது என்று சொன்னயே!" என்று கேட்டான் அரீப்.

"ஆமாம்......அடுத்த வெள்ளிக்கிழமை. இளவரசிகூட அதை விசேஷமாகக் கொண்டாட வேண்டும் என்று சொல்லிக் கொண்டிருக்கிறார்கள்" என்றாள் குலால்.

"அப்படியானால், அன்று நீ ஜஹானராவின் முன்னால் அற்புதமாக ஒரு பாடலுக்கு அபிநயம் பிடித்து ஆட வேண்டாமா? அதற்காகத்தான் ஒரு காட்சியைக் கற்பனை செய்து கொண்டிருந்தேன்!" என்று தன் சிந்தனைக்குச் சாதுரியமாக ஒரு காரணத்தைக் கற்பனை செய்து விட்டான்.

அண்ணா அரீபின் அந்தரங்கத்தைப் பற்றிக் குலாலுக்கு என்ன தெரியும்? "அண்ணா! உன் பாடல்களின் சொற் சுவையிலே இளவரசி ஜஹானரா அப்படியே சொக்கிப் போய் விடுகிறாள்...ம்... ஆனால் உனக்குக் கிடைக்க வேண்டிய பாராட்டு மொழிகளெல்லாம் எனக்கு அல்லவா கிடைத்துக் கொண்டிருக்கின்றன!" என்றாள்.

அரீபின் முகம் பெருமிதத்தினால் மலர்ந்தது.

"ஏன், குலால் உன் பிறந்த தினத்தன்று நீ ஜனனாவிலே ஜஹானராவின் முன் நாட்டியமாடுவதை நான் காணுவதற்கு ஏற்பாடு செய்வாயா?" என்று கேட்டான்.

"ஜனனாவுக்குள் பேடி அடிமைகளும் கிழவர்களும்தான் வரலாம் என்ற நியதி உனக்குத் தெரியாததில்லையே" என்றாள் குலால்.

"தெரியும், குலால்! நீ ஒன்றும் சிரமப்பட வேண்டாம். பதுங்கியிருந்து பார்க்க ஒரு தகுதியான இடத்தைத் தேர்ந்தெடுத்து விட்டேன். அங்கிருந்து பார்த்தால் நாட்டிய மஹாலில் நடப்பதெல்லாம் நன்றாகத் தெரியும்; என்னை யாரும் பார்க்கவே முடியாது"

அதைக் கேட்ட குலால் குறும்பான கோபத்துடன், "ஓஹோ! நீ திருட்டுத்தனமாக ஒளிந்திருந்து எங்களை யெல்லாம் கண்காணிக்கிறாய் என்பது இப்போதுதான் புரிந்தது. இரு இரு. அந்தப்புரப் பிரதம காவலாளி சர்தார் கான் தன் கடமையைச் செய்யும் அழகைப்பற்றி இளவரசியிடம் சொல்லுகிறேன்!" என்றாள்.

"ஐயையோ! குலால், அதுமட்டும் செய்து விடாதே. உன்னைக் கெஞ்சிக் கேட்டுக் கொள்ளுகிறேன். பிறகு எனக்கு மன நிம்மதியைக் கொடுக்கும் இந்த வேலையும் போய் விடும்" என்று தவித்துப் போனான் அரீப்.

குலால் தனக்கு வந்த சிரிப்பை அடக்கிக் கொண்டாள். "மூட்டுத் தோட்டக்காரனுக்குள்ளே ஒரு முரட்டு வாலிபக்காரன் ஒளிந்து கொண்டிருக்கும் விஷயம் ஆலம்பனா அவர்களுக்குத் தெரிந்தால் உன் கதி என்ன ஆகும், தெரியுமா? அதுசரி, நீதான் திருட்டுத்தனமாக ஜனனாவின் நடவடிக்கைகளைக் காண ஒரு இடம் அமைத்துக் கொண்டிருக்கிறாயே, இன்னும் என் உதவி எதற்காக?" என்றாள்.

"வந்து... அதாவது சாளரத்தின் பக்கமுள்ள இளவரசியின் மஞ்சத்தை எதிர்ப்பக்கத்தில் அமைத்து நீ சாளரத்தின் பக்கமிருந்து ஆட வேண்டும்" என்றான் அரீப் தட்டுத் தடுமாறியபடி.

"அப்படியானால் என் முதுகுப்புறம்தான் உனக்குத் தெரியும். இல்லையா? என் நாட்டியத்தை நீ ரசிக்கும் அழகு இதுதானா?" என்றாள் குலால் முகம் குழைய.

"ஒரு கலையின் தரத்தை அதை ரசிக்கும் ரசிகர்களின் முக பாவத்திலிருந்துதான் கண்டு கொள்ளவேண்டும், குலால்! உன் ஆட்டம் இளவரசியின் முகத்திலே எத்தகைய மாறுதலை உண்டாக்குகிறது என்று பார்ப்பதற்குத்தான் இப்படி..." என்று சாதுரியமாக அவள் மனத்தாங்கலைத் தணிக்க முயன்றான் அரீப்.

"ம்...என்னவோ அண்ணா உன்னை என்னால் புரிந்து கொள்ளவே முடியவில்லை" என்று கூறி, நீண்ட பெருமூச்சுடன் எழுந்தாள் குலால்.

★

குலாலின் பிறந்த நாளைக் கோலாகலமாகக் கொண்டாட வேண்டும் என்று கட்டளையிட்டிருந்தாள் இளவரசி ஜஹானரா. ஜனனா முழுதும் ஜகஜ்ஜோதியாக விளங்கியது.

வானுலகிலிருந்து இறங்கி வந்த தேவ கன்னிகையைப்போல ஜஹானராவுடன் நாட்டிய மஹாலுக்குள் வந்தாள் குலால். கூடி இருந்தவர்களில் பலர் 'கொடுத்து வைத்தவள்' என்ற ஏக்கப் பெருமூச்சை அவிழ்த்து விட்டார்கள்.

தபலாவில் தாளம் அதிர்ந்தது. சிதாரா வாத்தியம் இழைந்து இசைத்தது. ஸாரங்கி



ஆல்வின் ட்யூபுலர் ஸ்டீலில் உருவாகிய நாற்காலிகள் மற்றும் மேஜைகளை நீங்கள் இதுவரை உபயோகித்திருக்கும் எதனுடனும் ஒப்பிட்டுப் பாருங்கள்! அநுபவ வாயிலாக பரீக்ஷித்து உருவாகிய எத்தனையோ டிஸைன்கள்! அலாதி சுகம்! நீடித்த சேவையளிப்பதற்கேற்ற உறுதி! இந்தியாவிலே, நாகரீக

## ஆபீஸ் நாற்காலிகள் மற்றும் மேஜைகள்

பாணியில் பர்னிச்சர் உற்பத்தி செய்பவர்களில் முன்னணியில் நிற்கும் ஒரே ஒரு ஸ்தாபனமான ஆல்வின், நம்பகமான, மதிப்புவாய்ந்த சாதனங்களை அளிப்பதோடு, உங்கள் பணத்தை மிச்சப்படுத்தவும் செய்கிறது! உங்கள் தேவையைத் தேர்ந்தெடுக்குமுன், ஆல்வின் சாதனங்களைப் பார்வையிடுங்கள்.

ஸ்பிரிங் மெத்தை ஆசனங்கள், சொகுசான சம்மானம், ரெக்ஸின் துணியில் எடுப்பாக அமைக்கப்பெற்ற ட்யூபுலர் ஸ்டீல் நாற்காலிகள் மற்றும் சுழலும் நாற்காலிகள்.

பாக்ஸ், டிராயர்கள், லினோலியம் மேல்-உறை, ஆட்டோமாடிக் பூட்டு முதலியவைகளுள்ள ட்யூபுலர் ஸ்டீல் டேபிள்கள்.

## ஆல்வின் எனும் பெயர் எப்பொழுதும் பூர்ண திருப்தி தருகிறது



டிஸைன் மற்றும் உறுதிக்கு

# ஆல்வின்

புகழ்பெற்ற பர்னிச்சர்



அருகாமையிலுள்ள வியாபாரியைக் கேளுங்கள், அல்லது படம் கொண்ட புத்தகம் பெறுங்கள்.

ஹைதராபாத் ஆல்வின் மெட்டல் ஒர்க்ஸ் லிட்., சநத்நகர், ஹைதராபாத் 18.

சென்னை கேரள மற்றும் ஆந்திர ராஜ்யங்களுக்கு ஏஜண்டுகள்:

மெஸர்ஸ் அடிஸன் அண்டு கோ. பிரைவேட் லிட்., 158, மவுண்ட் ரோடு, சென்னை-2

விஸ்தரிக்கப்பட்ட மைசூர் ராஜ்யத்திற்கு ஏஜண்டுகள்

மெஸர்ஸ் அடிஸன் அண்டு கோ. பிரைவேட் லிட்., ஸெயிண்ட் மார்க்ஸ் ரோடு, பெங்களூர்

எல்லா முக்கிய நகரங்களிலும் டீலர்கள் உள்ளனர்

சங்கீதம் பாடியது. குலாலின் கால் சலங்கை குலுங்கியது. நாட்டியமும் ஆரம்பமாயிற்று. தீபங்கள் சுடர்விட்டு எரியும் தாமரை வட்டத்திலே அழகி குலால், தட்டாமாலை சுற்றிப் பம்பரம்போலச் சுழன்று ஆடினாள். அற்புதமான நாட்டியம். அத்தனைபேரும் தங்களை மறந்து அவள் நாட்டியத்திலே மயங்கிப் போய் உட்கார்ந்திருந்தார்கள். அப்போது...

"ஐயோ குலால், பாவத்தில் ஜீவனே இல்லையே. நாசமாக்கி விட்டாயே!" என்று ஒரு ஆண் குரல் ஆத்திரத்துடன் ஒலித்தது: நாட்டிய மனாலுக்கு வெளியிலிருந்துதான்.

ஒளிந்திருந்து, ஜஹனாராவின் அழகையும் குலாலின் நடனத்தையும் ரசித்துக் கொண்டிருந்த அரிப் தான் உணர்ச்சிப் பெருக்கில், தன் நிலை மறந்து கத்தி விட்டான்!

வெளியே ஏற்பட்ட குழப்பம் குலாலின் நாட்டியத்தைத் தடைப்படுத்தியது. தன்னை மறந்த இன்பத்திலே ஆடிக்கொண்டிருந்தவள் சட்டென்று நின்று விட்டாள். அவள் உள்ளத்தை ஏதோ ஒரு இனம் தெரியாத பயம் வந்து கௌவிப் பிடித்தது.

"என்ன, குலால்! இப்படி நடனத்தை நடுவில் நிறுத்தி விட்டாயே?" என்று சற்றுக் கோபத்துடன் கேட்டாள் ஜஹனாரா.

"வெளியே என்ன குழப்பம்?" என்று குலால் கேட்பதற்கும் சலீமா என்ற பணிப்பெண் வெளியே ஓடி விஷயத்தை அறிந்து வருவதற்கும் சரியாக இருந்தது.

"ஜனானாவுக்குள் யாரோ ஒரு அன்னியன் புகுந்து ஒளிந்திருந்து நமது குலாலின் நாட்டியத்தை ரசித்துக் கொண்டிருக்கிறான்."

இச் செய்தியைக் கேட்டதும் குலாலுக்கு மூச்சே நின்று விட்டது.

"பதறாதே, குலால்! நமது வீரர் சர்தார் கான் அவனைக் கவனித்துக் கொள்ளுவார். நீ நடனத்தைத் தொடர்ந்து ஆடு" என்று சமாதானம் செய்தாள் ஜஹனாரா.

அன்னியனாக இருந்தால் அவள் பதறாமல் இருப்பாள். ஆனால் அகப்பட்டுக் கொண்டிருப்பவன் அவள் அன்னை அரிப் அல்லவா? அவளால் எப்படி ஆட முடியும்? "அவனைப் பிடித்துக்கொண்டு போய்விட்டார்களாமா?" என்று கேட்டபோது அவள் உடலோடு குரலும் நடுங்கியது.

"ஏன் இப்படி நடுங்குகிறாய், குலால்? ஜனானாவிலே அன்னியன் புகுந்து விட்டானே என்று கவலைப்படாதே. இத்தனை நேரம் அவன் இருளடர்ந்த சிறைச்சாலைக்குள்ளே உருண்டு கிடப்பான். காலையில் விசாரித்து அவனுக்குத் தகுந்த தண்டனை கிடைக்கும்படி செய்யலாம். நீ பயப்படாமல் ஆடு" என்று நடனத்தை ரசிக்கத் துடித்தாள் ஜஹனாரா.

குலாலின் இதயம் துடிப்பது பாவம், இளவரசிக்கு எப்படித் தெரியும்?

குலாலினால் நிற்கவே முடியவில்லை. கால்கள் துவண்டன. உடல் நிலை கொள்ளாமல் தவித்தது. இந்த நிலையில் அவளால் ஆட முடியாது; ஆடாமல் இருக்கவும் முடியாது. ஆடாமல் இருந்தால் வீண் சந்தேகத்துக்கு அல்லவா இடம் அளித்து விடும்?

ஆகவே ஆடினாள். தன் நினைவின்றி ஆடினாள். தாளம் தவறி ஆடினாள். தாறுமாறாக ஆடினாள். கால்கள் ஜதி மாறித் தடுமாறின. அடிக்கடி நடுவட்டத்திலிருந்து நகர்ந்து போனாள். சற்று முன்பு 'ஆஹா, அபாரம். அற்புதம்' என்று பாராட்டியவர்கள் இப்போது 'ஐயோ, விபரீதம், ஆபத்து' என்று பயத்துடன் தவித்தார்கள்.



என்ன ஆட்டம், எப்படி ஆடுவது என்பதையே மறந்து வெறி பிடித்தவள் போல் பம்பரமாகச் சுழன்றாள் குலால். தலை சுற்றிக் கீழே விழுந்தாலாவது நாட்டியமாடும் அந்த இக்கட்டான நிலையிலிருந்து விடுதலை பெறலாம் என்று தீர்மானித்துத்தான் அப்படி ஆடினாளோ, என்னவோ? அந்தப் பேயாட்டத்திலே அவள் மஸ்லின் பாவாடை குடை விரித்ததுபோலச் சுழன்று பறந்தது. நிதானம் இழந்து ஆடிய குலாலின் அந்தக் குடைப் பாவாடை, அவள் மையத்தை விட்டு நகர்ந்து ஓரத்தில் சென்று ஆடியதால் பறந்து தீப வரிசையை ஸ்பரிசித்து விட்டது. நுனியிலே குப்பென்று தீப் பிடித்தது. தீயின் செந்நாக்குகள் குபீரென்று மேலே தாவி அவள் உடலையும் துழாவின. எல்லாம் ஒரு இமைப் பொழுதில் நடந்து விட்டது.

'வீல்' என்று பெண்களின் கூக்குரல்கள் பீறிட்டு எழுந்தன.

"ஐயோ, குலால்!" என்று தன் உயிர்த் தோழியைக் காப்பாற்ற உள்ளம் துடிக்க ஓடினாள் இளவரசி ஜஹனாரா.

ஓடும் இளவரசியைத் தடுத்து நிறுத்த முயன்ற பணிப்பெண்களின் செயல் பயன் அளிக்கவில்லை. குலாலின் உடலைச் சுற்றித் 'தகதக'வென்று எரியும் நெருப்பை அணைக்கத் தன் மேலாடையை அவள்மீது போர்த்தியதோடல்லாமல், இளவரசி அவளைத் தழுவியும் பிடித்துக்கொண்டாள். தன் ஆடைகளைப் போட்டு மூடி இறுக்கி அவள் உடல் தீயை அணைத்து விடலாம் என்பதுதான் அரசகுமாரி அவசரத்தில் செய்த முடிவு. ஆனால் அந்த நேரத்தில் தன் உடைகள் சாக்கினால் ஆனது அல்ல, டாக்கா மஸ்லினால் ஆனது என்பதை மறந்து விட்டாள்! அடுத்த வினாடி இளவரசியின் உடைகளிலும் குபீரென்று தீப் பிடித்து ஜுவாலை விட்டு எரியலாயிற்று.

விருந்தும் வேடிக்கையும் கொண்டாட்டமுமாக இருக்க வேண்டிய அந்த இடத்திலே ஒரே பீதியும், கூச்சலும், குழப்பமும், அழுகையும் ஆரவாரமுமாக அல்லோலகல்லோலப் படலாயிற்று. பெண்களாகக் கூடி இருந்த அந்த இடத்திலே யாருக்கும் என்ன செய்வது என்றே தோன்றவில்லை. கூச்சலும் குழப்பமும் தான் அதிகமாயிற்றே தவிர அரசகுமாரியைக் காப்பாற்றும் துணிவோ, நிதானமோ, சாதுரியமோ யாருக்கும் இல்லை.

உதவி வருவதற்குள் அழகி ஜஹானாராவின் உடலை அனல் நாக்குகள் நன்றாகச் சப்புக் கொட்டி ருசி பார்த்து விட்டன.

செய்தி கேட்டு ஷாஜஹான் பதறிக்கொண்டு ஓடோடி வந்தார். கூடவே ஹக்கீம் மூமானுவும் வந்து சேர்ந்தார். துவண்ட கொடி போல் நினைவிழந்து கிடந்த ஜஹானாராவைப் படுக்கையில் கிடத்தினார்கள். உடல் முழுவதும் கோரமாக வெந்து விட்டது. முதலில் இளவரசியின் மயக்கம் தெளிய மருந்து கொடுத்தார் ஹக்கீம் மூமானு.

மூமானுவின் சிகிச்சைகளினால் இளவரசியின் இமைகள் மெல்லத் திறந்தன. உதடுகள் அசைந்தன. அவள் கேட்ட முதல் கேள்வி, "அப்பாஜான்! என் குலாலுக்கு ஒன்றுமில்லையே?" என்பதுதான்.

மகள் கண் விழித்துப் பேசிய ஆனந்தத்திலே மன்னருக்குப் பேச நாவெழவில்லை. மூமானுதான் பதில் சொன்னார்: "ராஜகுமாரி! குலால்பாய்க்கு ஆபத்து ஏதுமில்லை. கவலைப்பட வேண்டாம்."

கண்ணீர் வழிய வேதனை நெஞ்சை அடைக்க உட்கார்ந்திருந்த தகப்பனாரிடம் இளவரசி கேட்டுக் கொண்டாள்: "அப்பா! இந்த விபத்துக்காக யாரையும் கோபிக்கவோ தண்டிக்கவோ செய்யாதீர்கள்."



"இல்லையம்மா. நீ பிழைத்து இருந்தால் அதுவே எனக்குப் பேரானந்தம், அம்மா!" என்று விம்மினார் பாதுஷா.

ஜஹானாராவின் விருப்பப்படி குலாலையும் இளவரசியின் கட்டிலுக்கு அருகிலேயே ஒரு படுக்கையில் கிடத்தினார்கள். இருவருக்கும் அரசாங்க வைத்தியர் ஹக்கீம் மூமானுவே சிகிச்சை செய்யலானார்.

அரசகுமாரிக்கு நேர்ந்த ஆபத்தைக் கேட்டு ஆக்ராவே அழுதது. மக்கள் தங்கள் உடலே தீப்பட்டுத் தீய்ந்து போனதாகக் கருதிக் கலங்கிக் கண்ணீர் விட்டார்கள்.

அரீபைப்பற்றிச் சொல்ல வேண்டுமா? "ஐயோ! என்னால் அல்லவா இளவரசிக்கு இந்த நிலை" என்று புழுங்கிப் போனான்.

அதிசயம் என்றுதான் சொல்ல வேண்டும். முதலிலே தீப்பிடித்தது குலாலின் உடலில் தான். ஆனால் அவன் உடலில் அதிக ரணமில்லை. குலாலைக் காப்பாற்றப் போன இளவரசியின் உடலிலேதான் ரணங்கள் அதிகம்.

ஹக்கீம் மூமானுவின் ஔஷதங்கள் குலாலின் ரணங்களை ஆறவிட்டன. ஆனால் அதே மருந்துகளினால் ஜஹானாராவின் ஜுரத்தைக் கூடக் குறைக்க முடியவில்லை.

எழுந்திருக்க முடிந்ததும் ஹக்கீமின் அனுமதி பெற்று அண்ணனைக் காண ஓடோடி வந்தாள் குலால். அண்ணனும் தங்கையும் ஒருவரை யொருவர் பார்த்துக் கொண்டதும் 'கோ'வென்று கதறி விட்டார்கள்.

"குலால்! இளவரசியின் நிலை எப்படி இருக்கிறது? ஊரிலே பலவிதமாகப் பேசிக் கொண்டிருக்கிறார்களே!" என்று கேட்டான் அரீப்.

"இன்னும் ஜஹானாராவுக்குச் சுய நினைவு வரவில்லை. ஜுரமும் தணியவில்லை. தினம் எங்கிருந்தெல்லாமோ ஹக்கீம்களும், பண்டிதர்களும் வைத்தியர்களும் வந்து கொண்டிருக்கிறார்கள்."

"அந்தப் பட்டுடல் தீப்பட்டுப் பொசுங்க நானல்லவா காரணமானேன்."—குற்றவாளி மனப்பான்மையோடு பொருமினான் அரீப்.

"இல்லை, அண்ணா! அரசிக்கு நேர்ந்த ஆபத்துக்கு நான்தான் காரணம். என்னிடமுள்ள அன்பினால்தானே, என்னைக் காப்பாற்ற வந்ததினால்தானே அவளுக்கு இந்தக் கதி?" என்று தன்னைக் காரணமாக்கிக் காட்டினாள் குலால்.

"நான் ஒரு துரதிர்ஷ்டம் பிடித்தவன், குலால்! நான் தொட்டது துலங்காது, வைத்தது விளங்காது. நான் ஜனானாவுக்குள் புகுந்த வேளைதான் அழகின் அவதாரமான அரசகுமாரிக்கு இத்தகைய பேராபத்து ஏற்பட்டு விட்டது."

பெண்ணைப் போல் கண்ணை மூடிக்கொண்டு விம்மி விம்மி அழும் அண்ணனின் முதுகைத் தற்செயலாகப் பார்த்த குலால் திகைத்துப் போய், "ஐயோ, அண்ணா! இதென்ன உன் முதுகெல்லாம் இப்படி ரணமாக இருக்கிறது?" என்று பதறிப்போனாள்.

"என் அதிகமான ஆசைக்குக் கிடைத்த அருமைப் பரிசு—நூறு கசையடிகள்" என்றான் அரீப் நிதானமாக.

"ஐயோ, என்ன கொடுமை! அந்தப் பாவிகள் அடித்தபோது உன்னுடைய உடல் எப்படிப் பதறியதோ?"

"உடலிலே தீப்பற்றி எரியும்போது உங்கள் மனம் என்ன பாடுபட்டிருக்கும் என்பதை எண்ணி எண்ணி இடிந்து போகிறது குலால், என் நெஞ்சம்! ஜனானாவுக்குள் புகுந்த குற்றத்துக்காக எனக்குக் கொலைத் தண்டனை கொடுத்திருந்தால்கூட மகிழ்ச்சியோடு மரணத்தை வரவேற்றிருப்பேன்" என்று விரக்தியோடு பேசினான் அரீப்.

★

சம்பவம் நடந்து இரண்டு மாதங்களாகி விட்டன. இளவரசியின் உடல் நிலையிலே எவ்வித முன்னேற்றமும் ஏற்படவில்லை.



ஜுலாலின் உடல் ஒரு மாதத்தில் குணமாகி விட்டது. அவனைப் போலவே அரசகுமாரியும் குணமடைவாள் என்று எண்ணிய அரீப்புக்கு அரசகுமாரியின் ஆறாத புண் அவன் செய்கையின் விளைவை ஆயிரம் மடங்கு பெரிதாக்கி அவன் நெஞ்சைத் திருகி எடுக்க ஆரம்பித்தது. அதே சிந்தனையாக இருந்த அவனிடம் ஒருநாள், ''கடவுளின் கருணை மனித உருவத்தில் வரும் என்று கேள்விப்பட்டிருக்கிறேன். அண்ணா! என் ஜுஹாராவின் உடலைக் குணப்படுத்தும் மருந்து தெரிந்த ஒருவர் எங்கோ இருக்கிறார் என்று என் உள்மனத்தில் ஏதோ ஒன்று சொல்லுகிறது. ஆனால் அவரைத் தேடிக் கண்டு பிடிக்க வேண்டுமே!'' என்றான் ஜுலால் இரத்த குரலில்.

சவுக்கடிபட்டவனைப் போல் துள்ளி எழுந்தான் அரீப். ''ஜுலால்! நேற்றிரவு நான் செய்த முடிவுக்கும் இன்று உன் வார்த்தைக்கும் ஏதோ தொடர்பிருக்கிறது. நான் இன்றே கிளம்பப் போகிறேன்!'' என்றான். அவன் முகத்திலே ஒரு புதிய சோபை தோன்றியது.

''எங்கே, அண்ணா?'' என்று கேட்டான் ஜுலால் ஒன்றும் புரியாமல்.

''நீ சற்று முன்பு சொன்னாயே. அந்த ஊர் பெயர் தெரியாத யாரையோ தேடிக் கண்டு பிடிக்கத்தான். அவரைக் காணாமல் - வெந்த உடலைக் குணப்படுத்தும் விந்தை மருந்தை அறிந்து கொள்ளாமல் திரும்ப மாட்டேன்.'' வெறி கொண்டவனைப் போலத் திரும்பிப் பாராமலே கிளம்பி விட்டான் அரீப்.

★

**மா**தங்கள் நான்கும் நகர்ந்து விட்டன. நம்பிக்கையை வளர்க்கும் மருந்து கிடைக்கவே இல்லை. ஆறாத ரணங்களின் வேதனை தாளாமல் ஜுஹாரா அவஸ்தைப்பட்டுக் கொண்டிருந்தாள்.

அரீப்......?

ஊர் ஊராக, நாடு நாடாக, காடு மலை கடந்து காதலியின் உயிரைக் காப்பாற்றும் ஔஷதம் யார் மூலமாகவாவது கிடைக்காதா என்று அலைந்து கொண்டிருந்தான். சந்தித்தவர்களையெல்லாம் கேட்டான்.

ஓடி ஓடித் தேடி உருமாறிப் போன அரீப்புக்கு ஒரு நாள் ஒரு செய்தி கிடைத்தது.

''ஸ்ரீநகரிலே பனி மூடிய இமாலயச் சரிவிலே ஒரு சாது இருக்கிறார். இந்த உலகத்திலே அவர் அறியாதது எதுவுமில்லை. உலகின் ஆசாபாசங்களுக்கு அப்பாற்பட்டவர். பொன்னும் பொருளும் அவரை மயக்காது. அத்தகைய மகானை சோமதேவர் உள்ளத்திலே கருணை பிறந்தால் காரியம் கைகூடும்.''

அரீப் அதற்குப் பிறகு அங்கு நிற்கவில்லை. அந்த சாதுவைத் தேடிக் கொண்டு காஷ்மீரத்துக்கு ஓடினான். மிகுந்த சிரமப்பட்டுக் கருணையே வடிவான அம் மகானைக் கண்டு பிடித்தான். வாய் பேசாது வந்த காரணத்தையும் தெரிவிக்காமல் அவருக்குப் பணிவிடை புரிந்தான்.

சில நாட்களுக்குப் பின் ஒருநாள், இதன் கூடும் வேளை. சோமதேவரே வாய் திறந்து கேட்டார்: ''உனக்குற்ற துன்பம், என்னப்பா?''

''நான், என் உயிருக்கும் மேலாக நேசிக்கும் ஒரு பெண்ணின் உடல் தீயில் வெந்து ரணமாகி விட்டது. அந்த நோயைத் தீர்க்கும் மருந்தைத் தங்களிடமிருந்து அறிந்து போவதற்காகவே வந்தேன்'' என்றான்.

சாது ஒரு நிமிஷம் அவனை உற்றுப் பார்த்தார். பிறகு ''அப்பா! உன்னைப் பார்த்தால் மணமானவனாகத் தெரியவில்லையே'' என்றார்.

''ஆமாம், சுவாமி! ஆனால் அவள் என் காதலி. என் சிந்தையிலே இடம் பெற்று விட்ட சிங்காரி! இந்தப் பாவி செய்த ஒரு தவற்றினால் அவள் உடல் தீப்பட்டு ரணமாகி விட்டது. வைத்திய சாஸ்திரமெல்லாம் அவள் வரையில் பலனற்றுப் போய்விட்டன. அந்தப் பசுங்கொடி படுத்த படுக்கையாகக் கிடந்து உயிருக்கு ஊசலாடிக் கொண்டிருக்கிறாள், நான்கு மாதங்களாக'' என்றான். உணர்ச்சிப் பெருக்கிலே அவன் குரல் கம்மிப் போயிருந்தது.

சாது எதையோ அறிந்து விட்டவர் போலச் சிரித்தார்.

''சுவாமி! உங்கள் புன்னகையின் காரணம் புரியவில்லையே'' என்றான் அரீப்.

''ஒன்றுமில்லை. உன் வாழ்க்கையை நினைத்துப் பார்த்தேன். விநோதமான காதல்தான். மகனே! உன் காதலியின் ரணத்தை ஆற்றும் மூலிகை இருக்கிறது. ஆனால் அம்மூலிகையிலிருந்து மருந்து தயாரிக்க மனோதிடம் வேண்டுமே என்றுதான் யோசிக்கிறேன்'' என்றார்.

''இதில் என் உயிரே போவதானாலும் நான் தயங்கமாட்டேன், சுவாமி சொல்லுங்கள்!''

''சொல்லாமல் உன்னை நீ கொன்று கொள்ள வேண்டும், அப்பா!''

''அவளுக்காக—அந்த அழகு உருவம் இந்த உலகில் உயிர் வாழ்ந்திருக்க நான் என் உயிரையும் கொடுக்கத் தயாராக இருக்கிறேன், சுவாமி!''

சிந்தனையிலாழ்ந்தார் சோமதேவர். வெண் பஞ்சு போன்ற அவரது தாடி காற்றிலே அசைந்தாடியது. அரீபின் உள்ளமும் கூட அவர் என்ன சொல்லப் போகிறாரோ என்று அப்படித்தான் ஆடிக் கொண்டிருந்தது.

''இன்று அமாவாசையல்லவா? அதோ தெரிகிறது. பார்த்தாயா?'' என்று எதையோ சுட்டிக் காட்டினார்; அந்த நிர்மானுஷ்யமான பிரதேசத்தில், தீப ஒளிபோல் ஏதோ ஒன்று பளபளத்தது தூரத்திலே.

''அது என்ன சுவாமி? இத்தனை நாட்கள் அந்த ஒளி என்னுடைய கண்களில் படவில்லையே?'' என்றான் அரீப்.

''அந்த ஒளி அங்கு என்றும் இருக்கும். அது விளக்கொளியல்ல; ஒரு பச்சிலை'' என்றார் சோமதேவர், அதை நோக்கி வேகமாக நடந்து கொண்டே.

வியப்பினால் விரிந்த கண்களுடன் அரீப், ''என்ன பச்சிலையா? இரவைப் பகலாக்கும் ஒளி பொருந்திய பச்சிலையும் இருக்கிறதா, சுவாமி?'' என்றான். இதற்குள் இருவரும் அந்த அற்புத மூலிகையின் அருகே வந்து விட்டார்கள்.

அதிலிருந்து சில இலைகளைப் பறிக்கும்படி பணித்தார் சாது. அந்தப் பச்சிலையை ஸ்பரிசித்தபோது ஏதோ ஒரு உயிருள்ள ஜந்துவை ஸ்பரிசிப்பது போன்ற உணர்வு ஏற்பட்டு விட்டது அரீபுக்கு.

பச்சிலையுடன் குகைக்கு வந்தார்கள். ''இளைஞனே! தீயைக் கிளறிவிடு. கொழுந்துவிட்டு எரியட்டும்!'' என்றார் சாது. மகானின் விருப்பப்படி கட்டைகளைப் போட்டு ஜுவாலையை வளர்த்தான். திடீரென்று கொழுந்துவிட்டு எரியும் ஜ்வாலையின் நடுவே சோமதேவர் தம் கரத்தை நுழைத்தார்.

அரீப் அலமந்து போய், ''ஐயோ! சுவாமி, இதென்ன கொடுமை! தங்கள் கையைத் தீயில் வாட்டுகிறீர்களே! ஏன் இப்படி... ஐயோ வேண்டாம்! பிரபு...வேண்டாம்'' என்று மன்றாடினான்.

சோமதேவரோ பனிபோல வெளுத்த தம் பற்கள் தெரியச் சிரித்தார். பிறகு அமைதியாக ஜுவாலையிலிருந்து கைகளை எடுக்காமலேயே, ''இளைஞனே! இந்த மூலிகையின் சக்தியை உனக்குக் காட்ட வேண்டாமா? அதோடு உன்னுடைய மனோதிடத்தையும் நான் பரீட்சிக்க வேண்டும். இதோ பார்த்தாயா?'' என்றார்.

அரீப் கண்களில் நீர் ஒழுகப் பார்த்தான். ''சற்றுமுன்பு பொன் போன்றிருந்த தங்கள் தவக்கரம் பொசுங்கிக் கருகி...ஐயோ! வெந்து விகாரமாகி விட்டதே, சுவாமி!'' என்று தவித்துப் போய் விட்டான்.

''தவிக்காதே. இந்த ரணத்தை ஆற்ற இதோ பச்சிலை. இதை ஔஷதமாக்க உன் பச்சை ரத்தமும் வேண்டும். கொடுப்பாயா?'' என்று கேட்டார்.

''தடை சொல்லுவேன் என்று எண்ணினீர்களா, தவசிரேஷ்டரே? இந்தாருங்கள்'' என்று சொல்லிச் சுண்டு விரலை ஒரு கல்லைக் கொண்டு நசுக்கி ரத்தத்தைச் சொட்ட விட்டான். இத்தனை துணிவான செயலை அவனிடமிருந்து எதிர்பாராத சோமதேவர் திகைத்துப் போய் விட்டார்.

''இளைஞனே கேள், இந்தப் பச்சிலையுடன் இன்னும் சில மூலிகைகளையும் சேர்த்து மனித ரத்தத்தோடு பக்குவமான முறையிலே கலந்து ஒரு களிம்பு தயார் செய்யும் முறையை உனக்கு நான் சொல்லித் தருகிறேன். அது பட்ட இடம் பசுமை பெறும். வெந்து கருகிய இடங்களிலே மெருகு ஏறும்.— அதோடு இன்னொரு விஷயம். இந்தக் களிம்பு தயாரிக்கும் முறை உன்னோடு மறைய வேண்டும். யாருக்கும் தெரியக் கூடாது'' என்று ஒரு நிபந்தனையையும் விதித்தார் சோமதேவர்.

''அப்படியே பாதுகாக்கிறேன், சுவாமி! அந்த ஒப்பற்ற ஔஷதம் தயாரிக்கும் முறையைச் சொல்லிக் கொடுங்கள். முதலில் உங்கள் வெந்த கரத்தை நேர் செய்ய என் ரத்தத்தைக் கலந்து அதைத் தயார் செய்கிறேன்'' என்றான் அரீப்.

சோமதேவர் புன்முறுவல் புரிந்தார்.

*

'குலால்! குலால்!' என்று கூப்பிட்டுக் கொண்டே உள்ளே நுழைந்தான் அரீப்: புழுதி படிந்த ஆடை. தாடி மண்டிக் கிடக்கும் முகம். தோளிலே மூட்டைகள். முகத்திலே நம்பிக்கை ஒளி!

கவலையால் மெலிந்திருந்த குலால் உள்ளிருந்து வெளிவந்தான். சிரிப்பு செத்துவிட்ட அவனிடமிருந்து ஆவலுடன் வந்த முதல் கேள்வி, ''மருந்துடன் வந்திருக்கிறாயா, அண்ணா?'' என்பதுதான்.

''இல்லாவிட்டால் திரும்பி இருப்பேனா, குலால்? இளவரசிக்கு எப்படி இருக்கிறது?'' என்று கேட்டான் மூட்டைகளைக் கீழே இறக்கிக் கொண்டே.

சோர்ந்த குரலிலே கூறினான் குலால்: ''எவ்வித முன்னேற்றமும் இல்லை. கொஞ்சம் கொஞ்சமாக......'' என்றபோது குமுறிவந்த அழுகையை அவனால் அடக்க முடியவில்லை. குலுங்கக் குலுங்க அழுதான்.

''கவலைப்படாதே, குலால்! உன் இளவரசியின் உடல் இன்னும் ஒரு வாரத்தில் குணமாகிறது, பார்!'' என்றான் அரீப் களிப்புடன்.

அண்ணனின் வார்த்தைகள் அவனுக்கு ஆறுதலாக இருந்தன. ''நிஜமாகவா, அண்ணா? அத்தகைய அற்புத ஔஷதமும் இருக்கிறதா?'' என்றான் ஆவலுடன்.

''இருக்கிறது.''

''நாளைக்கு அரசரிடம் நான் தரும் மருந்தைக் கொடுத்து ரணங்களில் தடவச் சொல்.''

இரண்டு நாள்—மூன்று நாள்......

நாள் தவறாமல் மூன்று வேளையும் குலால் தன் கைகளினாலேயே அரீப் கொடுத்த அற்புத மருந்தை ஜஹனாராவின் ஆறாத ரணங்களிலே தடவிக் கொண்டு வந்தான்: ஆச்சரியமான மாறுதல் ஏற்பட்டது. காயாத தீக்காயங்களிலிருந்து வடிந்து கொண்டிருந்த தினை நீர் நின்று விட்டது. எரிச்சலும் வலியும் கூடக் குறைந்து விட்டன.

அரண்மனை முழுதும் 'அரீப் அரீப்' என்ற பேச்சாகவே இருந்தது. ஆக்ராவின் மூலை முடுக்குகளிலெல்லாம் அரீப் என்ற அடிமையின் அற்புத மருந்தைப் பற்றியே அதிசயத்துடன் பேசிக் கொள்ளலானார்கள். ஐந்து மாதங்களாக ஆறாத ரணத்தை ஆறே நாட்களில் குணமாக்கிய அந்த அற்புத ஔஷதத்தை வைத்துக்கொண்டு பெரிய பெரிய

அவருடைய சிகரெட்






# சிஸர்ஸ்

---



தொன்றுதொட்டே
புகழ் பெற்றது

புராதன காலத்திலிருந்தே கிருமிகளை அடியோடு கொன்று வலுவூட்டுவதற்கு மிகச் சிறந்தது நீம் (வேம்பு) என இந்தியாவெங்கும் ஒப்புக்கொள்ளப் பட்டது.
வேம்பின் இயல்பான இக் குணங்கள் நீம் டூத் பேஸ்டில் அபரிமிதமாக இருப்பதே அதன் சிறப்புக்கு முக்கிய காரணம். பற்கள், ஈறுகள் நன்கு பாதுகாக்கப்பட, இன்றைய பல் வைத்தியத்தில் கையாளப்படும் பொருள்கள் யாவும் இதிலிருக்கின்றன. நீம் டூத் பேஸ்டுடன் வேறு எந்த பற் பசையையும் ஒப்பிட முடியாது.




நீம் டூத் பேஸ்ட்

கல்கத்தா கெமிகல் கோ., லிட்., கல்கத்தா-29. தென்னிந்திய ஆபீஸ்: 5/149, பிராட்வே, சென்னை-1

ஹக்கீம்களும் வைத்தியர்களும் ஆராய்ச்சியில் ஈடுபடலானார்கள்.

அடிமையின் மருந்து என்று அலட்சியம் செய்த மூமாஜு கூட அதன் அற்புத சக்தியைப் பாராட்டத்தான் வேண்டி இருந்தது. ஆனால் அதை அவர் வைத்திய சாஸ்திரத்தின் சாதனை என்று ஏற்கவில்லை. ஏதோ மந்திர சக்தியின் மகிமை என்று வாதாடினார். எப்படியானால் என்ன? இளவரசிக்கு மறுவாழ்வு அளித்த அந்த அதிசய அடிமையைக் காணவேண்டுமென்று எல்லாரும் துடித்தார்கள்.

ஆனால் அந்த அடிமை அரீபோ...? அவனைக் குலால் அன்று பார்த்ததுதான். மருந்து தயாரிக்கும்போது தன் அறைக்குள் வரக்கூடாது என்று அவன் தடை விதித்திருந்தான். அவனை அவள் பார்க்கவே இல்லை.

"ஆண்மனைக்குப் போக வேண்டும், அண்ணா!" என்று சொன்னால் மூடிய கதவின் பின்னாலிருந்து மருந்து நிரம்பிய பேழையை நீட்டுவான் அவன் கைகளைத்தான் பார்ப்பாள் அவள். ஒரு நாள் அந்தக் கையிலே கட்டு ஒன்றைக் கண்ட குலால், "அதென்ன அண்ணா கையில் கட்டு?" என்று கேட்டாள்.



"ஒன்றுமில்லை. மருந்து தயாரிக்கும் போது சிறு காயம் பட்டுவிட்டது" என்று பதில் தான் வந்தது—அதுவும் அறைக்குள்ளிருந்து. இரவு வேளைகளில் அவன் அடிக்கடி இருமுவதையும் இளைப்பும் சோர்வுமாகப் பெருமூச்சு விடுவதையும் கேட்பாள். அவன் இருமலும் பெருமூச்சும் அவளுக்கு விபரீதமாகவும் வேதனையாகவும் இருந்தாலும் அற்புதமான மருந்து தயாரித்துக் கொண்டிருக்கும் தன் அண்ணனைப் பற்றிய பெருமையிலே அவள் வீண் கவலைகளுக்கு இடம் தரவில்லை.

தன் அறையிலிருந்து வெளியில் வந்த அரீபை ஒருநாள் நேருக்கு நேர் தற்செயலாகச் சந்திக்க நேர்ந்த போது குலால் திடுக்கிட்டாள்.

"என்ன, அண்ணா! உன் முகமெல்லாம் வெளுத்து என்னவோபோல இருக்கிறதே?" என்று கேட்டாள்.

"கவலைப்படாதே, குலால்! இரவு பகல் தூக்கமின்றி மருந்து தயாரிப்பதால் ஏற்பட்ட சோர்வு. வேறொன்றுமில்லை" என்றான். குலால் அவன் வார்த்தைகளை நம்பினாள்.

பத்தே நாட்களில் ஜஹானாராவின் ரணமெல்லாம் பட்டுப்போய் விட்டது. நாடே குதூகலத்தில் ஆழ்ந்தது. அற்புதமான மருந்தைத் தயாரித்துத் தந்த அடிமை அரீபைப் பாராட்டிக் கௌரவிக்க மறுநாள் பெரிய 'தர்பாரே' கூட்டுவதென்று முடிவு செய்தார் ஷாஹின்ஷா ஷாஜஹான்.

அன்று வழக்கத்தைவிட முன்னதாகக் குலால் வீட்டுக்குத் திரும்பிக் கொண்டிருந்தாள். குதூகலத்தால் அவள் உள்ளம் குதி போட்டுக் கொண்டிருந்தது. தன்னால் அரசகுமாரிக்கு நேர்ந்த ஆபத்தைத் தானே குணமாக்கிய பெருமை—தன் அண்ணனுக்கு மறுநாள் அரச சபையிலே கிடைக்க போகும் பாராட்டு—கௌரவம், இவைகளின் நினைப்பிலே ஏற்பட்ட மகிழ்ச்சியின் பளு தாங்காமல், "அண்ணா......அண்ணா! உனக்கு அதிர்ஷ்டம் வந்திருக்கிறது......அரசர் உன்னை..." என்று சொல்லிக் கொண்டே உள்ளே வந்தவள் கூடத்திலே அலங்கோலமாக விழுந்துகிடந்த அந்த உருவத்தைக் கண்டு 'வீல்' என்று கத்தி விட்டாள். அது அரீப்தான்-அவள் அண்ணன் தான். ஆனால் அந்த அரீபுக்கும் அவனுக்கும் தான் எத்தனை வித்தியாசம்?

ஒட்டி உலர்ந்த உடல். கைகால்களிலே அங்கங்கே கட்டு. அவனைப் பார்க்கவே பயங்கரமாகப் பரிதாபமாக இருந்தது. எத்தனை ஆவலுடன் அண்ணனைச் சந்திக்க வந்தாளோ, அதற்கு நேர்மாறான மனத் தவிப்புடன், "அண்ணா! ஏன் இப்படி அலங்கோலமாகப் படுத்திருக்கிறாய்? உன்னைப் பார்க்க, உன்... நிலை எனக்குப் பயமாக இருக்கிறதே, அண்ணா!" என்றாள்.

அரீப் மிகுந்த பிரயாசையுடன் தன்னைச் சமாளித்துக் கொண்டு எழுந்து உட்கார்ந்தான். மூச்சு வாங்கியது. இளைப்பு இழுத்தது. "குலால்! ஜஹானாராவுக்கு உடல் பூரண குணமாகி விட்டதல்லவா? முன் போல் சிரித்துப் பேசிச் சிங்காரமாக உலாவுகிறாளா?" பேசிய ஆயாசத்தோடு இருமலும் சேர்ந்து கொக்கி போட்டு இழுத்தது. அதற்கு மேல் பேச முடியாமல் தவித்தான்.

"ஆம், அண்ணா. அவள் பழைய ஜஹானாரா ஆகிவிட்டாள். ஆனால் இதென்ன கோரம்? நீ ஏன் இப்படி ஆகிவிட்டாய்?" உள்ளம் துடிக்கக் கேட்டாள் குலால்.

"குலால்! உன் அருமை அண்ணா இன்னும் சில மணி நேரம்தான் இந்த உலகிலே வாழப் போகிறான்!" விரக்தியுடன் பேசினான் அரீப்.

"ஐயோ! அப்படி எல்லாம் சொல்லாதே, அண்ணா. உனக்கு என்ன? சொல், அண்ணா!" உயிர் துடிக்கக் கதறினாள் குலால்.

"சொல்லத்தான் போகிறேன், குலால். இத்தனை நாள் உன்னிடம் சொல்லாத ரகசியத்தைச் சொல்லத்தான் போகிறேன்." உடலிலுள்ள பலத்தையெல்லாம் ஒன்று சேர்த்துக் கொண்டு பேசினான் அரீப்.

"சொல், அண்ணா...உன் உடலும் முகமும் இப்படி வெளுத்து விகாரமாகி விட்டனவே! அது ஏன், அண்ணா?" தாங்க முடியாத சகோதர பாசத்தினால் பதறிப்போய்க் கேட்டாள் குலால்.

"என் ரத்தத்தால் என் காதலியின் ரணங்களை ஆற்றினேன்!"

"என்ன காதலியா? கவிதைக் கதை சொல்லாதே, அண்ணா!"

"கதையல்ல, குலாப்! சொன்னால் நம்ப மாட்டாய். ஆதியிலிருந்தே என் வாழ்க்கையைச் சொன்னால்தான் உனக்குப் புரியும். நான் ஒரு நாடோடி. உங்கள் இளவரசியை நான் இங்கு வருவதற்கு முன்பே பார்த்து விட்டேன். அவளைக் கண்டதிலிருந்து பித்தனானேன்."

"அண்ணா! உனக்கு ஜுரமொன்றுமில்லையே? ஜன்னியால் பிதற்றுகிறாயா?"

அவள் கேள்விக்குப் பதில் சொல்லாமல் அவன் பேசிக் கொண்டு போனான்:

"என் உள்ளத்திலே குடிகொண்ட அந்தக் காதல் தெய்வத்தை அடைய முடியா விட்டாலும் அருகில் இருந்தபடியே அவளைப் பார்த்துக்கொண்டே வாழ்நாள் முழுதும் கழித்து விடலாம் என்று எண்ணினேன். வழி தெரியாமல் விழித்துக் கொண்டிருந்தபோது விதி உன்னை எனக்குத் தங்கையாக்கி வைத்தது."

"நீயா இளவரசி ஜஹானாராவைக் காதலித்தாய்......?"

"நம்ப முடியாத விஷயமாக இருக்கிறதா? ஆம், குலாப்! கேட்டால் யாரும் சிரிப்பார்கள். ஆனால் அவள் நினைவு நெருப்பாக என் நெஞ்சிலே எரிந்து கொண்டிருந்தது."

ஏனோ இதைக் கேட்டதும் குலாபுக்கு ஆத்திரம் பற்றிக் கொண்டு வந்தது. அது பாசத்தினால் ஏற்பட்டதோ, என்னவோ தெரியாது!

"ஐயோ பாவம்! பகல் கனவு கண்டு பாழாகி விட்டாயே. மொகலாய வம்சத்தின் ஒளி விளக்கு எங்கே? ஊர் பெயர் தெரியாத நீ எங்கே? மனத்தாலும் நினைக்க முடியாதே! இப்போதுதான் எனக்கு உன் செய்கைகளின் உள் அந்தரங்கமெல்லாம் புரிகிறது. பாடல்களிலே உன் சொந்தக் காதல் வேதனையைத்தானா குழைத்துக் கொடுத்தாய்? தோட்டக்காரனை மாற்றியதும் இதற்காகத்தானா? உன் காதல் நாடகத்துக்கு என்னைக் கருவியாக்கிக் கொண்டாயா?" என்று கத்தி விட்டாள்.

ஆனால் அரீப் மூச்சுத் திணறலுடன் நிதானமாகவே பேசினான்:

"காதல் நாடகம் என்று சொல்லாதே, குலாப்! உண்மையாக ஹிருதய பூர்வமாக ஜஹானாராவை நான் காதலித்தேன். குலாப்! என்னை நீ வெறுக்கலாம். அது சகஜம்...... ஆனால்..." இளைப்பு மேலிட்டது. பேச முடியாமல் தவித்தான்.

அரீப் படும் அவஸ்தையைக் கண்ட குலாபின் உள்ளம் மெழுகாக உருகி விட்டது. "ஐயோ, அண்ணா! என்னை மன்னித்து விடு. உன்னை நான் வெறுக்க வில்லை. உன்னைப் போன்ற அன்புள்ளம் படைத்த ஒரு அண்ணா இனி எனக்கு எங்கே கிடைப்பான்? ஐயோ, சொல், அண்ணா! காதலித்தவர் வாழ்வதில்லையா? உனக்கு மட்டும் இந்தக் கதி வருவானேன்?"

"ஜஹானாரா எனக்குக் கிடைக்க மாட்டாள் என்பது தெரியும், குலாப். எதிர்பாராது ஏற்பட்ட விபத்திலே அந்த அழகு மலர் அழிந்து போவதை என்னால் தாங்க முடியவில்லை. அவள் உயிரைக் காக்க என்னுடைய உயிரையே கொடுத்தேன்."

"எப்படி? அப்படியானால்—அந்த மருந்து?"

"அந்த மருந்துதான் என் உயிர். என் ரத்தத்தைக் கொண்டு தயாரித்த ஒரு பச்சிலைதான் அவள் உடலிலே பழைய அழகைக் கொடுத்தது."

'கோ' வென்று கதறி விட்டாள் குலாப்; வேதனை விம்மல்களாகத் தேய்ந்தபோது, "அண்ணா! நான் மோசம் போனேன். மருந்து தயாரிக்கும் அறைக்குள் என்னை வரக்கூடாது என்றபோதே நான் சந்தேகப் பட்டேன். அப்படியானால் உங்கள் கைகளிலும் காலிலும் உள்ள இந்தக் கட்டுகளெல்லாம் உங்கள் உதிரத்தை வடித்த வாயில்களா? ஐயோ, எத்தகைய கோரமான தியாகம், அண்ணா!" என்று தேம்பினாள் குலாப் குழந்தையைப் போல்.

"அவள் இல்லாமல் எனக்கு வாழ்வில்லை; அவளோ எனக்குக் கிடைக்கப் போவதில்லை. ஆகவே நான் வாழ்ந்து என்ன பயன்? அதற்காகவே இந்தக் கொடிய மருந்தை என் உதிரத்தை வடித்து வடித்துப் பச்சிலைச் சாற்றுடன் கலந்து குழைத்துப் புடமிட்டுக் கொடுத்தேன். குலாப்! கடைசியாக என் ஒரு வேண்டுகோளை நிறைவேற்றுவாயா?" என்று கேட்டான் அரீப். பேசமுடியாமல் மூச்சுத் திணறியது அவனுக்கு.

"சொல், அண்ணா! இந்தப் பாவியால் என்ன ஆகவேண்டும்?"

"என்னுடைய இந்தப் பைத்தியக்காரக் காதல் என்னுடனேயே மடிய வேண்டும்; இதைப் பற்றி யாரிடமும் சொல்லாதே, குலாப், சொல்ல மாட்டேன் என்று சத்தியம் செய்து கொடு. அரீப் அளித்த அற்புத மருந்தின் ரகசியத்தையும் காப்பாற்றுவேன் என்று அடித்துக் கொடு, குலாப்!" என்றான் அரீப்.

துக்கம் தொண்டையை அடைக்க வேதனையுடன், "காப்பாற்றுவேன் அண்ணா, காப்பாற்றுவேன். இது சத்தியம்" என்றாள் குலாப் விம்மல்களிடையே.

"குலாப்! எனக்காக இந்த உலகில் கண்ணீர் விட நீ ஒருத்தி இருக்கிறாய் என்பதை நினைக்க எனக்கு எத்தனை நிம்மதியாக இருக்கிறது, தெரியுமா? ஜஹானாரா! அன்பே—அழகே, மறு ஜன்மத்திலாவது உன்னை அடையும் பாக்கியம் எனக்குக் கிடைக்குமா? ஜஹானாரா!" காதலியின் பெயரை உச்சரித்தபடியே அவன் மூச்சு நின்றது.

"ஐயோ, அண்ணா! உன் நிறைக்குப் பொன் நாணயங்களை உன் காலடியில் கொட்டிக் குவிக்கப் போவதாகச் சொன்னாரே மன்னர். ஆனால் உன் தியாகத்துக்கு இந்த இந்துஸ்தானத்தையே அளிப்பதானாலும் ஈடாகாதே, அண்ணா!" என்று அவன் மார்பிலே விழுந்து இதயம் வெடிக்கப் புரண்டு அழுதாள் குலாப்.

மறுநாள் தர்பார் மண்டபத்திலே மன்னரும் மக்களும் வெகு நேரம் வரையில் அரசகுமாரிக்கு மறுவாழ்வளித்து அற்புதமான ஔஷதத்தைத் தயாரித்த அதிசய மனிதன் அரீப் என்பவனைச் சந்திக்க ஆவலுடன் வெகு நேரம் வரை காத்திருந்தார்கள்.










## 'லிப்கோ' சிறு பதிப்புகள் அறிமுக விழா

தமிழ் எழுத்தாளர் சங்கத்தின் சார்பில் சென்னை அண்ணாமலை மன்றத்தில் லிப்கோ சிறு பதிப்புகள் அறிமுக விழா மிகச் சிறப்பாக நடைபெற்றது. விழாவுக்குத் திரு சி. பி. ராமசாமி அய்யர் அவர்கள் தலைமை தாங்கிச் சிறப்பித்தார். திரு ஏ. ஜி. வெங்கடாச்சாரியார் வரவேற்புரை நிகழ்த்தினார். திரு கி. வா. ஜகந்நாதன் அறுபத்துநான்கு நூல்களையும் அறிமுகம் செய்து வைத்தார். தலைவர் ராஜாஜி அவர்கள் புத்தக வெளியீட்டைப் பாராட்டிப் பேசும்பொழுது, சர்க்காரே பண்டிதரை வைத்துத் தங்கள் இஷ்டப்படி புத்தகங்களை வெளியிடுவதால் வரும் கெடுதல்களை விளக்கி, இந்த முயற்சியில் ஈடுபட வேண்டாம் என்றார். தமிழரசுக் கழகத் தலைவர் திரு ம. பொ. சி. அவர்கள், திருவாளர்கள் மயிலைசிவமுத்து, வெருமாரன், பரீதன், திருமதி குகப்பிரியை ஆகியோர் பாராட்டுரை வழங்கினார்கள். எல்லாரும் லிப்கோ அதிபர் திரு கிருஷ்ணசாமி சர்மா அவர்களின் முயற்சியைப் பாராட்டினர். கடைசியில் திரு அழ. வள்ளியப்பா நன்றி கூறினார். இந்த அறிமுக விழாக் காட்சிகள் சிலவற்றை இந்தப் பக்கத்தில் காணலாம். 1. ராஜாஜி அவர்கள் பாராட்டுரை வழங்குகிறார். 2. அறிமுகப் படுத்தப்பட்ட அறுபத்து நான்கு பதிப்புகள். 3. விழாத் தலைவர் தலைமை உரை நிகழ்த்துகிறார். 4. திரு ம. பொ. சி. சிறு பதிப்புகளைப் பாராட்டுகிறார்.









சென்னை புரசைவாக்கம் எம். ஸிடி. முத்தைய செட்டியார் ஹைஸ்கூலில் பல்லாண்டுகள் தலைமை ஆசிரியராக இருந்து பணி புரிந்த திரு வி. எஸ். கோபாலகிருஷ்ண அய்யர் அவர்களைக் கௌரவிக்க 9ம் தேதியன்று ஒரு பாராட்டு விழா நடைபெற்றது. டாக்டர் ஏ. லக்ஷ்மணசுவாமி முதலியார் அவர்கள் விழாவுக்குத் தலைமைதாங்கிச் சிறப்பித்தார்.

1. மேடைமீது திரு கோபாலகிருஷ்ண அய்யர், டாக்டர் லக்ஷ்மணசாமி முதலியார், டாக்டர் யு. கிருஷ்ண ராவ் ஆகியோர் அமர்ந்திருப்பதைக் காணலாம். 2. திரு கோபாலகிருஷ்ண அய்யர் படத்தை டாக்டர் லக்ஷ்மணசுவாமி முதலியார் திறந்து வைக்கிறார். 3. விழாவுக்கு வந்திருந்த அன்பர்கள்.





4. 5. நவம்பர் 12-ந்தேதி சென்னை கீழ்ப்பாக்கத்தில் புதிதாக அமைக்கப்பட்டிருக்கும் சுத்த நீர் வடிகட்டியை உதவி ஜனாதிபதி திரு எஸ். ராதாகிருஷ்ணன் அவர்கள் திறந்து வைத்தார். இந்த நிகழ்ச்சியில் கலந்து கொண்ட கவர்னர் திரு ராஜமன்னார், மேயர் திரு சீனிவாசன், உதவி மேயர் திரு ராமநாதன், ஸ்தலஸ்தாபன மந்திரி லூர்தம்மாள், உதவி கமிஷனர் திரு சங்கரன் ஆகியோர்களையும் விழாவுக்கு வந்திருந்த பிரமுகர்களையும் காணலாம். 6. இந்தியாவில் உள்ள பிரிட்டிஷ் தூதர் திரு மால்கம் மாக்டோனல்டு அவர்கள் சென்னை திரு ஆர். இ. காஸ்டல் அவர்களுக்கு பிரிட்டிஷ் அரசாங்கத்தினர் வழங்கும் ஸி. ஓ. பி. இ. என்னும் கௌரவப்பட்டத்தைப் புது தில்லியிலுள்ள பிரிட்டிஷ் தூதராலயத்தில் வழங்கினார்.







கப்பல் படை அதிகாரிகள் மனைவி மார் சங்கத்தின் சார்பில் புது தில்லியில் ஒரு குதூகல விழா நடைபெற்றது. இதில் நடனமாடிய நான்கு பெண் மணிகள் 1. குமாரி பாரதி ரெட்டியின் நடேஸ்வர நிலை. 2. குமாரி சித்திரா கிருஷ்ணன் பதம் பிடிக்கிறார். 4. குமாரி ராணி செட்டியும் குமாரி இந்திரா சிங்கும் ஆடிய நடராஜ நடனம். 5. கல்கத்தா திரு டி. என். என். ஐயர் அவர்கள் புதல்வி பேபி லலிதாவின் நாட்டிய அரங்கேற்றம் கல்கத்தா பாலஸ்ரீ சினிமா மன்றத்தில் சென்ற மாதம் நடைபெற்றது. 3. சென்னை கோடாக் காரியாலய பத்திரைச் சேர்ந்த மஞ்சேரி திரு ராமன் அவர்களின்புதல்விகள் குமாரிருக்மணி, குமாரி பாமா இவர்களின் பரத நாட்டிய அரங்கேற்றம் திருவல்லிக்கேணி லலித கலா மன்றத்தில் நடைபெற்றது.





# பிரகாசமுள்ள வெண்ணிறப் பற்கள் மட்டுமல்ல அத்துடன் ஆரோக்கியமான ஈறுகளும்!



ஈறுகளை கெட்டியாகவும் ஆரோக்கியமாகவும் வைக்கவும் மற்றும் பற்களுக்கு ஸ்படிகத்தைப் போன்ற வெண்மையை அளிக்க வேண்டும் என்றே போர்ஹான்ஸ் டூத்பேஸ்ட் விசேஷமாய்த் தயாரிக்கப்படுகிறது. உங்களை ஈறுகள் சம்பந்தமான நோய்கள் தொற்றிக்கொண்டு அவதி கொடுக்காதிருக்கவே யாவரும் அறிந்த இப்பற்பசையில் டாக்டர் ஆர்.ஜே. போர்ஹான் டி. டி. எஸ் அவர்கள் பக்குவப்படுத்திய முறையில் விசேஷ காரப் பொருள் கலக்கப் படுகிறது. ரத்தக் கசிவு வீங்கிய ஈறு புண்ணானாலும் மற்றும் கூசும் ஈறுகளை லேசாக போர்ஹான்ஸ் கொண்டு தேய்க்க வேண்டும். அவை உடனே கெட்டியான ஆரோக்கிய நிலைக்குத் திரும்பிவிடும் ஆனபடியால் இந்த இரட்டைக் காரியமுள்ள பற்பசையை நீங்கள் உபயோகித்து பளிச்சென இருக்கும் வெண் பற்களையும் நல்ல ஆரோக்கியமான ஈறுகளையும் உடையவர்களாய்ப் பெருமைப்படலாம்.

தந்த வைத்தியரால்
செய்யப்பட்ட டூத்பேஸ்ட்




**போர்ஹான்ஸ்**
**ஈறுகளுக்குகந்தது**

M-13

ஜியாப்ரே மேனர்ஸ் அண்ட் கம்பெனி [illegible] லிமிடெட்


சின்னப் பூனை
பாலர் மலர்
★
சின்னப் பூனை என்னைப் பார்த்துச்
சிரித்துப் பேசுதம்மா - தன்
முன்னே உள்ள மீசை காட்டி
வருவாய் என்கு தம்மா !

அழைப்பை ஏற்று அருகில் சென்றேன்
நக்கிப் பார்க்குதம்மா - பின்
விழைந்து என்மேல் உடலைத் தேய்த்து
உற்றுப் பார்க்கு தம்மா !

கண்ணைக் காட்டி என்னிடத்தில்
இரையைக் கேட்குதம்மா - பசிக்கு
வெண்ணெய் பாலும் மோரு சோறும்
வேண்டு மென்கு தம்மா !

ஓடும் எலியை விரட்டிப் பிடிக்க
முயற்சி செய்குதம்மா ! - நம்
வீடும் அதனுல் தூய்மையாக
விளங்கும் இனிமேல் அம்மா !

நல்ல பூனை இதற்குச் சோறு
நாமும் போட வேண்டும் - எனக்குக்
கள்ளம் இல்லா இந்தப் பூனை
உற்ற நண்பன் அம்மா !
★
மு. கணேசமூர்த்தி


சோதிடப்புலி
செல்வம் பலே சோதிடன் தான்! அவன் சொன்ன இடத்திலேயே பொருள் கிடைத்து விட்டதாமே!


ஆமாம்! ஜமீன்தாருக்குச் செல்வத்தின் சோதிடத்தில் ஏகப் பிரமை பிடித்து விட்டது. அவனுக்குச் சோதிடப் புலி என்று பட்டம் கொடுத்துத் தமது ஆஸ்தான சோதிடராக்கிக் கொள்ளப் போகிறாராம்.




சோதிடத்தில் வல்லுநரான செல்வம் அவர்களுக்கு நமது சமஸ்தானம் சோதிடப் புலி என்று பட்டம் கொடுத்துக் கௌரவிப்பதில் பெருமை கொள்கிறது. அத்தோடு அவரையே நமது ஆஸ்தான சோதிடராகப் பதவி ஏற்குமாறும் கேட்டுக் கொள்கிறது.


நாகு...நாகு......


என்ன, நாகு! எப்பொழுது பார்த்தாலும் ஒரே சோகமாக இருக்கிறாயே! உடம்பு என்னத்துக்கு ஆகும்?


7 என்ன செய்வேன்? இந்தச் சோதிடர் நமது சமஸ்தானத்திலே காலை வைத்த நாளாக எனக்கு நிம்மதியான தூக்கமே இல்லை. மனசு படக் படக் என்று அடித்துக் கொள்கிறது!


8 ஏனம்?


9 நம்ம குட்டு வெளிப்படாமல் இருக்க வேண்டுமே என்றுதான்.
சே! அப்படியெல்லாம் அவரு சொல்ல மாட்டாரு!


10 நீங்க நினைச்சுக் கிட்டிருக்கீங்க! குளவியாகக் கொட்டிடுறான், மனசு மாறி விடலாம் அல்லவா? ஜமீன்தார் திரும்ப துளைத் தெடுக்கிறாரே!


11 உன் ரோதனையே பெரிய ரோதனையாகப் போச்சு! என்ன செய்யனும் என்கிறாய்?


12 இந்த சமஸ்தானத்தையே விட்டு நாம் ஓடி விட்டால்....?
நாம் ஓடுவானேன்? சோதிடரையே ஓட்டி விட்டால்...?
தொடரும்

# மாயப் பந்து

## 34. பவுன் கிடைத்தது!

மால்கோஷ் சந்தோஷமாகப் பாடிக் கொண்டும் போகிறவர்களுடனும், வருகிறவர்களுடனும் நாளாக நாளாக நன்றாகப் பேசிக் கொண்டும் காலத்தைக் கழிக்கலானான். ஒரு நாள் மாலை அவன் ஒரு பெரிய தென்னந் தோப்பு வழியாகப் போய்க் கொண்டிருக்கும் பொழுது வானம் நிரம்ப மேகங்கள் சூழ்ந்திருந்ததினால் திடீரென்று இருட்டி விட்டது. பலத்த சத்தத்துடன் வானம் இடித்தது! 'பளிச்பளிச்' என்று மின்னல் தோன்றியது. பெரிய மழையும் பெய்ய ஆரம்பித்தது. மால்கோஷ் தங்குவதற்கு இடம் தேடினான்.

இரவுப் பொழுதும் நெருங்கியதால் படுத்துத் தூங்குவதற்கும் மழையினால் நனையாமல் இருப்பதற்கும் ஒரு இடத்தைத் தேடியலைந்தான். அந்தப் பெரிய தென்னந் தோப்பில் பாழடைந்த கட்டடம் ஒன்று இருந்தது. அந்தக் கட்டடத்துக்குள் நுழைந்தான். கட்டடத்துக்குள் எங்கும் கரடுமுரடாக இருந்தது. மின்னல் வெளிச்சத்திலிருந்து சுவர்கள் யாவும் வெடித்துப் போயிருப்பதைப் பார்த்தான். மேல் கட்டடம் மாத்திரம் மிகவும் சேதமாகாமல் இருந்ததினால் மழைக்கு அங்கேயே தங்கி விடலாம்என்று நிச்சயித்தான். பூமியில் பூண்டுகள் நிறைய முளைத்திருந்தன. அவற்றின்மீது படுத்துக் கொண்டான். படுத்துச் சற்று நேரத்துக்கெல்லாம் யாரோ மூச்சு விடுவது போல் சத்தம் கேட்டது. இது யார் இப்படி மூச்சு விடுகிறது? ஒரு வேளை இந்தக் கட்டடத்துக்குச் சொந்தக்காரனாக இருக்கலாமோ? சொந்தக்காரனுடைய உத்தரவு இல்லாமல் நான் இங்கு படுத்துக் கொண்டிருப்பதுதவறு அல்லவா என்று நினைத்தான். ''இங்கு யாராவது படுத்துக் கொண்டிருக்கிறீர்களா?'' என்று மால்கோஷ் பயந்த குரலுடன் கேட்டான்.

அந்த இடத்துக்குச் சொந்தக்காரனாக இருந்தால் ஒரு வேளை தன்னை அந்த இடத்தை விட்டுப் போகச் சொன்னாலும் சொல்லுவான் என்று எண்ணி வெளியே போவதற்கும் தயாராக இருந்தான். ''நான் தான்!'' என்று பதில் வந்தது. மின்னல் வெளிச்சத்தில் ஒரு மூலையிலிருந்த ஜன்னலின் ஓரமாக ஒரு கிழவன் படுத்துக் கொண்டிருப்பதைப் பார்த்தான்.

உடனே மால்கோஷ், ''ஐயா! என்னை மன்னித்துக் கொள்ளுங்கள். உங்கள் உத்தரவு இல்லாமல் நான் இன்று இரவு இங்கு தங்கிப் போவதற்கே வந்தேன்'' என்றான். உடனே அந்தக் கிழவன் நடுங்கிய குரலுடன் ''ஏன் அப்பா என்னை மன்னிப்பு கேட்கிறாய்? நானும் உன்னைப் போல இங்கு இந்த மழையிலும், குளிரிலும் சிரமப் படாமல் இன்று இரவு தங்கிப் போவதற்கே வந்தவன். ஆனால் இந்தக் கட்டடத்துக்கு வந்தும் என்னால் குளிர் தாங்க முடியவில்லை. என் தேகத்தை மூடிக் கொள்ளுவதற்கும் போதிய துணி இல்லை. நான் ஒரு பிச்சைக்காரன்'' என்று பதில் சொல்லவே மால்கோஷுக்கு அவன் மீது இரக்கம் பிறந்தது. அந்தக் கிழவனுடைய குளிருக்கு ஏதாவது உபகாரம் செய்ய வேண்டும் என்று யோசித்தான். அவனிடத்தில் அவன் போட்டுக் கொண்டிருக்கும் கம்பளிக் கோட்டையும், நிஜாரையும் தவிர வேறு என்ன இருக்கிறது? சற்று யோசித்



தான். தன்னுடைய கம்பளிக் கோட்டைக் கழற்றினான்.

''ஐயா! இதை இன்று இரவு குளிரில் சிரமப்படாமல் போட்டுக் கொண்டு தூங்குங்கள். நானைக் காலையில் பார்த்துக் கொள்ளலாம்'' என்று கோட்டை அந்தக் கிழவரிடம் கொடுத்தான். அந்தக் கிழவர் சந்தோஷமாக அந்தக் கோட்டை வாங்கிக் கொண்டார். மால்கோஷ் உடம்பில் ஒன்றுமில்லாமலே படுத்துக் கொண்டிருந்தான்.

''அப்பா! நீ எனக்குக் கோட்டு கொடுத்து உதவியதற்கு நன்றி. உன் பெயர் என்ன அப்பா? உன் ஊர் எது?'' என்று கேட்டார்.

''என் பெயரா? எனக்கு ஒரு பெயரும் இல்லை. எல்லோரும் என்னை 'என்ன அப்பா' 'என்ன அப்பா' என்று அழைக்கிறார்கள்'' என்று பதில் சொன்னான்.

''இது உன் பெயரைக் குறிப்பிடவில்லை. உனக்குப் பெயரே இல்லை என்பது விசித்திரமாயிருக்கிறது. உன் தாயார், தகப்பனார்? எங்கே இருக்கிறார்கள்?'' என்று கேட்டான்.

''எனக்குத் தாயாரும் இல்லை; அப்பாவுமில்லை.''

பாவம், மால்கோஷ்! அவன் தங்கை கலா அருகில் நின்றும் அவன் தெரிந்து கொள்ள வில்லையே. இவன் தன்னைப் பற்றி எப்படி விசாரித்துச் சொல்லமுடியும்? நீ சொல்வது ஆச்சரியத்தை விளைவிக்கிறதே! நீ பிறந்த ஊர் எது? உனக்கு, நீ போட்டுக் கொண்டிருக்கும் உடைகளையெல்லாம் யார் வாங்கிக் கொடுத்தார்கள்?'' என்றான் கிழவன்.

''நான் ஒரு நதிக்கரையில்தான் பிறந்தேன். பிறந்தபொழுதே ஒரு நீண்ட சட்டையுடனும், ஒரு பைஜாமாவுடனும் பிறந்தேன். பிறக்கும்பொழுதே என் சட்டைப் பையில் ஒரு மாயப் பந்து இருந்தது. அந்தப் பந்தைக் கீழே போட்டுப் பிடித்தேன். எனக்கு என்ன வேண்டுமோ அதைக் கொடுத்தது. ஆனால் அது ஒரு நதியில் சென்று கொண்டிருந்த படகில் விழுந்து கெட்டுப் போய் விட்டது. நான் பிறந்தபொழுது அணிந்து கொண்டிருந்த என் சட்டைகளும், பைஜாமாவும் அழுக்குப் படிந்து கிழிந்து விடவே, ஒரு தனவந்தர் எனக்கு நான் போட்டுக் கொண்டிருக்கும் நிஜாரையும், உங்களுக்குக் கொடுத்திருக்கும் கம்பளிக் கோட்டையும் கொடுத்து உதவினார்'' என்றான் மால்கோஷ்.

உடனே கிழவர் சிரித்துக் கொண்டே, ''என்ன அப்பா! நீ பேசுவதைப் பார்த்தால்



மிகவும் நல்லவனாகத் தோன்றுகிறாய். ஆனால் உனக்கு ஒரு பெயரும் இல்லை என்றும் சட்டைகளுடனேயே பிறந்தாய் என்றும் உனக்குத் தாயாரும் தகப்பனாரும் கிடையாது என்றும் சொல்லுவது மிகுந்த ஆச்சரியத்தை விளைவிக்கிறதே! உனது மூளை பாதிக்கப்பட்டிருக்கிறது என்று நினைக்கிறேன். அது போகட்டும். நீ நாளைக் காலையில் எங்கே போவதற்காக இருக்கிறாய்?'' என்று கேட்டான்.

''நான் எங்கே போகிறேன் என்பது எனக்குத் தெரியாது. நான் நினைத்த இடத்துக்குப் போய்க் கொண்டிருப்பேன். சாப்பாட்டுக்கு ஏதாவது பொருள் சேகரித்து என் பசியைத் தணித்துக் கொள்ளுவேன்'' என்று மால்கோஷ் பதில் சொன்னவுடன் அந்தக் கிழவன் ''அப்படியானால் நாளைச் சாப்பாட்டுக்கு உன்னிடத்தில் பணம் இருக்கிறதா?'' என்று கேட்டான். 'இல்லை' என்று பதில் வந்தது, மால்கோஷிடமிருந்து.

''ஐயோ, பாவம்! எனக்கு இந்தக் குளிரில் கோட்டைக் கொடுத்து உதவிய உன்னை நான் மறக்கவேமாட்டேன். உனக்கு நாளைச் சாப்பாட்டுக்கு என்னிடத்தில் உள்ள பணத்தில் கொஞ்சம் கொடுக்கட்டுமா?'' என்று கேட்டான் கிழவன். ஆனால் மால்கோஷிடமிருந்து ஒரு பதிலும் வரவில்லை.

கிழவன் இரண்டு முறை தான் சொன்னதையே திருப்பித் திருப்பிச் சொன்னான். பதில் வரவேயில்லை.

'பாவம்! களைப்பினால் அயர்ந்து தூங்கி விட்டான் போல இருக்கிறது. காலையில் பார்த்துக் கொள்ளலாம்' என்று கிழவனும் அயர்ந்து தூங்கி விட்டான்.

மறுநாள் விடியற்காலையில் மால்கோஷ் தூங்கி எழுந்தான். இரவில் தான் சட்டை கொடுத்து உதவிய கிழவன் இருக்கிறானா என்று பார்த்தான். கிழவன் படுத்துக் கொண்டிருந்த இடத்தில் அவனைக் காணவில்லை. ஆனால் அவனுக்குக் கொடுத்திருந்த கோட் மாத்திரம் தன்மீது போடப் பட்டிருந்ததைப் பார்த்தான். கோட்டைக் கையில் எடுத்துக் கொண்டு கட்டடத்துக்கு வெளியே வந்து கிழவன் இருக்கிறானா என்று நாலாபக்கமும் சுற்றிப் பார்த்தான். அகப்படவில்லை. 'எனக்கு ஒரு சிநேகிதர் அகப்பட்டார் என்று நினைத்தேன். அவரும் போய் விட்டார்' என்று சொல்லிக் கொண்டே கோட்டைப் போட்டுக் கொண்டான். மெதுவாகக் கிழக்கு பக்கம் நோக்கி நடந்து சென்றான். அவனுக்குப் பசி காதை அடைத்தது.

'ஐயோ! மிகவும் பசிக்கிறதே. கையிலே ஒரு காசும் இல்லை. யாரையாவது காசு கேட்டுத்தான் வாங்க வேண்டும்' என்று தனது வலது பக்கச் சட்டைப் பையில் கையை விட்டான் மால்கோஷ். அந்தப் பையில் பெரிய பொத்தானைப் போல் தென்பட்டது. என்ன இது? நேற்று இரவு என் பையில் ஒன்றுமில்லை. இப்பொழுது ஏதோ தென்படுகிறதே' என்று கையில் அகப்பட்ட சாமானை வெளியிலே எடுத்துப் பார்த்தான். என்ன ஆச்சரியம்! மால்கோஷினால் அவன் கண்களையே நம்ப முடியவில்லை. 'இதென்ன! நான் கையில் வைத்திருப்பது ஒரு பொன் நாணயம் அல்லவா? இதை ஒரு சவரன் என்றல்லவா சொல்லுவார்கள்? இதை என் சட்டைப் பையில் அந்தக் கிழவர் தான் போட்டிருக்க வேண்டும். வந்ததைத் தெரிவிக்கக்கூட அவரைக் காணவில்லை. எனக்கு யாராவது பணம் கொடுத்தால் ஒரு அணா அல்லது இரண்டு அணாவுக்கு மேல் கொடுக்க மாட்டார்கள். கிழவர் ஒரு பவுனையே கொடுத்து விட்டாரே!'

'நான் இப்பொழுது பணக்காரனாக ஆகிவிட்டேன். இனிமேல் என் பசியைப் பற்றி எனக்குக் கவலை இல்லை' என்று சந்தோஷத்தினால் குதித்தான். மால்கோஷ் பசியைத் தணித்துக் கொள்ள ஹோட்டலுக்குச் செல்ல நினைத்தான். அப்பொழுது சமீபத்தில், ஒரு சாதாரண ஹோட்டல் இருப்பதைப் பார்த்ததும் அவன் ஆவலோடு அங்கே சென்றான். (தொடரும்)







கூந்தலுக்கு கேசவர்த்தினி யின் பராமரிப்பு அவசியம்

கேசவர்த்தினியால் உங்கள் கூந்தல் அழகையும், அடர்த்தி யையும் அடையட்டும். இந்த நக்ஷத்திரங்களைப்போல் உங்கள் கூந்தலைப் பிரகாசிக்கச் செய் யுங்கள். கூந்தலின் பெருமையை யடைய கேசவர்த்தினியைத் தேர்ந்தெடுங்கள்.





கேசவர்த்தினி குப்பியிலும் தன்மை மணமாக யும், சுத்தமாகவும் வைத்துக் கொள்ளுங்கள்

# கேசவர்த்தினி

பிராடக்ட்ஸ், கோயமுத்தூர்

GP

எங்கள் இதர தயாரிப்புகள்: அஞ்சன் கண் மை

---



அவள் சொல்வது சரியே. பித்தளை, தாமிர சாமான்களில் பிராஸோ ஏற்படுத்தும் மாறுதலைப் பற்றி அவள் நன்கறிவாள். பிராஸோ சுத்தம் செய்வதோடு பளபளப் பாகவும் செய்கிறது — அதுவும் மிருதுவாக, விரைவாக, எளிதாக.



## "பிராஸோ மட்டுமே பித்தளையை அவ்வளவு பளபளப்பாகச் செய்கிறது"




திரவம் அல்லது பசை

# பிராஸோ

மெட்டல் பாலிஷ்

அட்லான்டிஸ் (ஈஸ்ட்) லிமிடெட்
(இங்கிலாந்தில் இணைக்கப் பெற்றது)



# ஸெவன் ஓ'க்ளாக் பிளேடினால் அநேக தடவை க்ஷவரம் செய்து கொள்வதன் மூலம் பணத்தைச்

# சேமியுங்கள்

மட்டாக பிளேடுகள் வாங்குவதால் பணம் சேமிக்கப்படுகிறது என்று நீங்கள் எண்ணுவது தவறு. குறைந்த விலைக்கு வாங்கப்படும் பிளேடு ஒரு க்ஷவரத்துக்குப் பிறகு மறுபடியும் உபயோகிக்க முடியாத நிலைமையை அடைவதால் பிரயோஜனமற்றதாக ஆகிவிடுகிறது.

ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள் மிகவும் கூர்மையானவை என்பதை சொல்லவும் வேண்டுமோ. ஒவ்வொரு பிளேடும் அநேக தடவை க்ஷவரம் செய்துகொள்ளமட்டுமா உதவுகிறது. மழுமழுப்பான க்ஷவரத்தையும் அளிக்கிறது. ஆதலால்தான் ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகள் வாங்குவதன் மூலம் பணத்தை சேமிக்கிறீர்கள்.




## 7 o'clock BLADES

இன்றே ஸெவன் ஓ'க்ளாக் பிளேடுகளை வாங்குங்கள்

# மாலவல்லியின் தியாகம்



அத்தியாயம் 21

## இரு நண்பர்கள்!

**கா**ஞ்சிபுரத்திலிருந்து வெளியூர் போகும் நெடுஞ்சாலை இருமருங்கிலும் அடர்ந்து வளர்ந்த புளிய மரங்களுடன் நெடுந்தூரம் வரையில் குளிர் நிழல் படர்ந்த சோலையாகவே விளங்கியது.

மனோகரமான காலை நேரம்; சூரியோதயம் ஆகி ஒரு ஜாமம் இருக்கும். ஓங்கி வளர்ந்திருந்த மரங்களின் உச்சியில் வசந்த காலத்தின் இளந் தென்றல் உலாவியபோது சலசலவென்று இலைகள் அசையும் இனிய ஓசை எழுந்தது.

பறவையினங்கள் எழுப்பிய மதுரமான அமுத ஒலிகள் அமரகீதமாகப் பெருகிக் கொண்டிருந்தன.

மனித சஞ்சாரமற்ற அந்தப் பாதையில் குதிரைகள் மெதுவாகக் காலடி வைக்கும் ஒலியைத் தவிர வேறு சத்தம் எதுவும் கேட்கவில்லை.

அந்த இரண்டு குதிரைகளின் மீதும் பிரயாணம் செய்து கொண்டிருந்த பிரயாணிகள் இருவரும் மௌனமாகவே சென்றார்கள். குதிரைகள் இரண்டும் நீண்ட நெடுந்தூரப் பிரயாணம் காரணமாக அலுத்துக் களைத்துப் போயிருந்தன என்பது அவைகளின் தளர் நடையிலிருந்து தெரிந்தது. குதிரைகளைப் போலவே அந்தப் பிரயாணிகள் இருவரும் சோர்ந்து போயிருந்தனர். அந்தக் குதிரைகளில் ஒன்று கம்பீரமான தோற்றங்] கொண்டது; வெள்ளை நிறங்கொண்ட அந்தப் புரவி சர்வ லக்ஷணங்களும் பொருந்தியதா யிருந்தது. அவ் வெண் புரவியில் அமர்ந்திருந்தவனும் ராஜ குடும்பத்துக் கேற்ற கம்பீரமான ஆகிருதியுடனும், மேலங்கி, தலைப்பாகையுடனும் காணப்பட்டான். இன்னொரு குதிரை கபில நிறம் கொண்டது; அந்த வெள்ளைக் குதிரையைவிடத் தோற்றத்தில் சற்றுச் சிறியதா யிருந்தது. அந்தக் குதிரையின்மேல் அமர்ந்திருந்தவன் தலையை முண்டனம் செய்து கொண்டு, காஷாய உடை தரித்திருந்த புத்த பிக்ஷுவாகக் காணப்பட்டான். அவர்களது குதிரைகள்தான் ஒரே பாதையில் சென்றனவே தவிர அவர்களுடைய உள்ளங்கள் வெவ்வேறு திசைகளில் சஞ்சரித்துக் கொண்டிருந்தன. அவர்கள் வேறு யாரும் அல்ல; சிம்ம வர்மனும் கலங்க மாலரையரும்தான்.

இருவரும் ஒருவரை யொருவர் வெளிப் பார்வைக்கு நேசித்தனரே தவிர, உண்மையில் ஒருவரை யொருவர் கொன்று விடும் அளவுக்கு அவர்கள் உள்ளங்களில் குரோதத் தீ கனன்று கொண்டிருந்தது.

கி. ரா. கோபாலன்

பகிரங்கமாக அவர்கள் பகைமை பாராட்டிக் கொள்ள முடியாமல் இருந்ததற்குக் காரணம், ஒருவரை யொருவர் மிஞ்சக் கூடிய அளவுக்கு அவர்கள் வஞ்சக நெஞ்சம் படைத்தவர்களா யிருந்ததுதான்.

வஞ்சகமான முறையில், காஞ்சிபுரத்துப் பல்லவ சிம்மாசனத்தைக் கைப்பற்ற வேண்டும் என்னும் கொடிய எண்ணம் சிம்மவர்மனின் உள்ளத்தில் நீண்ட நாட்களாகத் தழைத்து வந்தது. அதற்கு உறுதுணையா யுள்ளவர்களை யெல்லாம் சிம்மவர்மன் தன்னுடைய நண்பர்களாகக் கொண்டு பழகி வந்தான்.

அவனுடைய தீய எண்ணத்துக்குப் பூதுகன் ஆதரவாயிருப்பவன் போல் வெளிப்படையில் காட்டிக் கொண்டான்.

ஆனால் கலங்கமாலரையரால் அவனை அப்படி எளிதில் ஏமாற்ற முடியவில்லை. சிம்மவர்மன் விழிப்புடன் இருந்தபடியினால் அவர் கைவரிசை செல்லவில்லை. கலங்கமாலரையரை ஒழித்துக் கட்டிவிடலாம் என்றால், பல்லவ சேனாபதி உதய சந்திரனோடு அவர் நெருங்கிய தொடர்பு கொண்டு சிம்மவர்மனையே கண்காணிக்கலானார். ஆகவே, சிம்மவர்மனால் அவரை ஒன்றும் செய்ய முடியவில்லை.

பூதுகனுடைய புத்தி சாதுர்யத்திலும், வாக்கு வன்மையிலும் சிம்மவர்மனுக்கு அளவுகடந்த நம்பிக்கை ஏற்பட்டு விட்டது. தன்னுடைய எண்ணம் கைகூட வேண்டுமானால் பூதுகனுடைய உதவியை அவசியம் பெற்றாக வேண்டும் என்று தீர்மானித்துக் கொண்டான். அதனால் தான் அடிபட்டு விழுந்த பூதுகனை எடுத்துப் போய்க் காப்பாற்றி, தேனார்மொழியாள் இல்லத்தில் ஒருவரும் அறியாமல் வைத்திருந்தான்.

சிம்மவர்மனுடைய சூழ்ச்சியைப் பூதுகன் நன்றாய் அறிந்திருந்தபடியினால், அந்தச் சூழ்ச்சியைத் தனக்குச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டான்.

சிம்மவர்மனுடைய செயல்களை யெல்லாம் ரகசியமாக ஒற்றர்கள் மூலம் அறிந்து வந்த கலங்கமாலரையர், தேனார்மொழியாள் இல்லத்தில் பூதுகன் இருந்ததைக் கண்டு பிடித்து விட்டார். பிறகு பூதுகன் மீது சதிக் குற்றம் புனைந்து அவனைச் சிறைப்படுத்தப் பல்லவ சேனாபதியின் மூலம் ஏற்பாடு செய்தார்.

இந்த ஏற்பாட்டைச் சோதிடர் சந்தகர் மூலம் அறிந்துகொண்ட பூதுகன் காஞ்சிபுரத்திலிருந்து வெளியேறி விட்டான். பூதுகன் வெளியேறியது கலங்கமாலரையருக்குத் தெரியாது. சிம்மவர்மனுக்கும் தெரியாது.

கொடும்பாளூராருடன் நட்புப் பூணுவது தன் ராஜதந்திர நோக்கங்களுக்குப் பெரிதும் சாதகமாயிருக்கும் என்ற எண்ணத்தினால் சிம்மவர்மன் கொடும்பாளூருக்குப் போகத் தீர்மானித்தான். இந்தத் தீர்மானத்துக்கு வித்து ஊன்றியவன் பூதுகன்தான். அத்துடன் அவன் எப்பொழுது புறப்பட வேண்டும் என்பதையும் அவனே தீர்மானித்துச் சொல்லி விட்டான். ஆதிக்க வெறியினால் உந்தப்பட்ட சிம்மவர்மன் பூதுகனின் சூழ்ச்சியை அறிந்து கொள்ளாமல், கொடும்பாளூருக்கு உடனே புறப்பட்டு விட்டான்.

கொடும்பாளூர் இளவரசர்களான ஆதித்தனுக்கும் பராந்தகனுக்கும் கலங்கமாலரையரை நன்கு தெரியுமாதலால், அவரையும் அழைத்துப்போவது உசிதமாயிருக்கும் என்று பூதுகன் சிம்மவர்மனிடம் சொல்லியிருந்தான். ஆகவே, கலங்கமாலரையரையும் கொடும்



பாளூருக்குத் தன்னோடு வருமாறு சிம்மவர்மன் அழைத்தான்.

சோழ ராஜ்யம் உருவாவதற்கு வேண்டிய முயற்சிகளில் ஈடுபட்டிருக்கும் பூதுகனைத் தோல்வியடையச் செய்வதற்காகத் தாம் கொடும்பாளூ



ராருடன் தொடர்பு கொள்ளுவது அநுகூலமாயிருக்கும் என்று கலங்கமாலரையர் நினைத்தார்.

கொடும்பாளூர்ச் சகோதரர்கள் சோழராஜ்யம் அமைப்பதில் பெரிதும் ஆர்வம் உள்ளவர்கள் என்பதும் பழையாறை விஜயனுக்கு மிகவும் வேண்டியவர்கள் என்பதும் கலங்கமாலரையருக்குத் தெரிந்ததுதான். இதன் காரணமாக அவர்களுக்குத் தஞ்சை மன்னர் மாறன் முத்தரையரிடம் கூடப் பகை ஏற்பட்டிருந்தது அவருக்குத் தெரியாததல்ல.

மேற்கூறியவைகளெல்லாம் நன்கு தெரிந்திருந்ததனுல்தான் கலங்கமாலரையர், பூதுகனைப் பல்லவ ராஜ்யத்துக்கு விரோதி என்று பகிரங்கமாக நிரூபிப்பதற்குப் பல சூழ்ச்சிகளை வெகுநாட்களாகச் செய்தவண்ணம் இருந்தார்.

ஆனல், பூதுகன் விஷயத்தில் அவருடைய சூழ்ச்சிகள் எதுவும் பலிக்கவில்லை. ஆயினும் கலங்கமாலரையர் தம் முயற்சியில் தளரவில்லை. காஞ்சீபுரத்து வீதியில் பூதுகன் தன்னந் தனியாகப் போய்க் கொண்டிருந்தபோது அவர் அவனைப் பழி தீர்த்துக் கொண்டார். ஆனல் தக்க சமயத்தில் சிம்மவர்மன் தலையிட்டதனல் பூதுகன் கலங்கமாலரையரின் பிடியிலிருந்து தப்ப முடிந்தது. பூதுகன் அவர் பிடியிலிருந்து தப்பினலும், அவர் அவனைத் தம் பார்வையிலிருந்து தப்ப விடவில்லை. கண்காணித்துக் கொண்டேயிருந்தார். எப்படியாவது அவன்மீது சதிக்குற்றம் சுமத்திவிட வேண்டும் என்பதுதான் அவரது நோக்கம். பல்லவ சேனுதிபதி உதயசந்திரன் மூலம் தம் கடைசி முயற்சியைத் தொடங்கியிருந்தார். அம்முயற்சி பலித்து விட்டது என்ற எண்ணத்தினல் தான் அவர் உற்சாகமாயிருந்தார்.

சிம்மவர்மனிடம் கலங்கமாலரையருக்கு உள்ளூறப் பகை இருந்தாலும், கொடும்பாளூர்க்காரர்களின் உதவியைப் பெறுவதற்கு அவன் அவருடன் இருக்க வேண்டியிருந்தது. பல்லவ மன்னனின் சகோதரனை சிம்மவர்மனை அவருக்கு நண்பன் என்று தெரிந்தால் கொடும்பாளூர்க்காரர்கள் அவர்மீது அதிகமாக மதிப்பு வைப்பார்கள் என்று அவர் எதிர்பார்த்தார்.

'கொடும்பாளூர்க்காரர்களுக்குக் கலங்கமாலரையர் மீது ஒரு கண் இருக்கிறபடியினல் நீங்கள் எப்படியாவது அவனை அங்கே அழைத்துச் செல்ல வேண்டும். அவனை அங்கு அழைத்துச் சென்ருல்தான் அவர்களுக்கு உங்கள்மீது நம்பிக்கை ஏற்படும்' என்று மிகவும் தந்திரமாகப் பூதுகன் சிம்மவர்மனிடம் கூறியிருந்தான். அதன் காரணமாகத்தான் சிம்மவர்மன் கலங்கமாலரையரைத் தன்னுடன் அழைத்துச் செல்வதற்குச் சம்மதித்தான்.

இப்படி இருவரும் பலப்பல விதமாகச் சிந்தித்தவண்ணம் குதிரையின்மீது போய்க் கொண்டிருந்தபோது தூரத்தில் கோட்டை மதில்கள் தெரிந்தன.

"கலங்கமாலரையரே! அதோ தெரிகிறதே, அதுதானே கொடும்பாளூர்க்

கோட்டை மதில்!'' என்று சிம்மவர்மன் எதிரே சுட்டிக் காட்டினான்.

''ஆமாம். அதுதான் கொடும்பாளூர்க் கோட்டைமதில். குதிரையைக் கொஞ்சம் வேகமாகத் தட்டி விட்டால் விரைவில் போய்ச் சேர்ந்து விடலாம்!'' என்றார் கலங்கமாலவரையர்.

சிம்மவர்மன், ''ஆகா! அப்படியே செய்வோம்!'' என்று கூறித் தன் குதிரையை வேகமாகச் செலுத்த ஆரம்பித்தான்.

கலங்கமாலவரையரும் தமது குதிரையை வேகமாகச் செலுத்தலானார்.

குதிரைகள் இரண்டும் நாலுகால் பாய்ச்சலில் 'டக் டக் டக் டக்' என்று வேகமாக ஓடின. அந்த நெடுஞ்சாலை முழுவதும் ஒரே புழுதிமயமாக ஆயிற்று.

* * *

சிம்மவர்மனும் கலங்கமாலவரையரும் கொடும்பாளூர் நகருக்குள் நுழைந்து கோட்டை வாசலுக்கு அருகே சென்றதும் கோட்டை வாசற் காவலர்கள் தடையேதும் சொல்லாமல் அவர்கள் இருவரையும் உள்ளே அனுமதித்தனர்.

அது சிம்மவர்மன் உள்ளத்தில் அகம்பாவத்தையும், கலங்கமாலவரையரின் உள்ளத்தில் வியப்பையும் உண்டாக்கியது.

சுற்றிச்சுற்றி, வளைந்து வளைந்து சென்ற பாதை வழியாக இருவரும் குதிரைகளைச் செலுத்திக் கொண்டு வெகு நேரம் சென்றனர். அவர்கள் உள்கோட்டை வாசலை அடைந்தபோது நடுப்பகல் நேரம் கடந்து விட்டது.

அங்கே ஆதித்தனும் பராந்தகனும் மிகவும் ஆவலோடு கலங்கமாலவரையரையும் சிம்மவர்மனையும் வரவேற்றனர்.

சிம்மவர்மனும் கலங்கமாலவரையரும் அன்று கொடும்பாளூர் அரண்மனை விருந்தினராயிருந்தனர். ஆதித்தவர்மனும் பராந்தகனும் அவர்களிடம் காட்டிய அன்பு பிரமிக்கத் தக்கதாயிருந்தது. சிம்மவர்மனும் கலங்கமாலவரையரும் அடைந்த மகிழ்ச்சிக்கு எல்லையே இல்லை. இருவரும் தங்கள் தங்கள் சூழ்வினைக்கு ஏற்பப் பலவிதமான யோசனைகளோடு மிகவும் ஆனந்தமாயிருந்தனர்.



ஆதித்தனும் பராந்தகனும் கொடும்பாளூர் அரண்மனைச் சபா மண்டபத்தில் சிம்மவர்மனுக்கும் கலங்கமாலவரையருக்கும் ஒரு வரவேற்பு உபசாரம் அளித்துக் கௌரவித்தனர்.

* * *

மறுநாள் காலை சிம்மவர்மனுக்கும் கலங்கமாலவரையருக்கும் கொடும்பாளூர்க்கோட்டையைக் காட்ட ஆதித்தன் தானாக இசைவான் என்று அவர்கள் இருவரும் எதிர்பார்க்கவில்லை.

பராந்தகன் அவர்கள் இருவரையும் அழைத்துக் கொண்டு கோட்டையின் உள் பகுதிக்குச் சென்றான். இறங்க இறங்க எல்லையே இல்லாமல் சென்று கொண்டிருந்த பாதாளப் பாதை கலங்கமாலவரையரையே கலங்க வைத்து விட்டது. பிறகு வளைந்து வளைந்து செல்லும் பாம்புப் பாதை வந்தது. அந்தப் பாதையில் நடந்து அவர்கள் இருவருக்கும் தலை சுற்ற ஆரம்பித்து விட்டது.

''கலங்கமாலவரையரே! முன்பு ஒரு சமயம் தஞ்சை அமைச்சர் புலிப்பள்ளி கொண்டார் இங்கு வந்திருந்தார். அவருக்கும் இதேமாதிரி கோட்டையைக் காட்டிக்கொண்டு வந்தேன். அவருக்குப் பாதாளப் பாதையில் இறங்கி வரும் போதே கால்கள் நடுங்க ஆரம்பித்து விட்டன. பாவம், மிகவும் சிரமப் பட்டுப்போய்விட்டார். எப்படியாவது வெளியே போனால் போதும். கோட்டையைப் பார்த்த வரையில் திருப்தி' என்றாகி விட்டது அவருக்கு. ஆனால் அவர், பாவம்! கௌரவத்தை விட்டுக்கொடுக்கச் சிறிதும் அவருக்கு விருப்பமில்லை. மனசை விட்டு எதையும்சொல்ல முடியாமல் தவித்துப் போய் விட்டார்!'' என்றான் பராந்தகன்.

அவன் இப்படிக் கூறியது சிம்மவர்மனுக்கு ஏதோ போலிருந்தது.

''நண்பரே! நான் அப்படிக் களைத்துப் போய் விடவில்லை. இதற்கு முன்பு இந்தக் கோட்டைக்கு வந்ததில்லையாகையால், பாதையின் வளைவுகளும், நெளிவுகளும், திருப்பங்களும் சிறிது குழப்பமாயிருக்கின்றன. அவ்வளவுதான்!'' என்று கொஞ்சம் சூடாகவே மறுமொழி கூறினான்.

பராந்தகன், ''நான் தங்களைக் குறைவாகவே கூறவில்லை. புலிப்பள்ளிகொண்டாரின் நிலையைக் கூறினேன்...... இனி மிகவும் ஜாக்கிரதையாக வரவேண்டும். அந்தகாரப் பாதையில் போகப் போகிறோம். உங்களுக்கு அலுப்பாயிருந்தால் சற்று இங்கேயே இருந்து இளைப்பாறி விட்டுப் போகலாம்'' என்றான்.

கலங்கமாலரையர், ''...... இல்லை, இல்லை. எல்லாவற்றையும் பார்த்து விட்டுப் பிறகு இளைப்பாறிக் கொள்ளலாம்!'' என்றார்.

பிறகு மூவரும் கோட்டைப் பாதையில் தொடர்ந்து சென்றனர்.

கலங்கமாலரையர் பாதையின் மர்மங்களையும் தந்திரங்களையும் தெரிந்து கொள்ளும் நோக்கத்துடன் மிகவும் உன்னிப்பாய்க் கவனித்துக் கொண்டே போனார்.

சிம்மவர்மனும் மிகவும் கவனமாக எல்லாவற்றையும் பார்த்துக் கொண்டே போனான்.



அந்தகாரப் பாதையில் செல்ல ஆரம்பித்ததும் பராந்தகன் ஒரு விதமான கீச்சுக் குரலில் கத்தினான். உடனே ஒரு வீரன் சுளுந்து கொளுத்திக் கொண்டு வந்து அவன் கையில் கொடுத்தான். அந்தச் சுளுந்தைக் கையில் வாங்கிக் கொண்டு பராந்தகன் முன்னால் நடந்துசென்றான். அவனைத் தொடர்ந்து கலங்கமாலரையரும் சிம்மவர்மனும் போனார்கள்.

அந்தகாரப் பாதையில் மையிருட்டு சூழ்ந்திருந்தபடியினால், கலங்கமாலரையரும் சிம்மவர்மனும் தடுமாறியவண்ணம் சென்றனர். பராந்தகன் கையில் இருந்த சுளுந்தின் ஒளி அந்தப் பேரிருட் பாதையில் 'மினுக் மினுக்'கென்று பிரகாசித்தது. திடீர் என்று படிக்கட்டுகள் கீழே இறங்குவதும், திடீர் என்று மேல் நோக்கிச் செல்லுவதுமாக அந்தப் பாதை ஒரே மர்மமாகச் சென்றது.

வெகு நேரம் கழித்துப் பாதையில் எங்கிருந்தோ சிறிது ஒளி பரவத் தொடங்கியது. ஆகவே சுளுந்துக்கு அவசியம் இருக்கவில்லை. ஒரு வீரன் வந்து பராந்தகனிடமிருந்து சுளுந்தை வாங்கிக் கொண்டு மறைந்தான்.

கலங்கமாலரையருக்கும் சிம்மவர்மனுக்கும் இப்பொழுதுதான் மூச்சு தாராளமாக வந்தது; மனசுக்குள் இருந்த திகிலும் கொஞ்சம் தணிந்தது. திடீரென்று வெய்யில் உறைத்தது. இப்பொழுது சூரியன் நடுவானத்தை அடைந்திருந்தான்.

''நண்பர்களே! நாம் பகல் உணவை முடித்துக் கொண்டு மீண்டும் கோட்டையைப் பார்க்கலாம். வாருங்கள்!'' என்று கூறிப் பராந்தகன் அவர்கள் இருவரையும் அங்கேயிருந்த ஒரு அழகிய மாளிகைக்குள்ளே அழைத்துச்சென்றான்.

மாளிகையின் கூடம் மிகவும் பிரமாதமாக அலங்கரிக்கப்பட்டிருந்தது. திவ்வியபோஜனம் பரிமாறப்பட்டுத் தயாராயிருந்தது. அரண்மனைப் பரிசாரகர்கள் மிகவும் பணிவுடன் காத்துக்கொண்டிருந்தனர். கலங்கமாலரையரும் சிம்மவர்மனும் கை, கால், முகம் கழுவிக் கொண்டு உணவு பரிமாறப்பட்டிருந்த இடத்துக்கு வந்தனர்.

வெகுதூரம் நடந்து வந்த அலுப்பும் களைப்பும் மேலிட்டிருந்தபடியினால் விருந்தினர்கள் இருவரும் ஆவலோடு சாப்பிட்டனர். பராந்தகனும் அவர்களோடு சேர்ந்து அமர்ந்து சாப்பிட்டான்.

''உங்கள் தகப்பனார் பூதிவிக்கிரமகேசரி பெரிதும் பாராட்டுக்கு உரியவர் என்பதில் ஐயமில்லை. பகைவர்களை மனத்தில் எண்ணிக்கொண்டே இந்த மர்மக் கோட்டையைக் கட்டியிருக்கிறார்'' என்றார் கலங்கமாலரையர்.

''என் தகப்பனார் பகைமையை மனத்திலும் எண்ணியவர் அல்ல; யார் மீதும் வீணாகப் பகைமை பாராட்டியவரும் அல்ல. அவர் நண்பருக்கு நண்பர்; பகைவருக்கு நிச்சயம் பகைவர்தான்.

''சிறுகாப்பின் பேரிடத்ததாகி உறுபகை
ஊக்கம் அழிப்பது அரண்''

என்ற வான்புகழ் வள்ளுவரின் வாக்குப்படி, பகைவர்களின் ஊக்கமும் உற்சாகமும் குலையும் வண்ணம் கோட்டைக்கு அரண் அமைத்திருக்கிறார்'' என்றான் பராந்தகன்.

எந்த விதத்திலாவது அவனது நட்பைப் பெற விரும்பிய சிம்மவர்மன், ''பராந்தகரே! தாங்கள் கூறியது மிகவும் சரி. நண்பர்களை உத்தேசித்து, சில காரியங்களைச் செய்வதுபோலவே, பகைவர்களை உத்தேசித்தும் நல்ல பாதுகாப்பான அரண் அமைத்துக் கொள்ள வேண்டியது அவசியம்தான்!'' என்றான்.

சாப்பிட்டு முடிந்ததும் சிறிது நேரம் சென்று இளைப்பாறி விட்டு மூவரும் புறப்பட்டனர்.

மிகவும் சாதுர்யத்தோடு தந்திரமாக அமைக்கப்பட்டிருந்த பெரிய பெரிய சிறைச்சாலைகளை யெல்லாம் பார்த்துக் கொண்டே சென்று விசாலமான மண்டபத்தை அடைந்தனர். அங்கே சுவரை யொட்டியமூலையில் குமிழிபோன்றஆணிகள் இரண்டு அமைக்கப்பட்டிருந்தன. அவைகளைக் கண்ட கலங்கமாலவரையர் கவனம் முழுவதும் அவைகளின் மீதே தங்கி விட்டது. சிம்மவர்மனும் அவற்றைக் கவனிக்கத் தவறவில்லை.

மெதுவாகக் கலங்கமாலவரையர் அவற்றின் அருகே சென்று பார்த்தார். சிம்மவர்மனும் அவரைப் பின்தொடர்ந்து சென்றான்.

அந்த ஆணிகளில் ஏதோ மர்மம் அடங்கியிருக்க வேண்டுமென்று அவர்கள் நினைத்தனர்.

''பராந்தகரே, இந்தக் குமிழி என்னத்துக்காக அமைக்கப் பட்டிருக்கிறது?'' என்று கேட்டான் சிம்மவர்மன்.

''அந்தக் குமிழி......கீழே செல்லும் வழிக்காகத்தான். அதில் ஒன்றும் விசேஷம் இல்லை......'' என்று கூறிவிட்டுப் பராந்தகன் எதையோ மறைப்பவன் போலச் சற்றுத் தயங்கி, நடக்கலானான்.

கலங்கமாலவரையரும் சிம்மவர்மனும் பராந்தகன் கூற்றில் ஏதோ மர்மம் இருப்பதாக நினைத்தனர்; ஒருவரையொருவர் ஊடுருவி விடுவது போல் பார்த்துக் கொண்டனர்.

மறுகணம் குமிழியை நெருங்கினர் இருவரும். சிம்மவர்மன் மிகவும் பலத்துடன் குமிழியைப் பற்றித் திருகினான்.

பராந்தகன் சட்டென்று அவர்கள் பக்கம் திரும்பிப் பார்த்துவிட்டு, ''நண்பர்களே! அது மிகவும் அபாயமானது. அதைத் தொடாதீர்கள். நாம் போக வேண்டிய வழி இதோ கீழே போகிறது. வாருங்கள்!'' என்று கூறினான்.

அவன் பேச்சைக் கேட்க, கலங்கமாலவரையரும் சிம்மவர்மனும் அங்கே இல்லை. மறுகணம் அவர்கள் நின்று கொண்டிருந்த தரை நழுவிக் கீழே 'விர்' ரென்று போகத் தொடங்கியது.

கலங்கமாலவரையரும் சிம்மவர்மனும் கலங்கிப் போய்விட்டனர். எத்தனையோ முயன்று பார்த்தும் அந்தப் பாதாளப் பிரயாணத்தை அவர்களால் நிறுத்த முடியவில்லை. வரவர அது மிகவும் வேகமாகக் கீழே போய்க் கொண்டேயிருந்தது.

''நண்பர்களே! நான் சொன்னதைக் கேட்கவில்லை. உங்களைப்பாதாளக் கிடங்கிலிருந்து மீட்டுக் கொண்டுவரும் சூத்திரம் இங்கே இல்லையே!'' என்று பராந்தகன் கூறியது அவர்கள் இருவர் செவிகளிலும் மிகவும் இலேசாக விழுந்தது.

வெகுநேரம் கழித்து நண்பர்கள் இருவரும் சென்றுகொண்டிருந்த பிரயாணம் சட்டென்று தடைப்பட்டது. நாலுபுறமும் கருங்கல்லினால் சுவர்கள் எழுப்பப் பட்டிருந்த காராக் கிருகத்துக்கு அவர்கள் பத்திரமாகப் போய்ச் சேர்ந்து விட்டனர். (தொடரும்)

## வடமொழிச் சொற்கடல்!

தமிழ்க் கீர்த்தனைகளை இயற்றித் தமிழிசைக்குப் பெருந் தொண்டு புரிந்த பாபநாசம் சிவன் அவர்கள் வடமொழிச் சொற்கடலில் மூழ்கித் திளைத்து அதிலுள்ள மாணிக்கங்களையும் ரத்தினங்களையும் எளிதில் புரிந்துகொள்ளும்படியாகத் தமிழில் வழங்கி யிருக்கிறார். வடமொழி இலக்கியத்திலுள்ள அழகான சொற்களுக்குத் தமிழ் அர்த்தத்துடன் ஓர் அகராதியாகத் தொகுத்திருக்கிறார்.

அவரது பெருமுயற்சியைப் பாராட்டிக் காஞ்சி காமகோடி ஸ்ரீ சங்கராச்சாரியார் அவர்கள் அளித்துள்ள ஆசி நல்லுரையைக் கீழே தருகிறோம்.

''பாபநாசம் சிவன் அவர்களால் தொகுக்கப் பெற்று நம்முன் சமர்ப்பிக்கப் பட்டுள்ள வடமொழிச் சொற்கடல் என்னும் புத்தகத்தைப் பார்வையிட்டோம். இப்புத்தகத்தில் வடமொழிச் சொற்களுக்குத் தமிழில் பொருள் விளக்கப்பட்டிருக்கிறது. வடமொழிப் பயிற்சி பெற விரும்பும் ஆஸ்திகர்களுக்கு இத்தொகுப்பு மிகவும் சகாயமா யிருக்கும்......'' என்று அருளி யிருக்கிறார்.

ஸ்ரீ சங்கராச்சாரியாரின் பாராட்டுதலைப் பெற்ற ஸ்ரீ பாபநாசம் சிவன் அவர்களுடைய நூலுக்கு வேறு என்ன அத்தாட்சி வேண்டும்?

வடமொழி பயிலும் ஆர்வமுள்ளவர்கள் இந்நூலை வாங்கிப் படித்து வடமொழி ஞானம் பெறலாம். வடமொழிச் சொற்கடல் இரண்டு பாகங்களாக, ஒவ்வொரு பாகத்திலும் நான்கு தரங்கங்களாக வெளிவந்துள்ளது. நூலின் ஒவ்வொரு தரங்கமும் விலை ரூ. 1-50. எட்டுத் தரங்கங்களுள்ள இரண்டு பாகங்கள் (முழுத் தொகுதி) விலை ரூ. 10-00. தபால் செலவு தனி.

கிடைக்குமிடம்: பாபநாசம் சிவன், 9, சீனிவாசன் தெரு, மந்தவெளி, மயிலாப்பூர், சென்னை-28.



தென்னாற்காடு ஜில்லா பகண்டையைச் சார்ந்த ஸ்ரீ ஓ. முத்துநார ரெட்டியார் அவர்களின் குமாரரும், அமெரிக்காவில் இயந்திர விவசாய முறைகளைப் பயின்று சமீபத்தில் தாயகம் திரும்பியவருமான சிரஞ்சீவி எம். அருணசலம் B. Sc. (Ag) அவர்களுக்கும், காயல்பாக்கம் ஸ்ரீ முத்து ராம ரெட்டியார் அவர்களின் புதல்வி சௌபாக்கியவதி கௌரிக்கும், பகண்டையில் நவம்பர் 4ந் தேதி வெகு விமரிசையாகத் திருமணம் நடந்தேறியது.

# தமிழ் கூறும் நல்லுலகம்

நாகபுரி பைன் ஆர்ட்ஸ் சொஸைட்டியின் ஆதரவில் பம்பாய் மாதுங்கா நாடகக் குழுவினர் மூன்று நாடகங்களை வெகு சிறப்பாக நடித்தனர். நாகபுரியில் இதுவே முதன் முதலாகத் தமிழர்களால் நடத்தப்படும் நாடக விழாவாகும். நாடகவிழா அக்டோபர் 11ந் தேதி அன்று 'ஹிதவாதா' ஆசிரியர் திரு ஏ.டி. மணி அவர்கள் தலைமையில் துவக்கப்பட்டது. மாதுங்கா நாடகக் குழுவினர் திரளாக வந்திருந்த ஜனங்களின் பாராட்டுதலுக்குப் பாத்திரமானார்கள். எல்லா நடிகர்களும் தங்கள் பாகங்களை வெகு நன்றாகத் திறம்பட நடித்தார்கள். கடைசி நாளன்று ஸ்ரீமதி கமலா மணி அவர்களால் வந்தனோபசாரம் கூறப்பட்டு நாடக விழா இனிதாக முடிவடைந்தது.

★

ஜம்ஷெட்பூரில், 'உத்கல் அஸோஸியேஷ'னில் (ஒரிஸ்ஸாக்காரர் சங்கம்) வசிக்கின்ற தென் இந்தியர்கள் தீபாவளியை ஒரு பொதுக் கூட்டத்துடனும், இசை நிகழ்ச்சியுடனும் கொண்டாடினார்கள். திரு எஸ். எஸ். துரைசாமியின் தலைமையில் நடைபெற்ற இவ்விழாவில் திரு 'வேணி' பேசினார். 'சிந்து நதிக்கரையில் தோணி மிசையே, சேர நன்னாட்டிளம் பெண்களுடனே சுந்தரத் தெலுங்கினில் பாட்டிசைத்து' என்ற பாரதியின் கனவு நனவாகிறது என்று மகிழ்ச்சியுடன் குறிப்பிட்டார் அவர். இனிய இசை விருந்து நிகழ்ச்சியும் நடந்தது. செயலாளர் நன்றி கூறக் கூட்டம் இனிது முடிந்தது.

★

ராமகிருஷ்ண மிஷன் மண்டபத்தில் 27-10-57 ஞாயிற்றுக்கிழமை மாலை மூன்று மணிக்கு அகில பர்மா தமிழர் சங்கத்தின் ஐந்தாவதாண்டு விழா திரு கணேசன் அவர்கள் நாதசுரம் வாசிக்க, காமராஜ் பள்ளி மாணவிகள் இந்திய, பர்மிய தேசிய கீதமும், குமாரி எஸ். எஸ். கஸ்தூரிபாய் தமிழ்மொழி வாழ்த்தும் பாட விழா ஆரம்பமாகியது.

வரவேற்புக் கமிட்டி தலைவரும், பர்மா நாடு ஆசிரியருமான திரு வி. எச். டேவிட் அவர்கள் தமது வரவேற்பு உரையில், "தாய்த் தமிழகத்தினின்று சுமார் ஓராயிரம் மைல்களுக்கு அப்பால் வாழும் நாம், பர்மாவைத் தாய்த் திருநாடாகவே அன்றும் இன்றும் கருதி வாழ்ந்து வருகிறோம். தமிழர் எங்கு சென்று வாழ்ந்தாலும் தமிழ் மொழி, கலை, கலாச்சாரம், பண்பாடு முதலியவற்றை மறப்பதில்லை. இத்துடன் நாம் குடியேறி வாழும் நாட்டின் பண்பாட்டுக்கும் மதிப்பளித்து உரிமையோடு அம்மொழியையும் பயின்று, போற்றி வளர்த்து வருகிறோம்" என்றார்.

அகில பர்மா இந்தியன் காங்கிரஸ் தலைவர் திரு என். ஆர். பர்ஜோர்ஜி அவர்கள் திறப்பு விழா உரை நிகழ்த்தினார்.

சிறப்புரை வழங்கியவர் மேன்மை தங்கிய இந்தியத் தூதுவர் திரு லால்ஜி மெஹ்ரோத்ரா அவர்கள். "இங்குள்ள இந்தியர்கள் அனைவரும் ஒன்றுபட்டு வாழவேண்டும். இந்தியர்கள் என்ற முறையிலே எல்லோருக்கும் பிரதிநிதித்துவம் உள்ள சங்கத்தில் ஒத்துழைப்பதும், இந்தியர்களுக்கென ஒரு பொது வர்த்தக சங்கமும், பொதுமத பரிபாலன சபையும், பொதுக் கல்விக் குழுவும் அமைத்து நடத்த வேண்டுமெனவும், கடல் கடந்த நாட்டில் வாழும் நாம் இந்தியர்கள் என்ற அடிப்படையிலே ஒன்றுபட்டு வாழ வேண்டுவது அவசிய மென்பதையும் வற்புறுத்தினார்.

சங்கத்தின் ஆண்டறிக்கை பொதுச் செயலாளர் திரு. எஸ். கே. நாராயண அய்யரால் வாசிக்கப்பட்டது.

ஐந்தாவதாண்டின் புதிய தலைவர் திரு எஸ். லட்சுமணன் அவர்கள் தமது தலைமை உரையில், "கவி பாரதியின் 'ஒன்று பட்டா உண்டு வாழ்வே நம்மில் ஒற்றுமை நீங்கில் அனைவர்க்கும் தாழ்வே' என்னும் வாக்குக் கொப்ப நாம் நெருங்கிப் பழகி ஒற்றுமையுடன் செயல் புரிவோமானால் நமது வாழ்வு சிறந்து மலர வழியுண்டு" என்று கூறினார்.

வரவேற்புக் கமிட்டிச் செயலாளர் திரு காந்தி அண்ணாமலை அவர்கள் அனைவருக்கும் நன்றி கூறி, வாழிய செந்தமிழ் பாட விழா இனிது நிறைவெய்தியது.

★

டில்லியில் பெரும்பாலும் தமிழர்கள் வாழும் கரோல்பாக்கில் பணியாற்றி வரும் ஸ்தாபனம் தென்னிந்திய கலைச் சங்கம். இச் சங்கத்தார் சென்ற இரண்டாண்டு காலமாகச் 'சங்கச் செய்தி' என்ற பத்திரிகையை மாதா மாதம் வெளியிட்டு இலவசமாக விநியோகித்து வருகிறார்கள். திருப்பாவை - திருவெம்பாவை பாடல்களைப் பிரசுரித்தும் கம்பராமாயணக் கட்டுரைகள் வெளியிட்டும் சங்கச் செய்தி மூலம் சிறப்பாகப் பணியாற்றி வருகின்றனர்.

மார்கழி மாதத்தில் ஒவ்வொரு வீட்டிலும் திருப்பாவை - திருவெம்பாவை பாடல்கள் பாடப்பட வேண்டும் என்ற நோக்கத்துடன் திருப்பாவையில் முதல் பத்துப் பாடல்களை இனிமையான ராகங்களில் அமைத்து, தெளிவான பதவுரையுடன் பாவைப் பாட்டு என்ற புத்தகத்தைப் பிரசுரித்து அதன் வெளியீட்டு விழாவையும் சில நாட்கள் முன்பு சிறப்பாகக் கொண்டாடினர்.

பரந்த நோக்கத்துடன் இப்பாடல்களை ஸ்வரப்படுத்திக் கொடுத்து உதவிய தில்லி, ஸ்ரீ சிவானந்த சங்கீத வித்யாலயத்தின் தலைவர் திரு வி. ராஜாமணி ஐயரையும், இப் பாடல்களுக்கு எளிய நடையில் குழந்தைகளும் புரிந்து கொள்ளும்படி உரை எழுதித் தீவிரமாக முயற்சி செய்து இப்புத்தகத்தை வெளிக் கொணர்ந்த திரு ரா. வைத்தியநாதனையும் பாராட்டி ஸ்ரீ சீனிவாசன் அவர்கள் பேசினார்.

## கலை கண்ட மலேயா (4)

# முதல் முகாம் முடிந்தது



டி. கே. சண்முகம் - புத்தனேரி சுப்பிரமணியம்

மே மாதம் இருபதாம் தேதி இரவு ரயிலில் சிங்கப்பூரை விட்டு, மலேயாவின் தலை நகரமான கோலாலம்பூருக்குப் புறப்படுவ தென்று முடிவு செய்யப்பட்டது.

"இவ்வளவு சீக்கிரமாகப் புறப்படுகிறீர் களே!" என்று நெருங்கிப் பழகிய நண்பர் ஒருவர் உருக்கமாகக் கேட்டார்.

"சீக்கிரமாகப் புறப்படுகிறோமா? முதல் முகாமிலேயே இருபத்தொன்பது நாட்கள் நிதானமாகத் தங்கிவிட்டோமே! விஜயத்திலே காணும் மூன்று மாதத் தவணையில் மூன்றில் ஒரு பகுதியை இங்கேயே கழித்து விட் டோமே!..போதாதா?" என்று நண்பருக்கு ஆறுதல் கூறினோம்.

ஆயினும் உண்மையில் எங்களுக்குக் கூட, நேற்று வந்து இன்று புறப்படுவது போன்ற துரித உணர்ச்சிதான் தோன்றியது. நாட்கள் எவ்வளவு வேகமாக உருண்டோடி விட்டன!

நெஞ்சிலே கவலையோடு இருப்பவர்களுக்கு ஒவ்வொரு நாளும் ஒரு யுகமாக நீளும்! கவலை யற்று உற்சாகமாக நண்பர்களின் அன்புச் சூழலிலே வாழ்பவர்களுக்கு ஒவ்வொருநாளும் ஒவ்வொரு நிமிஷமாக ஓடும்! இது அநுபவ உண்மை அல்லவா?

சென்ற ஒரு மாத காலமாகச் சிங்கப்பூரிலே நாங்கள் கண்டறிந்த புதுமைகளை மீண்டும் ஒரு முறை நினைவுக்குக் கொண்டு வந்தோம்! முன்கட்டுரைகளில் சொல்லப்படாத இன்னும் சில செய்திகள் எங்கள் இதயத்தில் தேங்கி நிற்கக் கண்டோம்.

எவ்வளவோ நாகரிகத்தில் சிறந்த நகர மானாலும் அங்கும் ஒரு காட்சியைக் கண்டு மனம் வேதனைப் படத்தான் செய்தோம். வாழ்க்கைக்குப் போதிய வசதியில்லாத குடிசை கள் நிறைந்த இடங்களும் விண்ணை இடிக்கும் பெரிய கட்டடங்களும் இருக்கத்தான் செய் கின்றன. ஏழை மக்கள் எல்லாரும் மேடை வீடுகட்டி வாழவேண்டும் என்று ஒரே அடி யாகச் சொல்லவில்லை. நல்ல காற்றோட்ட மான சுகாதாரச் சூழ்நிலையில் உள்ள இடங் களில் உழைப்பாளி மக்கள் எல்லாரும் உற் சாகத்துடன் இருக்கும் நாள் என்று வருமோ என்று ஏங்கத்தான் செய்தது இதயம். உலகில் இந்த நாள் என்று வருகிறதோ அன்றுதான் மனித குலத்துக்கு உண்மையில் விடுதலை நாள் என்று சொல்ல வேண்டும்.

சிங்கப்பூர் ஒரு தீவுதானா என்ற ஐயம் எழு வதற்கும் இடமிருக்கிறது. ஏனெனில் சிங்கப் பூரையும் மலேயாவின் தென்கோடியான ஜோகூர்பாருவையும் இணைத்துக் கொண்டு எழில் பரப்புகிறது ஒரு பெரிய பாலம். இந்தப் பாலத்தில் சாலையும் உள்ளது; இருப் புப் பாதையும் விளங்குகின்றது. வனப்பு மிகுந்த இந்த இணைப்புப் பாலம் ஜோகூர் ஜலசந்தியில் கட்டப்பட்டுள்ளது. ஜப்பானியர் படையெடுப்புக் காலத்தில் இந்தப் பாலத்தின் ஜோகூர்முனை தகர்க்கப்பட்டதாகவும், பின் னர் புதுப்பிக்கப்பட்டு விட்டதாகவும் கேள் விப்பட்டு வியந்தே போனோம்.

சிங்கப்பூர் விமானத் துறையைப் பற்றிக் கொஞ்சமாவது தெரிந்து கொள்ள வேண் டாமா? இந்த விமானத் துறை அகில உலகத் தொடர்பு கொண்டது. நகரின் மத்தியப் பகுதியிலிருந்து ஏழரை மைல் தொலைவில் உள்ள பாயலேபார் என்ற இடத்தில் புதிய விமான நிலையம் கட்டப்பட்டுள்ளது. இந்த நிலையம் 1955 ஆகஸ்டு இருபதாம் தேதி முதல் இயங்கி வருகிறது. இந்த மாபெரும் நிலையத்தைக் கட்டுவதற்கு மூன்றே முக்கால் கோடி வெள்ளிகள் செலவாகி யுள்ளன.

அறுநூறு ஏக்கரா நிலப்பரப்பில் இந்த நிலையம் அமைந்துள்ளது.

"சிங்கப்பூரில் தமிழ் வளர்ச்சி எப்படி இருக்கிறது?" என்று கேட்டால் "வளர்ச்சியில் சிறிதும் தளர்ச்சியில்லை!" என்று துணிந்து சொல்வோம். . நகரில் வளரும் தமிழ்ச் சிறுவர்-சிறுமிகளுக்காக இருபத்தைந்து தமிழ்ப் பள்ளிகள் உள்ளன. இவற்றுக்கு அரசாங்க உதவி நிதியும் கிடைத்து வருகின்றது. ஆயினும் தமிழ் கற்பிக்கும் உயர்நிலைப் பள்ளிகள் இல்லாத குறை இன்னும் நீக்கப்படவில்லை. இந்தக் குறை தீர்வதற்குரிய அறிகுறிகள் தென்படுகின்றன என்று மட்டும் சொல்ல முடியும். சிங்கையில் உள்ள மலேயாப் பல்கலைக் கழகத்தில் இந்திய மொழிப் பகுதி ஒன்று இயங்கி வருகின்றது. இதன் தலைவராக விளங்குபவர் தமிழ்ப் பேராசிரியர் திரு மு. இராசாக்கண்ணு அவர்கள். ஆழ்ந்தகன்ற நுண்ணறிவும், அஞ்சாத தமிழ் நெஞ்சமும் கொண்ட வீரர் இவர். பல்கலைக் கழகத்தில் தமிழ் மொழிக்கு உரிய, உயரிய இடம் தேடித் தருவதற்காகவே தமது ஆராய்ச்சித் திறன் முழுவதையும் பயன்படுத்தி வருகிறார். பிற மொழிப் பேராசிரியர்களுக் கெல்லாம் நமது தமிழ்மொழியின் தனிப் பெருமையை இனிப்பாக எடுத்துக் காட்டித் தமிழ் உணர்ச்சி ஊட்டி வருகிறார். பல்கலைக்கழகத்தில் தமிழ் வளர்ச்சிக்காக மலைநாட்டில் வாழும் தமிழ்ச் செல்வர்கள் பலர் தாராள உள்ளத்துடன் நன்கொடை தர முன்வந்துள்ளனர். திரு கோ. சாரங்கபாணியின் முயற்சியால் இயங்கும் "தமிழ் எங்கள் உயிர்" நிதியும், தமிழ் வளர்ச்சிக்காகவே திரட்டப்படுகிறது.

கடல் கடந்து வெகு தொலைவில் வாழும் தமிழர்கள் நமது நாடக வசனங்களைச் சரிவரப் புரிந்து கொண்டு ரசிப்பார்களோ என்ற ஐயம் எங்களுக்கு எழுந்தது உண்டு. ஆனால் இந்த ஐயத்துக்கு இடமே இல்லை என்பதைத் தமது ஒப்பற்ற ரசனையின் மூலம் எடுத்துக் காட்டினர் சிங்கை மக்கள். அந்த அளவுக்குத் தமிழ்ப் பேச்சு வழக்கின் இயல்பைக் கடல் கடந்த தமிழர்களும் உணர்வதற்குக் காரணம் என்ன என்பதையும் புரிந்து கொண்டோம். தமிழகத்திலிருந்து வரும் தமிழ்ப் பத்திரிகைகளும், தமிழ்த் திரைப் படங்களும் மக்களின் தமிழறிவை வளர்த்து வருகின்றன. இவற்றோடு சிங்கையிலே வெளியாகும் தமிழ் ஏடுகளும் அங்கு வாழும் தமிழ் மக்களின் தமிழ் உணர்ச்சியைப் பேணி வளர்த்து வருகின்றன.

'தமிழ் முரசு', 'மலேயா நண்பன்' ஆகிய இரு தமிழ்த் தினசரிகள் சிங்கப்பூரிலிருந்து வெளியாகின்றன. 'தமிழ் நேசன்' என்ற தினப் பதிப்பு கோலாலம்பூரிலிருந்தும், 'சேவிகா' என்ற தினசரி பினாங்கிலிருந்தும் வெளியிடப் படுகின்றன. இவையனைத்தும் பெரும்பாலும் தமிழ்நாட்டுச் செய்திகளுக்கே முக்கியத்துவம் தருகின்றன. இந்த முறையிலிருந்து தமிழகத்தைப் பற்றி அறிந்து கொள்வதில் மலைநாட்டு மக்களுக்கு எத்துணை ஆர்வம் உள்ளதென்று தெரிய வருகிறது.

இந்தத் தினசரிகளில் தமிழ் முரசு மிக அதிக விநியோகமுள்ளது; அதற்கு அடுத்தபடியாக விநியோகமுள்ள ஏடு 'தமிழ் நேசன்.' இரண்டு பத்திரிகைகளும் ஞாயிறு மலரை மிகச் சிறப்பான முறையில் தரம் உயர்ந்த கட்டுரைகளுடன் வெளியிடுகின்றன.

ஆசிரியர் திரு கோ. சாரங்கபாணியின் பொறுப்பில் இயங்கும் 'தமிழ் முரசு' அலுவலகத்தில் முன்னாள் 'பொன்னி' ஆசிரியர் திரு முருகு. சுப்பிரமணியன், திரு வை. திருநாவுக்கரசு, திரு செல்வ கணபதி, திரு அ. முருகையன் ஆகியோர் உதவியாசிரியர்களாகப் பணியாற்றி வருகின்றனர்.

திரு மலையாண்டி செட்டியாரை ஆசிரியராகக் கொண்டு வெளிவரும் 'தமிழ் நேசன்' பத்திரிகையின் பொறுப்பாசிரியராகப் பணியாற்றுபவர் தமிழகத்தின் சிறந்த சிறுகதை எழுத்தாளர்களில் ஒருவரான திரு கு. அழகிரிசாமி அவர்கள்.

இந்தியன் மூவி நியூஸ், கலைமலர், மனோகரன், திரையொளி ஆகிய நான்கு கலை ஏடுகள் சிங்கப்பூரிலிருந்து வெளியாகின்றன. இவையனைத்தும் பெரும்பாலும் திரைப்படச் செய்திகளையே ஏந்தி வருகின்றன. இந்தக் கலை ஏடுகள் வெளியாவதிலிருந்தே சிங்கையிலும் மலேயாவிலும் தமிழ்த் திரைப் படங்களுக்கு எத்தகைய வரவேற்பு இருக்கிறது என்பதை உணர்ந்து கொள்ளலாம். ஈப்போவிலிருந்து வெளியாகும் 'மலைமகள்' பொது விஷயங்கள் அடங்கிய மாதப் பத்திரிகை.

இவையெல்லாம் தவிர தமிழ் நாட்டிலிருந்தும், இலங்கையிலிருந்தும் வெளியாகும் முக்கியமான பத்திரிகைகள் அனைத்தும் சிங்கையிலும் மலேயாவிலும் கிடைக்கின்றன.

சிங்கப்பூரில் உயர்ந்த மாளிகைகளும் உண்டு.





சிங்கப்பூரையும் மலேயாவையும் ஒன்றாக இணைத்து வைக்கும் ஜோகூர் — பாலம்

---

சிங்கப்பூரில் விளங்கும் பல்வேறு சங்கங்களும் தமிழ் வளர்ச்சிக்குத் துணையாக நிற்கின்றன. இவற்றின் சார்பில் அடிக்கடி இலக்கியச் சொற்பொழிவுகளும், விவாதங்களும் நடைபெற்று வருகின்றன. இத்துறையில் சிராங்கூன் வீதியில் உள்ள தமிழர் சீர்திருத்த சங்கம் சிறந்த பணியாற்றி வருவதைக் குறிப்பிட வேண்டும். மாதந்தோறும் ஏதாவது ஒரு வாழ்க்கைப் பிரச்னையைப் பற்றிய விவாதம் இந்தச் சங்கத்தில் நடைபெறும்.

வரதட்சணை, கலப்பு மணம், குடும்பக் கட்டுப்பாடு முதலிய பல பிரச்னைகள் சங்கத்தில் விவாதிக்கப் படுகின்றன. வெறும் விவாதத்தோடு நின்று விடாமல் அரங்கிலே கூடியுள்ள மக்களின் தீர்ப்பை வாக்குகளின் மூலம் கணக்கிடுகின்றனர். ஒவ்வொரு பிரச்னைக்கும் சாதகமாகவும் பாதகமாகவும் கிடைத்த வாக்குகளின் விவரம் மறுநாள் பத்திரிகையில் கொட்டை எழுத்துக்களில் வெளியாகின்றன. இத்தகைய கருத்து நிறைந்த விவாதங்களின் மூலம் சிங்கை மக்களில் சிலர் தமது பேச்சு வன்மையை வளர்த்துக் கொள்கின்றனர்.

தமிழும் தமிழ் உணர்ச்சியும் சிங்கப்பூரில் நன்றாக ஓங்கி வளர்கின்றன என்பதற்கு இவையெல்லாம் சான்றுகள்.

சிங்கையில் வாழும் சீனர்களின் பழக்க வழக்கங்களில் ஒன்று எங்கள் கவனத்தை மிகவும் கவர்ந்தது.

"கூற்றின்கைப் பட்டவுடன்—வினைவுக்
கூட்டங்கள் கூட்டுவரோ?
நேற்றைய நண்பர்கள் சுற்றமெலாம்
—நம்மை
நீடு நினைப்பாரோ?"

என்ற கவலை சீனர்களுக்கு மிகுதியாக உண்டு. தமது மரணத்தின்போது உற்றாரும் உறவினரும் ஏராளமாகக் கூடி மரியாதை செலுத்த வேண்டும் என்ற ஆசை அவர்களுக்கு அதிகம்.

தமது ஆசை நிறைவேறுவதற்காக அவர்கள் பற்பல சங்கங்களுக்குச் சந்தா செலுத்தி வருவார்கள் அந்தச் சங்கங்களை "இறுதி யாத்திரை உதவிச் சங்கங்கள்" என்று கூடத் துணிந்து சொல்லி விடலாம்.

செல்வாக்குள்ள சீனர் ஒருவர் ஏறக்குறைய இருபத்தைந்து சங்கங்களுக்குச் சந்தா செலுத்துவாராம்! அவர் இறந்த செய்தி கிடைத்ததும் அத்தனை சங்கத்தார்களும் அவருடைய இல்லத்துக்கு வந்து கூடி விடுவார்கள். சும்மா வரமாட்டார்கள்! தத்தம் சங்கப் பெயர் தீட்டப்பட்ட ஆலவட்டங்களுடன் ஆர்ப்பாட்டமாக வருவார்கள்.

இதில் இன்னொரு புதுமையும் கண்டோம். வாரத்தில் ஞாயிறு தவிர வேறு எந்தக் கிழமையில் ஒருவர் இறந்தாலும் அடுத்த ஞாயிற்றுக் கிழமை வரையிலுங்கூடச் சடலத்தைப் பேணி வைத்திருக்கும் வழக்கம் சீனர்களிடம் உண்டு. சங்கங்களைச் சார்ந்தோர் அனைவரும் ஊர்வலத்தில் கலந்து கொள்ள வேண்டும் என்பதற்காகவே இத்தகைய ஏற்பாடு செய்யப் படுகிறதாக அறிந்தோம்.

இறந்தவரின் இறுதி யாத்திரை குறைந்தது அரை மைல் நீள ஊர்வலமாக இருக்கும். இப்படிப் பல பெரிய இறுதி ஊர்வலங்களையும் நாங்கள் காண நேர்ந்தது.

ஊர்வலத்துக்கு முன்னால் அலங்கரிக்கப் பட்ட பெரிய லாரிகளில் பாண்டு வாத்தியங்கள் முழங்கும். இந்த வாத்தியங்களில் அதிகமாக நம் செவிகளைத் துளைப்பது பெரிய சிங்கிகளைத் தட்டும் ஒலிதான். ஒவ்வொரு சிங்கியும் சுமார் ஒரு அடி விட்டம் உள்ளது. எனவே 'ஜலார், ஜலார்' ஓசை காதுகளில் 'பளார் பளார்' என்று கேட்கும்.

வாத்திய லாரிகளுக்குப் பின்னால் இறந்தவரின் உருவப் படம் அழகான லாரியில் கொண்டு செல்லப்படும். அதற்குப் பின்னால் சங்கங்களின் ஆலவட்டக் கொடிகளும் அங்கத்தினர்களின் அணிவகுப்பும் செல்லும். சவப் பெட்டி வைக்கப்பட்டுள்ள பிரதான வண்டிக்கு முன்னும் பின்னும் உற்றார் உறவினர்கள் வரிசையாகச் செல்வார்கள். இறந்தவருக்கு மிக நெருங்கிய உறவினரையும் வாரிசு நிலையில் உள்ளவர்களையும் எளிதில் அடையாளம் கண்டு கொள்ளலாம். அவர்கள் துக்கத்தின் அறிகுறியாக மெல்லிய சாக்குகளை உடையாகத் தரித்திருப்பார்கள்.

எல்லாவற்றுக்கும் கடைசியாக எண்ணற்ற கார்கள் ஊர்வலத்தைப் பின் தொடரும். அந்தக் கார்களில் நடக்க இயலாதவர்களும், கிழப் பருவம் எய்தியவர்களும் நோயாளிகளும் அமர்ந்து வருவார்கள்.

இப்படியாகச் சீனரின் இறுதி ஊர்வலமானது மிகக் கோலாகலமாகக் காட்சியளிக்கும். பிறந்த நாளைவிட இறந்த நாளைச் சிறந்த நாளாகக்கொண்டாடும் சீனர்களின் வாழ்க்கைத் தத்துவத்தை அறிந்து வியந்தோம். பொதுநலச் சங்கங்களிடம் நம்பிக்கையும், அபிமானமும் வளரவும், அவை நல்ல முறையில் பணியாற்றவும் சீனர்கள் வகுத்துள்ள முறை மிகவும் பயன்படும் அல்லவா?

புறப்படும் நாளன்று எங்கள் குழுவினர் ஒவ்வொருவரும் வெகு சுறுசுறுப்பாக இருந்தனர்; மூட்டை முடிச்சுகளைக் கட்டுவதற்குக்கூட நேரமில்லாமல் தவித்தனர். சிங்கப்பூரில் புதிதாகக் கிடைத்த நண்பர்களுடன் அளவளாவி விடைபெறுவதற்குப் போதுமான அவகாசம் இல்லை. அந்த நண்பர்களோ விடாப்பிடியாக எங்கள் இல்லத்துக்கு வந்து ஆசைதீரப் பேசித் தீர்வ




ஜெர்மனியில் தயாரிக்கப்பட்டது
எங்கும் கிடைக்கும்

சைக்கின் விடத் தெரிவதோடு உடனே உத்யோகம் ஏற்றுக் கொள்ளத் தயாராக உள்ள வீணை, பிடில், வாய்ப்பாட்டு உபாத்தியாயர்கள் — கானபூஷணம், சங்கீதபூஷணம், வித்வான் அல்லது சமமானபட்டதாரிகளோ அல்லது 5 வருடமாவது குருகுல சிக்ஷை பெற்றவர்களோ நற்சாட்சிப் பத்திர நகல்களுடன் "ஷண்முகானந்த சங்கீத சபை, புது டில்லி-1" என்ற பெயரில் ரூ. 2 போஸ்டல் ஆர்டருடன் 5-12-1957க்கு முன் மனுச்செய்து கொள்ளலாம். சிக்ஷை சொல்லிக் கொடுத்த அனுபவம் மூன்று வருடங்களாவது இருத்தல் வேண்டும்.

(1) சம்பளம் ரூ. 100-5. 120-8-200. அலவன்ஸ் ரூ. 70. (2) குறைந்தது மூன்று வருஷம் வேலை செய்ய நிபந்தனைப் பத்திரம் கொடுக்க வேண்டும். (3) தேர்ந்தெடுக்கப்பட்ட மனுதாரர்கள் சொந்த செலவில் சென்னைக்கு பேட்டிக்கு வரவேண்டும். (4) பிராவிடெண்டு பண்டு வசதிகள் உண்டு.

பொதுக்காரியதரிசி

**ஸ்ரீ ஷண்முகானந்த சங்கீத சபை**

(ரிஜிஸ்டர்டு)

ரீடிங் ரோடு, புதுடில்லி-1

நீடித்த உழைப்புக்கு

**நடராஜா** பிராண்ட்

கண்ணாடிச் சாமான்கள்



கண்ணாடிச்
சாமான்களில் உறுதிக்கும்
உயர்வுக்கும் முதன்மையாகவுள்ளது
"நடராஜா" பிராண்ட்

**ஆத்தூர் கிளாஸ் இண்டஸ்ட்ரீஸ்**
**பிரைவேட் லிமிடெட்**

ஆத்தூர் - சேலம் ஜில்லா





போலீஸ் மந்திரி திரு எம். பக்தவத்சலம் அவர்களின் அறுபத்தோராவது பிறந்தநாள் வைபவத்தை மாதர் காங்கிரஸ், கன்யா குருகுலம், சர்க்கா பிரசார சபா, சென்னை காதி அபிவிருத்தி சங்கம் முதலிய பல சங்கங்கள் சேர்ந்து சென்னையில் நவம்பர் மூன்றாந் தேதி வெகு விமரிசையாகக் கொண்டாடின. சென்னை சபாநாயகர் திரு யு. கிருஷ்ணாராவ் அவர்கள் இவ்விழாவுக்குத் தலைமைவகித்துச் சிறப்பித்தார். முதன் மந்திரி திரு காமராஜ் அவர்களும், கல்வி மந்திரி திரு சி. சுப்பிரமணியம் அவர்களும் இந்த வைபவத்துக்கு விஜயம் செய்திருந்தனர். படத்தில் திரு யு. கிருஷ்ணாராவ் அவர்கள் பேசுவதையும், திரு எம். பக்தவத்சலம், திருமதி பக்தவத்சலம் ஆகியவர்கள் அமர்ந்திருப்பதையும் காணலாம்.

தென்று குழுமியிருந்தனர். அவர்களை விலகி இருக்கச் செய்து பெட்டி — படுக்கைகளைச் சரிப்படுத்தி எடுத்து வைப்பதற்குள் பெரும்பாடாகி விட்டது!

இரவு எட்டு மணிக்கெல்லாம் எல்லோரும் சிங்கப்பூர் கப்பல் வீதியில் உள்ள புகைவண்டி நிலையத்தை அடைந்தோம். அழகான அந்த நிலையத்தின் முன் மண்டபத்தில் மலேயாவின் வாழ்க்கை முறை பற்றி வர்ண ஓடுகளில் சித்திரிக்கப்பட்டுள்ள அற்புதமான காட்சிகளைக் கண்டு மகிழ்ந்தோம்.

எங்கள் வருகையை எதிர்நோக்கி ஏராளமான கலையன்பர்கள் புகைவண்டி நிலையத்தில் காத்திருந்தனர். சிங்கை ரயிலடியில் அவ்வளவு பெரிய கூட்டம் கூடியிருந்தது என்றும் காணாத புதுமை என்றும் நண்பர்கள் கூறினர்.

சிங்கையிலிருந்து மலேயாவுக்குள் செல்லும் ரயில்களில் அவ்வளவாகக் கூட்டம் இருப்பதில்லையாம். ஏனெனில் சிங்கையிலும் மலேயாவிலும் அற்புதமான சாலைகள் அமைக்கப்பட்டுள்ளன. அலுங்காமல் குலுங்காமல் காரிலே பிரயாணம் செய்யும் வசதியிருக்கிறது. சிங்கப்பூரிலிருந்து கோலாலம்பூருக்குத் துரித மோட்டார் வண்டிகள் சென்று வருகின்றன. இவ்வண்டிகள் தூரப் பிரயாணத்துக்கு மிக ஏற்றதாக அமைந்துள்ளன. நமது நாடகக் காட்சிக்குரிய சாதனங்கள்கூட லாரிகளிலேதான் ஏற்றி யனுப்பப்பட்டன. எனினும் மலைநாட்டில் ரயிலில் பிரயாணம் செய்யும் அனுபவமும் பெற வேண்டும் என்பதற்காகவே நாங்கள் எல்லாரும் ரயில் பயணத்தை மேற்கொண்டோம்.

நம் நாட்டில் 'சின்ன ரயில்' என்று சொல்கிறோமே அதுபோல் 'மீட்டர் கேஜ்' வண்டிகளே சிங்கப்பூர்—மலேயாவில் ஓடுகின்றன. எஞ்சினுக்கு அடுத்த பெட்டியில் ஏறினால் கடைசிப் பெட்டி வரை செல்லக் கூடிய முறையில் ரயில் பெட்டிகள் இணைக்கப்பட்டுள்ளன. நமது நாட்டில்கூட வெகு காலத்துக்கு முன் இத்தகைய ரயில் வண்டி இருந்ததாகக் கேள்விப்படுகிறோம் அல்லவா?

ரயில் வண்டியைப் பொறுத்தமட்டில் குறிப்பிடத்தக்க சிறப்பான அம்சம் எதுவும் இல்லை.

நாடக விழா அமைப்பாளரின் சார்பில் நண்பர் திரு அஜீஸ் நாங்கள் அத்தனை பேரும் தத்தம் பெட்டி படுக்கைகளுடன் பத்திரமாக ரயிலேறுவதற்கான ஏற்பாட்டைத் திறமையாக முடித்து வைத்தார்.

சரியாக எட்டரை மணிக்கு ரயில் புறப்பட்டது. நிலையத்தில் குழுமியிருந்த மக்கள் அனைவரும் மனம் கசிந்து கண்ணீர் மல்கி, வாழ்த்தொலி பெருக்கினர். சிலர் தேம்பித் தேம்பி அழுதனர்; 'அன்பால் ஊற்றெழும் கண்ணீர் அதனால்' நாங்களும் நனைந்தோம்.

நண்பர்களின் அன்பு முகங்கள் எல்லாம் கண்ணுக்கு எட்டாமல் அகலும் வரையில் கதவடியிலேயே காத்திருந்தோம். பின்னர், ரயில் கதவை அடைத்து விட்டுப் பெட்டிக்குள் வந்தபோது நாங்கள் கண்ட காட்சி எங்களைப் பிரமிக்க வைத்தது.

நண்பர்கள் திரு அஜீஸ், திரு ஏ. பி. ராமன், திரு சந்திரன் ஆகிய மூவரும் ஒரு மூலையில் கண்ணீர் மல்க நின்று கொண்டிருந்தனர்.

"நீங்கள் எப்படி உள்ளே ஏறினீர்கள்? எங்களுடனேயே வரப் போகிறீர்களா?" என்று வியப்புடன் கேட்டோம்.

"உங்களை விட்டுப் பிரிய மனமில்லை! ஜொகூர்பாரு வரையிலாவது உங்களுடன் பிரயாணம் செய்து விட்டுத் திரும்பலாம் என்றே புறப்பட்டு விட்டோம்!" என்று அவர்கள் பதில் அளித்தபோது எங்கள் உடம்பு புல்லரித்தது! "அன்புக்கும் உண்டோ அடைக்கும் தாழ்?" (தொடரும்)






# ஆ - ஹா ! ஆர்ஜென்டா

## – பிரகாசமான கண்ணைக் கூசாத வெளிச்சம்!




நிலவு ஒளிபோல் குளுமையானதும் ஆனால் பகல்போல் பிரகாசமானதுமான ஒளி வீசும் உள் வெண்மை ஆர்ஜென்டா பல்புகள், வீடுகளுக்கும், வேலை ஸ்தலங்களுக்கும் சிறந்தவை.

இன்றே ஒரு ஆர்ஜென்டா பல்பை வாங்கி, அதன் வெளிச்சம் கண்ணுக்கு எவ்வளவு குளுமையாயும் தேக ஆரோக்கியத்திற்கு எவ்வளவு சிறந்ததாயும் இருக்கிறது என்று பாருங்கள்.

பிலிப்ஸின் தயாரிப்புகளை
சரியான விலைக்கே வாங்குங்கள்

உங்களுடைய வியாபாரியிடம் பிலிப்ஸின்
விலைப்பட்டியலைக் காண்பிக்கச் சொல்லுங்கள்




பிலிப்ஸ் இந்தியா பிரைவேட் லிமிடெட்

# படித்துப் பாருங்கள்

## SPORT AND PASTIME ANNUAL 1957

விளையாட்டுக் கலையில் இந்தியாவின் சிறப்புக்குக் கலங்கரை விளக்கமாகத் திகழும் திரு பல்பீர் சிங்கை அட்டைச் சித்திரமாகக் கொண்டு 'ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம்' 1957 வருஷாந்திர மலர் மணம் வீசித் திகழ்கிறது.

இந்திய நாட்டின் பெருமையை இன்று உலகில் ஒளிவீசச் செய்வது ஹாக்கி விளையாட்டு. இவ் விளையாட்டில் நம் இந்தியா நிகரற்று எவரெஸ்ட் சிகரம் போல் சிறந்து விளங்குகிறது. 'இந்த அரிய விளையாட்டுக் கலையிலே தேர்ந்த திரு பல்பீர்சிங்தான் இந்த வருஷத்துத் தலைசிறந்த விளையாட்டுக்காரர்' என்று 'ஸ்போர்ட் அண்டு பாஸ்டைம்' ஆங்கில வாரப் பத்திரிகையை வாசிக்கும் வாசகர்கள் முடிவு செய்திருக்கிறார்கள். திரு பல்பீர்சிங்குக்கு இந்திய ஜனாதிபதியும் 'பத்ம பூஷண்' விருதுப்பட்டம் வழங்கிக் கௌரவித்திருக்கிறார்.

விளையாட்டுக் கலைக்கென்றே ஹிந்து ஸ்தாபனத்தார் 'ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம்' என்னும் அழகிய ஆங்கிலப் பத்திரிகையை வெளியிட்டு வருகிறார்கள். இந்த ஆங்கில வாரப் பத்திரிகையின் ஆண்டு மலரிலே விளையாட்டுக் கலை நிபுணர்களைப் பற்றி மிகவும் ரஸமான கட்டுரைகள் வெளியாகியிருக்கின்றன. விளையாட்டு மன்னர் திரு பல்பீர் சிங் தமது ஒலிம்பிக் விளையாட்டு நினைவுகளைச் சுவைபடத் தந்திருக்கிறார். கிரிக்கெட் விளையாட்டு நிபுணரான திரு எம். கே. மந்திரியைப் பற்றித் திரு எஸ். கே. குருநாதன் ஒரு கட்டுரை வழங்கியிருக்கிறார்; இதோடு தலைசிறந்த விளையாட்டுக்காரர்களின் வர்ணப் படங்களும், சினிமா நடிக நடிகைகளின் வர்ணச் சித்திரங்களும் இந்த மலருக்கு அணிகலன்களாக விளங்குகின்றன.

பிரசுரம்: ஸ்போர்ட் அண்ட் பாஸ்டைம், மவுண்ட் ரோட், சென்னை-2, விலை ரூ. 1-25.

## நவநீத் (ஹிந்தி டைஜஸ்ட் தீபாவளி மலர்)

சிந்தனையும் கருத்தையும் கவரக் கூடிய வகையிலே வெளியாகும் இந்தியப் பத்திரிகைகளிலே, 'நவநீத்' என்னும் ஹிந்தி மாத சஞ்சிகை தனி இடம் பெற்றுள்ளது. மேல் நாட்டிலிருந்து வெளியாகும் பல 'டைஜஸ்டு'களுக்கும் நிகராக விளங்கும் 'நவநீத்' நல்ல விஷயங்களைக் கடைந்தெடுத்து வெண்ணெயாகத் தரும் பணியைச் செய்து வருகிறது.

தர்மம், தத்துவம், இதிகாசம், புராணம், சரித்திரம், சமூகம் ஆகிய ஒவ்வொரு துறையிலும் மகாமேதைகள் எழுதும் கட்டுரைகள் இதில் இடம் பெறுகின்றன. 'சென்றிடுவீர் எட்டுத் திக்கும் கலைச் செல்வங்கள் யாவும் கொணர்ந்திங்கு சேர்ப்பீர்' என்னும் பாரதியின் அமுத வாக்கைக் கடைப்பிடித்து, நம் நாட்டு உயர் இலக்கியம் மட்டும் அல்ல, மேல்நாட்டுச் சிறந்த இலக்கியங்களையும் சிரிய முறையில் திரட்டித் தரும் அரும்பெரும் சாதனையைச் செய்து வருகிறது;

நம் நாட்டின் கலைச் சிற்பங்களும் வெகு அழகிய முறையில் இடம் பெறுகின்றன.

இதன் தீபாவளி மலர் நமது மதிப்புக்குரிய தலைவர் ராஜாஜியின் 'மகாலக்ஷ்மி' என்னும் அற்புதமான கட்டுரையை முதன்மையாகத் தாங்கி வெளிவந்துள்ளது. உப ஜனாதிபதி ஸ்ரீ ராதாகிருஷ்ணன், மௌலானா அபுல்கலாம் ஆஜாத், ஸ்ரீ சி. பி. ராமஸ்வாமி அய்யர் ஆகிய பெரியார்களது சிந்தனைக்கு விருந்தளிக்கும் கட்டுரைகளும் வெளியாகியுள்ளன.

இந்தப் பத்திரிகையின் ஒவ்வொரு இதழுமே தீபாவளி மலராகத் திகழுகிறது. ஒவ்வொரு குடும்பத்தினரும் பார்த்துப் படித்துப் பயனுற வேண்டிய அரிய பொக்கிஷமாகும்.

ஆசிரியர்: ஸ்ரீ ரதன்லால் ஜோஷி. 'நவநீத்' காரியாலயம் 341, தார்தேவ், பம்பாய்—7; ஆண்டு சந்தா: விசேஷப் பதிப்பு ரூ. 15. சாதாரணப் பதிப்பு ரூ. 10. தனிப்பிரதி விலை முறையே ரூ. 1-50, ரூ. 1.

## ஸ்ரீதேவி மஹாத்மியம்

ஸ்ரீ பராசக்தியின் அருளாலேயே அகில உலகங்களும் இயங்குகின்றன. பராசக்தி சொரூபமான சண்டிகா ஸ்ரீதேவியின் சக்தியை விளக்கும் தேவி மகாத்மியம் பதினெண் புராணங்களில் ஒன்றாகிய மார்க்கண்டேய புராணத்தைச் சேர்ந்ததாகும். இம் மகாத்மியத்துக்கு மந்திர வடிவமாக அமைந்துள்ள தனிப் பெருமை உண்டு. ஈடு இணையில்லாத பலம் வாய்ந்த பயங்கர அசுரர்களுடன் கோர யுத்தம் செய்யும் தேவியின் சக்தியை விளக்கி இந்த அருமையான நூலில் எழுநூறு சுலோகங்கள் அடங்கியுள்ளன. ஒவ்வொரு சுலோகமும் ஸ்ரீ தேவியின் அருளைப் பெறுவதற்கான ஒவ்வொரு மந்திரமாக விளங்குகிறது. தேவி மகாத்மிய சம்பந்தமான பல பாஷ்யங்களையும் நன்கு பரிசீலனை செய்து ஸ்ரீ வே. ராமச்சந்திர சர்மா இந்த எழுநூறு சுலோகங்களுக்கும் பதம் பதமாகத் தமிழில் அர்த்தம் எழுதியிருப்பதுடன் தமிழில் பொழிப்புரையும் சில விசேஷக் கருத்துரைகளும் கொடுத்துள்ளார்.

ஸ்ரீ தேவி ராஜராஜேசுவரியின் படமும், நவாக்ஷரி யந்திர படமும் ஸ்ரீ விநாயகரின் அழகிய படமும் இதில் விசேஷ இடம் பெற்றுள்ளன. ஸ்ரீதேவியின் அருள் பெற விரும்பும் பக்த சிகாமணிகளுக்கு சம்ஸ்கிருத சுலோகங்களுடனும் தமிழ் அர்த்தத்துடனும் வெளியாகியுள்ள இந்த நூல் ஒரு பெரும் வரப்பிரசாதம் என்பதில் ஐயமில்லை. 650 பக்கங்கள் கொண்ட இந்த மகாத்மியத்தை வெளியிட்டுள்ள இதன் ஆசிரியரின் பக்தியும் உழைப்பும் ஊக்கமும் மிகவும் பாராட்டுதற்குரியவை. இதில் நியாஸம், ஆவாஹனம், அர்க்கனம், ஹிருதயம் முதலிய மற்றும் தேவி மகாத்மிய சம்பந்தமான சகல விசேஷ அம்சங்களும் தமிழ் அர்த்தத்துடன் அடங்கியிருக்கின்றன.

கிடைக்குமிடம்: பி. எஸ். அண்ட் எப். மார்ட், 113, அரண்மனைக்காரத் தெரு, ஜி. டி. சென்னை-1. விலை ரூ. 6-50.



# பிரிவுத் துயர்

ராமு வீட்டுக்கு வந்து சேரும்போது மணி ஒன்றாகி விட்டது. பசியும், சோர்வும் இருந்த போதும் எப்படியோ ஒரு வீட்டைப் பிடித்து விட்ட சந்தோஷத்தில் அந்த வருத்தம் கூடத் தெரியவில்லை.

ராமுவுக்கு மணமாகி நான்கு மாதங்கள் ஆகின்றன. அப்போது அவன் படிப்பை முடித்துக் கொண்டு வேலை தேடிக் கொண்டிருந்தான். மணமான கொஞ்ச நாட்களுக்குள் வேலை கிடைத்தது. எல்லோரும் "ராஜி வீட்டுக்கு வந்தவேளை நல்லவேளை; அவள் அதிர்ஷ்டத்தில்தான் வேலை கிடைத்தது" என்று சொல்லிக் கொண்டார்கள். சென்னையிலேயே அவன் மாமனார் வீடும் இருந்தபடியால் அங்கேயே இருந்துகொண்டு காரியாலயத்துக்குப் போய் வந்து கொண்டிருந்தான்.

மற்றச் சௌகரியங்கள் எல்லாம் இருந்தாலும் சுதந்திரமாக இருக்க முடியவில்லையே என்ற குறை இருவருக்குமே இருந்தது. கடற்கரைக்கோ, சினிமாவுக்கோ போகும்போது, அங்கே வரும் இளம் தம்பதிகளைப் பார்க்கும் போது அவர்களைப்போல் தனி வாழ்க்கை தொடங்க இருவருக்குமே ஆசை ஏற்படும். மாமனார் வீட்டில் அவருக்குப் பாரமாக இருப்பதற்கும் எப்படியோ இருந்தது.

அதனால் ஒரு மாதமாக வீடு தேடி அலைந்து கொண்டிருந்தான். சுமாரான வாடகையில் வசதிகளுக்குக் குறைவில்லாத இடம் கிடைப்பது அரிதாக இருந்தது. கடைசியில் இன்று அவன் எப்படியோ ஒரு வீட்டைத் தேடிப் பிடித்து விட்டான்.

வீடு நல்ல காற்றோட்டமாக இருந்தது. அதுவும் மாடிப் பகுதியாதலால் ஜன்னல் கதவைத் திறந்ததும், காற்றில் புடவை சலசலத்தது.

குளிக்கும் அறை மாடியிலேயே இருந்தது. காற்றோட்டமான முன் வராந்தா. வீட்டுக்கு முன்னால் திறந்த வெளி. அதில் ஏழெட்டு சிறுவர்கள் பந்தும் மட்டையும் வைத்துக் கொண்டு 'கிரிக்கெட்' விளையாடிக் கொண்டிருந்தார்கள் அதை ஒட்டி அடர்த்தியாக வளர்ந்திருந்த மரங்களுக்குப் பின்னால் மின்வண்டி 'கடக் கடக்' என்று போகும் சத்தம் கேட்டது.

படி இறங்கிக் கீழே போகும்போது ஒரு நாய் "ளொள்! ளொள்!" என்று மேலே பாய்ந்து கொண்டு வந்தது. ராஜி பயந்து போய்ப் பின்னால் இரண்டு அடி நகர்ந்தாள். கீழே விழப்போன அவளை ராமு தாங்கிக் கொண்டான். "த்லா! த்லா" என்று கூப்பிட்டுப் பார்த்தான். நாய் அடங்கவில்லை.

"டேய் டைகர்! வா இப்படி!" என்று வீட்டுக்காரர் கூப்பிட்டதும் தான் அது வாலை ஆட்டிக் கொண்டு உள்ளே போயிற்று.

வீட்டுக்காரரிடம் விடைபெற்றுக் கொண்டு வெளியே வரும் சமயத்தில் ஒரு குழந்தை ஓடிவந்து படியில் நின்றுகொண்டு ராஜியையே வியப்புடன் பார்த்தது.

"இது யார்?" என்று அவன் கேட்டான்.

"வீட்டுக்காரர் பேரன் போல் இருக்கிறது. காலையிலேயே பார்த்தேன்."

"களையாய் அழகாய் இல்லை?"

"நீதான் இங்கேயே வந்துவிடப் போகிறாயே? அப்புறம் அவன் உன்னிடம்தானே வந்து விளையாடப் போகிறான்!"

குழந்தை அவளைப் பார்த்துச் சிரித்தது. அவள் கையைத் தூக்கி ஆட்டினாள். குழந்தையும் பதிலுக்கு ஆட்டிக்கொண்டே சிரித்தது.

அவர்கள் வீட்டுக்குக் குடி வந்தபோதும் முதன் முதலில் வாசலில் நின்று கொண்டு அவர்களை வரவேற்றது அந்தக் குழந்தைதான்.

"உன் பெயர் என்ன?" என்று ராஜி கேட்டாள்.

"கண்ணன்" என்று கூறியது குழந்தை.

"நீ யாரு?" என்று கண்ணன் கேட்டான்.

"நான் மாமி!" என்றாள் ராஜி.

"இல்லே. மாடி வீட்டு மாமி!" என்று கண்ணன் சொன்னதும், ராஜிக்குச் சிரிப்பு வந்துவிட்டது. சிரித்தால் குழந்தை ஏதாவது நினைத்துக் கொண்டு வருத்தப்படப் போகிறதே என்று எண்ணி அவனைத் தூக்கிக் கொண்டு "சமர்த்து" என்றாள்.

மாடியில் சாமான்களை ஒழுங்குபடுத்திக் கொண்டிருக்கும்போது கண்ணன் வாசற்படியில் நின்று கொண்டு அவளையே கண் கொட்டாமல் பார்த்துக் கொண்டிருந்தான்.

''உள்ளே வா!'' என்று ராஜி கூப்பிட்டாள்.

''உன் அம்மா எங்கே?'' என்று கேட்டாள். குழந்தை பதிலே சொல்லவில்லை.

'' அப்பா ?''

அவன் தலையை மட்டும் ஆட்டினான். கண் இலேசாகக் கலங்கியது. ராஜிக்கு என்னவோ போல் ஆகிவிட்டது. சம்படத்தைத் திறந்து அவன் கையில் ஒரு கரண்டி திரட்டுப் பாலைக் கொடுத்துக் கொண்டே '' உனக்குத் தித்திப்பு என்றால் பிடிக்குமோ?'' என்று பேச்சை மாற்றினாள்.

அன்று இரவு ராமுவிடம் '' இந்தக் குழந்தைக்கு அப்பா அம்மா யாரும் இங்கே இல்லையா? அவர்களெல்லாம் எங்கே இருக்கிறார்கள்?'' என்று கேட்டாள்.

'' ஏன் நீ கேட்டாயா ?''

'' தெரியாத்தனமாகக் குழந்தையைக் கேட்டுவிட்டேன். அதற்குச் சொல்ல முடியாமல் கண் கலங்கிப் போய் விட்டது. என்ன நினைத்ததோ, பாவம்!''

'' என்னைக் கேட்டிருக்கலாமே; கண்ணனின் அம்மா, வீட்டுக்காரரின் பெண், இறந்து போய் இரண்டு வருஷங்கள் ஆயிற்றாம். குழந்தை இரண்டு வயதிலிருந்து இங்கேயே வளருகிறது. மாப்பிள்ளை எங்கேயோ மலேயாவில் இருக்கிறாராம். வீட்டுக்காரர்தான் சொன்னார்.''

'' ஐயோ பாவம்!'' என்றாள் ராஜி. அவள் முன்பின் பார்த்திராத கண்ணனின் தாயின் உருவம் அவள் மனத்தில் தோன்றியது போல் ஒரு பிரமை ஏற்பட்டது. சின்னஞ்சிறு குழந்தையையும் கணவனையும் விட்டுவிட்டு இளம் வயதில் காலமாகிவிட்ட அவளை நினைத்துப் பார்க்க எப்படியோ இருந்தது.

'' குழந்தைக்கு எதுவும் சொல்லத் தெரியவில்லை. யாரும் இல்லை என்று மட்டும் தெரிகிறது. பேச முடியாமல் கண்ணில் மட்டும் நீர் தளும்ப நிற்கிறது, பாவம்!'' என்று ராஜி பெருமூச்சு விட்டாள்.

மறுநாள் காலையில் அவள் கீழே போய், பால் வாங்கிக்கொண்டு வந்த போது தோள்பட்டையில் என்னவோ குறுகுறுத்தது. பால் கீழே கொட்டி விடாமல் அதை மாடத்தில் வைத்து விட்டு மேலே தட்டி விடுவதற்குள் உடல் சிலிர்த்துப் போய் விட்டது. அவள் மேலிருந்து கீழே தாவிக் குதித்து ஒரு அணில் குட்டி ஓடியது. கொஞ்ச தூரம் போய்ப் படியில் உட்கார்ந்து கொண்டு முன்னங் காலைத் தூக்கிக் கொண்டு அவளையே பார்த்தபடி நின்று விட்டுப் பிறகு வேகமாக ஓடி மறைந்து போயிற்று.

''என்னம்மா பயந்து போய்விட்டீர்களா?'' என்று வீட்டுக்காரரின் மனைவி கேட்டபோது அவளுக்குக் கொஞ்சம் வெட்கமாகக் கூடப் போய் விட்டது.

'' அந்த அணில்குட்டியின் தாய் இந்தத் தோட்டத்திலேயே குட்டி போட்டதும் இறந்து போய்விட்டது. நாங்கள் இந்தக் குட்டியை மட்டும் எடுத்து வளர்த்துக் கொண்டு வருகிறோம். ஒன்றும் செய்யாது. கண்ணனுக்கு அதனிடம் அலாதிப் பிரியம்'' என்று கூறினாள்.

'' அந்த அணில் குட்டியும் கண்ணன் மாதிரிதானோ?'' என்று ராஜி நினைத்துக் கொண்டாள்.

அணில் குட்டி கண்ணன்மேல் ஏறி விளையாடும். அதை முதுகில் விட்டுக் கொண்டு கண்ணன் '' மாமி!'' என்று கூப்பிட்டுக் கொண்டு வருவான். அது மட்டும் அவளுக்குப் பிடிக்காது. '' அதை முதலில் கீழே இறக்கி விட்டுவிட்டு வா!'' என்று சொல்லி விடுவாள். அது மேலே ஏறிக் கொள்ளும்போது உடலில் உண்டாகும் கூச்சத்தில் அவள் கையை உதறுவதைப் பார்த்துக் கண்ணன் கைகொட்டிச் சிரிப்பான். எவ்வளவோ கோபம் ஏற்பட்டாலும் அந்தச் சிரிப்பில் அவள் அதையெல்லாம் மறந்து போய் விடுவாள்.

சிறு வயதிலிருந்தே ராஜிக்குக் குழந்தைகளிடம் பிரியம் அதிகம். வீட்டில் உள்ள குழந்தைகளெல்லாம் அவளிடம்தான் சுவாதீனமாக எதையும் கேட்கும். ஊரிலிருந்து



அவன் சகோதரிகள் வரும்போது, வாசலில் நின்று கொண்டு, வண்டியிலிருந்து இறங்கும் அவர்கள் குழந்தைகளைத்தான் முதலில் வாரி எடுத்துக் கொள்வாள். அந்த ஆர்வமும் பாசமும் இன்னும் அவள் உள்ளத்தில் வற்றாத ஊற்றாகப் பொங்கிக் கொண்டிருந்தன. அந்த அன்பு வெள்ளத்தில் கண்ணன் அகப்பட்டுக் கொண்டு திக்குமுக்காடிப் போனான். குறைப் பட்டுப் போன அந்தக் குழந்தையின் வாழ்க்கையை நினைத்து அவள் உள்ளத்தில் தோன்றிய கருணையும், அடங்காத மனக் கலக்கமும், செயலில் அன்பாகவும் வாத்ஸல்யமாகவும் வெளிப்படும். அந்த அன்பு அணைப்பில் கண்ணன் ஒன்றிப் போவான். அவளை ''அம்மா'' என்றே கூப்பிட ஆரம்பித்தான்.

ராமு காரியாலயத்துக்குப் போனதும் கண்ணன் சாப்பிட்டு விட்டு மாடிக்கு வந்து விடுவான். அவனுடைய மூன்று சக்கரச் சைக்கிள் வண்டி மாடியிலேயே இருந்தது. அவளை அதில் உட்கார வைத்துத் தள்ளுவான். அவனாக மிதித்துக் கொண்டு போனாலும் அவள் தள்ளி விடுவதில் அவனுக்கு ஒரு தனி ஆனந்தம். அதுதான் அவனுடைய ரயில் வண்டி. மூலைக்கு மூலை இருந்த நாற்காலிகள்தான் ஸ்டேஷன்கள். கதவுக்குப் பக்கத்தில் இருந்த மேஜைதான் எழும்பூர் ஸ்டேஷன். அவனே ரயிலை ஓட்டுவான்; அவனே கொடியும் காட்டிக் கொள்வான்; ஊதலும் ஊதுவான். சில சமயங்களில் அவளிடம் கொடுத்து ஊதச் சொல்வான். அவளுக்குக் கொஞ்சம் வெட்கமாக இருக்கும். யாரும் இல்லையா என்று பார்த்துவிட்டு ஊதுவாள். நடுநடுவில் ரயில் நிற்கும். அவன் அவளிடம் ஏதாவது சாமான் வாங்குவான்; சில்லறை கொடுப்பான். இரண்டு பேர்கள் கையிலும் எதுவும் இருக்காது. குழந்தையின் மனம் புண்பட்டு விடக் கூடாது என்பதற்காக அவள் சிரிக்காமல் விளையாடுவாள்.

பொம்மையை வைத்துக் கொண்டு அவன் விளையாடுவான். ஆளுக்கு ஒரு நாற்காலியில் உட்கார்ந்து கொள்வார்கள். பந்தை விட்டெறிந்து பிடிப்பார்கள். அவன் பிடிக்கிற மாதிரியும் போட வேண்டும்; தூர இருந்தும் போட வேண்டும். சரியாகப் போடா விட்டால் அவன் கோபம் வந்து பந்தைத் தூக்கி வெளியே விட்டெறிந்து விடுவான். ''போக்கிரி! போ! கீழே போய்ப் பந்தை எடுத்துக் கொண்டு வா!'' என்று அவள் கடிந்து கொள்வாள். பிறகு ''குழந்தைக்குக் கால் வலிக்கும், பாவம்!'' என்று தானே படி இறங்கிப் போய் எடுத்துக்கொண்டு வருவாள்.

பிற்பகல் வேளைகளில் அவன் தூங்குவதற்குள் போதும் போதுமென்று ஆகிவிடும். ஒவ்வொரு இடமாகப் படுத்துக் கொள்வான். அவளை முதலில் தட்டச் சொல்வான். கதை சொல்லச் சொல்லித் தொந்தரவு பண்ணுவான். அவன் தலையை மடியில் வைத்துக் கொண்டு முதுகை வருடிக் கொண்டே ராஜி கதை சொல்லுவாள். கதை முடியும்போது முடிவைத் தெரிந்து கொள்ளாமலே அவன் தூங்கிப் போயிருப்பான். பாயை விரித்து அவனைப் படுக்கப்போட்டு விட்டு ராஜி வேலையைக் கவனிப்பதற்குப் போவாள்.

காப்பி போட்டுக் கொண்டிருக்கும்போதே அவன் விழித்துக் கொள்வான். கொஞ்ச நேரம் படுத்துக் கொண்டே அவளைக் கூப்பிட்டுக் கொண்டிருப்பான். பிறகு எழுந்து மலங்க மலங்க விழித்துக் கொண்டே வந்து அவள் கழுத்தைக் கட்டிக் கொள்வான்.

குழாயில் அவள் தண்ணீர் அடிக்கும்போது அவனுக்கும் அங்கேதான் வேலை. முழங்கை வரையில் வாளியில் தண்ணீருக்குள் கையை விட்டு அளைந்துகொண்டே இருப்பான். என்ன சொன்னாலும் கேட்க மாட்டான். நயமாகவும் பயமாகவும் சொல்லி ராஜி அவனைச் சிரமப்பட்டு உள்ளே அழைத்துக் கொண்டு போவாள்.

ராமுவின் சகோதரிக்குக் கலியாணம் நிச்சயமாயிற்று. ஊருக்குப் போவதற்காக அவன் இருபது நாட்கள் லீவு எடுத்துக் கொண்டான். கண்ணனை விட்டு விட்டு ஊருக்குப் போகும்போது ராஜிக்கு மனம் அவளையறியாமல் கலங்கியது. "ஊரிலிருந்து வருகிறபோது உனக்கு என்னடா வாங்கிக் கொண்டு வரவேணும்?" என்று கேட்டாள்.

அவள் அவனுக்கு விளையாட்டாக ஒரு வேடிக்கைப் பாட்டு சொல்லிக் கொடுத்த துண்டு. அதை அவன் அடிக்கடி பாடுவான்.

"நாலுசக்கர மோட்டார்
நான் ஏறும் மோட்டார்
பாம்பாம் மோட்டார்
பம்படிக்கும் மோட்டார்!"

என்று குதித்துக் கொண்டு அபிநயம் பிடித்துக் காட்டுவான். இப்போது அந்த ஞாபகத்தில் "வருகிறபோது ஒரு மோட்டார் வாங்கிக் கொண்டு வா. சீக்கிரம் வந்து விடு!" என்று சொல்லி அனுப்பினான்.

ஊரில் அவ்வளவு அமர்க்களத்திலும், கலியாண ஜும்முரத்திலும் ராஜிக்குக் கண்ணனின் நினைவு மறக்கவில்லை. சிறியதும் பெரியதுமாகக் குழந்தைகள், புதுச் சட்டை போட்டுக்கொண்டு, பக்ஷணமும் பழங்களுமாக ஏந்திக் கொண்டு கும்மாளம் அடிக்கும்போது கண்ணன் ஞாபகம் வரும். "ஒரு வேளை அவனையும் அழைத்துக் கொண்டு வந்திருக்கலாமோ?" என்றுகூட நினைப்பாள். சீக்கிரத்தில் ஊருக்குத் திரும்பிவிடப் போவதை நினைத்து மனம் தேறுவாள்.

ரயிலில் ஊருக்குத் திரும்பும்போது அவன் ஞாபகமாகவே இருந்தது. 'அவனைப் பார்த்ததும் என்ன சொல்வது? "இவ்வளவு நாளும் என்னை விட்டு விட்டு எங்கே போயிருந்தாய்? என்னை ஏன் கூப்பிட்டுக் கொண்டு போகவில்லை?" என்றெல்லாம் கேட்டால் என்ன பதில் சொல்வது?' என்று பலவாறாக யோசித்துக் கொண்டிருந்தாள். அந்த யோசனையில் தூக்கம்கூட வரவில்லை.

அவள் வீட்டு வாசலில் படியேறும்போது கண்ணன் வாசலில் இல்லை. "குழந்தைக்கு ஏதாவது உடம்போ என்னவோ?" என்று மனம் கலவரப்பட்டது. அவனுக்காக வாங்கி விருந்த சாவி கொடுக்கும் மோட்டாரைக் கையில் எடுத்துக் கொண்டு வீட்டுக்கார அம்மாளிடம் சென்று "நம் கண்ணன் எங்கே மாமி?" என்று ஆவலுடன் கேட்டாள்.

"அவன் இல்லையே அம்மா! ஊருக்குப் போய் விட்டானே!" என்று அந்த அம்மாள் பதில் சொன்னாள்.

"எந்த ஊருக்கு?"

"நீங்கள் ஊருக்குப் போய் நாலு நாட்களில் மலேயாவிலிருந்து அவன் தகப்பனார் வந்தார். ஒரு வாரம் இருந்தார். திரும்பிப் போகும் போது அவனைப் பிடிவாதமாக அழைத்துக் கொண்டு போய் விட்டார்."

"மறுபடியும் எப்போது வருவான்?"

"அவன் இனிமேல் இங்கே எதற்காக அம்மா வரப் போகிறான்?" என்றாள் வீட்டுக்கார அம்மாள். அவள் குரல் கம்மியிருந்தது.

அவளுக்கு அழுகையே வந்து விடும் போல் இருந்தது. வேகமாக மாடிக்குப் போய் விட்டாள். கதவைத் திறந்ததும் வீடு வெறிச்சென்று காட்சியளித்தது. கண்ணன் எடுத்துக் கொள்ளாமலே விட்டு விட்டுப் போய் விட்ட மூன்று சக்கர'சைக்கிள் வண்டி அவள் கண்ணை உறுத்தியது. அதன்மேல் அவன் வாங்கி வந்த மோட்டாரை வைத்தாள். குழந்தை தன்னை இன்னும் ஞாபகத்தில் வைத்துக் கொண்டு, நினைத்துக் கொண்டிருப்பானோ?



இரண்டு நாட்களுக்குப் பிறகு இரவு சாப்பிட்டுவிட்டு ராமு வராந்தாவில் நாற்காலியில் உட்கார்ந்து கொண்டிருந்தான். குளிர்ந்த தென்றல் காற்று வீசியது. ராஜி அவனுக்குப் பின்னால் வந்து நின்றதை அவன் கவனிக்கவில்லை.

"உங்களைத்தானே? வேறு ஒரு வீடு பாருங்கள்!" என்றாள் ராஜி.

அவன் திடுக்கிட்டுத் திரும்பிப் பார்த்தான். அவன் மனம் அவள் நிலையைப் புரிந்து கொள்ளவில்லை. அவள் முகத்தில் எத்தனையோ எண்ணங்களின் நிழல்கள்.

"எதற்காக ராஜி?"

"இந்த வீடு பிடிக்கவில்லை. குழாயில் சரியாகத் தண்ணீர் வருகிறதில்லை. அடித்து அடித்துக் கைவலி கண்டுபோகிறது."

"உம்!"

"சமையல் அறையில் புகைக் கூண்டு கூட இல்லை. 'ஸ்டவ்'வை ஏற்றினால் காற்றில் அணைந்து போகிறது."

"உம்."

"பாலுக்கும், கறிகாய்க்கும் கீழே இறங்கி ஏறிக் காலெல்லாம் கடுத்துப் போகிறது. இந்த லட்சணத்தில் நாயும் அணிலும் மேலே விழுமோ என்ற பயம் வேறே."

"அதனால்தான்... அதனா...ல்...,நா....ன் சொல்..கி..றே..ன். வேறு வீடு பாருங்கள்."

அவன் பதில் சொல்லவில்லை. அவள் கைப்பிடிச் சுவர் அருகில்போய் நின்றாள். ரேடியோவில் இசைத்த பாட்டு காற்றில் இலேசாக மிதந்து வந்தது.

"இன்பக் கதைகளெல்லாம்-உன்னைப்போல்
ஏடுகள் சொல்வதுண்டோ ?
அன்பு தருவதிலே — உனை நேர்
ஆகுமோர் தெய்வமுண்டோ ?"

அவள் கண்களில் நீர் துளித்தது. ராமு எழுந்து போய் அவள் அருகில் நின்றான். அவளை அணைத்தபடியே, "இன்னும் ஒரு காரணத்தை நீ சொல்லாமல் விட்டுவிட்டாய், ராஜி! அது எனக்குத் தெரியும்" என்றான்.

'என்ன?' என்று கேட்பதுபோல் ராஜி அவன் முகத்தைப் பார்த்தாள். ஆனால் அவள் கண்களில் திரையிட்டிருந்த பனி, அவனுருவத்தைக்காட்டவில்லை. நீர்த்திரையிலே குழந்தை கண்ணனின் உருவம் தெரிந்தது.

"இந்தவீட்டில் இத்தனை குறைகளும் இப்போது புதிதாக ஏற்படவில்லை. நாம் இங்கு வரும்போதே இவையெல்லாம் இருந்தன. ஆனால் அப்போது கண்ணன் இருந்தான். அதனால் அந்தக் குறைகளும் குணங்களாகப் பரிமளித்துக் கொண்டிருந்தன. இப்போது கண்ணன் நம்மை விட்டு விட்டுப் போய் விட்டான். ஒவ்வொரு இடமும் ஒவ்வொரு பொருளும் அவனை ஞாபகப்படுத்துகின்றன; அவனுடன் நீ விளையாடி மகிழ்ந்த நாட்களை ஞாபகப்படுத்துகின்றன. அதனால்தான் இந்த வீடு இப்போது உனக்குப் பிடிக்காமல் போய் விட்டது. கவலைப்படாதே, ராஜி! கண்ணனுக்கு உரிமையோடு அன்பு செலுத்துவதற்கு ஒரு தகப்பனார் கிடைத்து விட்டார். நீயும் நானும் அவனிடம் அன்பும் பாசமும் கொள்வதற்கு நமக்கு என்ன உரிமை? நம்முடைய பரிவும் நேசமும் எவ்வளவு நாட்களுக்கு சாகவதம்? குழந்தைக்கு எப்படியோ நல்ல வாழ்வு ஏற்பட்டு விட்டது. உனக்கும் ஒரு கண்ணன் பிறப்பான். அவன் சொல்லும் மழலையிலே உன் துன்பங்கள் தீர்ந்து போகும். அவன் சிரிப்பில் இந்தப் பிரிவினால் ஏற்பட்ட துயரம் மறைந்து போகும். மனம் தேறி விடுவாய். ஆனால் இப்போது உன் திருப்திக்காக வேண்டுமானால் வேறு வீடு பார்த்துக் குடி போகலாம்" என்று சொன்னான்.

கீழே இருண்டிருந்த மாட்டுக் கொட்டகையில் கட்டியிருந்த பசு "மா!" என்று சத்தும் சத்தம் கேட்டது.

# குறைந்த காலத்தில்
## உடம்பைத் தேற்றுவதெப்படி

உடம்பைத் தேற்றுவதற்கு முதல் தேவை, சுலபமாக ஜீரணிக்கக் கூடியதும், புஷ்டியான வலுவூட்டும் ஆகாரமேயாகும். 'ஒவல்டின்' அம்மாதிரியானதோரு ஆகாரம். இதன் ருசிமிக்க மணம் அயர்ந்துபோன பசியைத் தூண்டுகிறது; இதன் ஒருமித்த போஷாக்கு நரம்புகளையும், தசைகளையும் மீண்டும் புதுப்பிக்கிறது.

'ஒவல்டின்' மிகச் சிறந்த இயற்கை ஆகாராதிகள் மற்றும் புதுப்பிக்கப் பெற்ற வைடமின் "பி" டு "டி" இவைகளினால் தயாரிக்கப்பெற்றது. இதன வைடமின் பொருள்கள் அதி முக்கியமானதென ஒப்புக்கொள்ளப் பெற்றுள்ளது.

எங்குமுள்ள டாக்டர்களும் நர்ஸுகளும் விரைவில் உடம்பு தேற 'ஒவல்டின்'னை சிபார்சு செய்கிறனர். குறிப்பாக, நோயாளி இரவு படுக்குமுன் ஒரு கப் சாப்பிட்டு படுப்பது நிம்மதியான புத்துணர்ச் வளிக்கும் ஆக்கத்திற்கு ஏதுவாகிறது.

# ஒவல்டின்

பிரதியொரு டின்னும்
ஆரோக்கியமயமானது



விநியோகஸ்தர்கள்:
கிரஹாம்ஸ் டிரேடிங் கோ. (இந்தியா)
பிரைவேட் லிட்.

IV. 495

# 'அனாஸின்'

## மிகச்சிறந்தது, அதில் நான்கு மருந்துகள் சேர்ந்துள்ளன

1. க்வினாயின் சல்பேட் 2. காப்பின்
3. பினாஸிடின் 4. ஆஸிடில்ஸாலிஸிலிக் ஆஸிட்

வலிகளுக்கு நிவாரணமளிப்பதில் புகழ் பெற்ற 'அனாஸின்' விஞ்ஞான முறையில் சேர்க்கப்பட்ட நான்கு மருந்துகளின் கலப்பாகும். இவைகள் நரம்புகளின் கேந்திர ஸ்தானங்களில் கூட்டாக வேலை செய்து, தலைவலி, ஜலதோஷம் ஜுரம், பல்வலி, மற்றும் தசைவலிகளுக்குத் துரிதமாயும் அபாயமின்றியும் நிச்சயமாயும் நிவாரணம் அளிக்கிறது. வலிகளுக்குத் துரித நிவாரணமளிப்பதில் அனாஸினுக்கு இணையொன்றில்லை ... அனாஸினைப் போல் தீங்கு விளைவிக்காத வலிவேறொன்றில்லை. ஆகவே ஞாபகமிருக்கட்டும் 'அனாஸின்' ஒரு டாக்டரின் குறிப்புக்கு ஒப்பாகும். அது ஹிருதயத்திற்குத் தீங்கு விளைவிக்கவோ அல்லது வயிற்றுக் கோளாறுகள் உண்டு பண்ணவோ செய்யாது. 'அனாஸின்' லக்ஷக்கணக்கான மக்களுக்கு நிவாரணம் அளிக்கிறது. 'அனாஸின்' விலை ஒவ்வொருவர் சக்திக்கும் ஏற்றது. ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைஸா மட்டுமே.

நான்கு
மருந்துகளின்
சேர்க்கையான
'அனாஸின்'
வேண்டுமென்றே
கேளுங்கள்

WILL NOT UPSET THE STOMACH
DOES NOT HARM THE HEART
ANACIN
TABLETS

10 नये पैसे 1957
2 नये पैसे 1957

ஒரு பாக்கெட்டின் விலை 12 நயா பைஸா



# நெஞ்சக் கடல்

திருச்சி வாசுதேவன்

"அப்பா, நீ ஊருக்குப் போய் விட்டு எப்போ வருவே?"

தன்னுடைய நான்கு வயதுக் குழந்தை கேட்ட இந்தக் கேள்விக்கு, மந்திரமூர்த்தியால் சட்டென்று பதில் சொல்ல முடியவில்லை. "வ...ந்...து வந்துடுவேன், கமலு!" என்றான் தயங்கிக் கொண்டே.

தந்தை கூறிய சமாதானத்தை ஏற்க மறுப்பது போலத் தலையை ஆட்டிய வண்ணம், "ஊம்... போப்பா... பொய் சொல்லறே..." என்றது குழந்தை.

அவனுடைய துணிச்சலான மனம், கமலுவிடம் எதையாவது சொல்லி அவளைத் தப்பித்துக் கொள்வதற்குத் தூண்டியது.

"கவலைப்படாதே, நிஜம்மா..."

அதற்கு மேல் மந்திரமூர்த்தி பேசவில்லை. ஏதோவொன்று அவன் தொண்டையை அடைத்தது. தயாராக வைத்திருந்த கைப்பையை எடுத்துக் கொண்டு, "கண்ணல்ல... வணக்கம் சொல்லு!" என்றான். இதைக் கூறுவதற்குள் அவனுடைய குரலுக்குத்தான் எவ்வளவு வேதனை! சாமர்த்தியமாகச் சமாளிக்க முயன்றான்; பலிக்கவில்லை. மெல்ல அங்கிருந்து அடிபெயர்ந்தான்.

குழந்தை அவனை விட்டுவிடவில்லை. தனது பூங்கரங்களால் அவனுடைய கால்களைக் கட்டிக் கொண்டு, "நானும் கூட வருவேன்!" என்றது. அதன் பேச்சில் குழந்தைகளுக்கே இயல்பான மழலைத் தன்மையின் மணமே கமழ்ந்தது. ஆனால் அதில் செறிந்திருந்த வலிமையும், அந்தப் பூங்கரங்களின் பிணைப்பும் சில கணங்கள்வரையில் அவனைச் சிலையாக்கி விட்டன!

வலிய இரும்புச் சங்கிலியையும் சுக்கு நூறாக்கும் களிறு, பாகன் சில சமயங்களில் அதன் காலடியில் சாத்தும் சிறிய மூங்கிற் கோலுக்குக் கட்டுப்பட்டு அடிபெயராமல் நிற்கும். அதுபோலத்தான் மந்திரமூர்த்தியும் நின்றான். தன் அருமை மனைவி, ஆசை மக்கள், வாழ்க்கை யாவற்றையுமே துச்சமாகக் கருதித் துணிந்து விட்ட அவனால், அந்தப் பூங்கரங்கள் பூட்டிய தளையை அறுத்தெறிவதற்கு முடியவில்லை. தயங்கினான்; தவியாய்த் தவித்தான்!

வாழ்வையே வெறுத்துவிட்ட பின்னுமா, இந்த வாண்டுவின் வாஞ்சைக்குக் கட்டுப்படுகிறாய்? ரயிலுக்கு நேரமாகி விட்டது; விரைந்து நட!

'வாழ்வை வெறுக்கலாம்; ஆனால் இந்த வண்ண மலர் முகத்தை...'

'இன்னுமா இந்த நினைவு? இவ்வளவுதானா உன்னுடைய உறுதி? உம். ஒன்றும் சிந்திக்காமல் உடனே புறப்படு!'

இவ்வாறான நினைவு அலைகள், மந்திரமூர்த்தியின் நெஞ்சக் கடலில் கொந்தளித்தன. அவனைத் தடுத்து நிறுத்திய பாசம், அற்பத் துரும்பாக மாறியது. அடுத்த விநாடி அந்தச் செல்லக் கிளியின் சிறகுகளை வெடுக்கென்று விலக்கிக் கொண்டு வேகமாக அங்கிருந்து புறப்பட்டு விட்டான்.

திடீரென்று தரையில் வீழ்ந்த குழந்தை "அப்பா...போயிட்டா, அம்மா!" என்று கதறியது. அந்த ஓலம், தெருவில் சென்று கொண்டிருந்த மந்திரமூர்த்தியின் செவிகளில் விழுந்ததோ இல்லையோ!

★

மந்திரமூர்த்தி ஏறி வந்த தூத்துக்குடி எக்ஸ்பிரஸ், முந்திய இரவு திருச்சிச் சந்திப்புக்கு ஒருமணி நேரம் தாமதித்தே வந்தது. ஆகையால் எக்ஸ்பிரஸ் செங்கற்பட்டில் வந்து நிற்கையில் பொழுது விடிந்து விட்டது.

ஸ்டேஷனை விட்டு வெளியே வந்த மந்திரமூர்த்தி, அப்பொழுது சதுரங்கப்பட்டணத்துக்குப் புறப்படத் தயாராக இருந்த பஸ்ஸில் ஏறி அமர்ந்தான். தான் வருவதைக் குறித்து அங்கு வசிக்கும் தன் நண்பனான கோபாலுக்கு இரண்டு நாட்களுக்கு முன்பே கடிதம் எழுதியிருந்தான்.

ஆகையால் பஸ் நிலையத்தில் காத்திருந்த கோபால், பஸ்ஸிலிருந்து இறங்கிய மந்திரமூர்த்தியை மிகவும் ஆவலுடன் வரவேற்றுத் தன் வீட்டுக்கு அழைத்துச் சென்று உபசரித்தான். நண்பர்கள் இருவரும் நீண்ட காலத்துக்குப் பின் சந்தித்திருப்பதால் நெடுநேரம்

பேசினர். பிறகு மத்தியானம் சாப்பிட்டதும் சிறிது கண்ணயர்ந்தான் மந்திரமூர்த்தி. மாலை ஐந்து மணிக்கு, கோபால் எழுப்பின பிறகு தான் எழுந்தான்.

சிற்றுண்டியை முடித்துக் கொண்டு இருவரும் வெளியே புறப்பட்டனர்.

வெளியூர்க்காரர்கள் சதுரங்கப்பட்டணத்தில் பார்க்க வேண்டிய இடம், கடற்கரையிலுள்ள டச்சுக் கோட்டை ஒன்றுதான். முதன் முதலில் நம் நாட்டினுள் காலடி வைத்த வெளிநாட்டினர் வாழ்ந்து போன வரலாற்றைப் பறைசாற்றும் அந்தக் கோட்டையும் சாதாரணமானதுதான். வியக்கத்தக்க வேலைப்பாடுகள் ஒன்றும் அதில் இல்லை. இடிக்கப்பட்டு—இடிந்து—களை இழந்திருக்கும் அந்தக் கோட்டைக்குள் இருவரும் நுழைந்து, சுற்றிப் பார்த்து விட்டுப் பிறகு கடற்கரைக்குச்






சென்று பொழுது போக்காகப் பேசிக் கொண்டிருந்தனர்.

வள்ளல் கொடை வழங்குவது இயல்பு. ஆனால் வறிஞன் வழங்குவது அதிசயம். இதைத்தான் கடல் ஆயிரம் ஆயிரம் ஆண்டுகளாகச் செய்து வருகிறது. அணுவளவும் தன்னிடம் இல்லாத அமைதியை அங்கு வருபவர்களின் நெஞ்சங்களுக்கு எப்படித்தான் அதனால் அளிக்க முடிகிறதோ! அமைதி யென்பதையே அறியாதவர்களும் கடற்கரையில் அமர்ந்து விட்டால், கொஞ்சமாகிலும் அவர்கள் மனத்தில் அமைதி ஏற்படாமல் போகாது.

ஆனால் மந்திரமூர்த்தியோ அதிசயப் பிராணியாகிவிட்டான்! ஓயாமல் ஓலமிடும் அலைக் கூட்டங்களைப் போலவே அவன் நினைவுகள் அலை பாய்ந்து கொண்டிருந்தன.



'டச்சுக்காரர்கள் தங்கள் ஆதிக்கத்தை இந்த மண்ணில் நிலைநாட்டும் பேராசையுடன் எவ்வளவு சிரமப்பட்டு அந்தக் கோட்டையைக் கட்டியிருப்பார்கள்! கட்டி முடித்து மெல்ல மெல்லக் காணியாட்சி செலுத்த நினைக்கையில், மாற்றூர் படை வந்து தாக்கிய சமயம், இப்பொழுது தேசிய அரசாங்கத்தின் 'பாதுகாக்கப்பட்ட ஞாபகச் சின்னங்கள்' பட்டியலில் சேர்க்கப்பட்டு ஒரு காட்சியிடமாகக் கிடக்கும் என்று அப்பொழுது அவர்கள் சிறிதாவது எண்ணியிருப்பார்களா!'

அவன் நினைவு கொஞ்சம் ஓய்ந்தது. பக்கத்தில் மணலிலே படுத்திருந்த கோபாலைப் பார்த்தான். அவன் ஆனந்தமாகக் கண்களை மூடிக் கொண்டிருந்தான். அவனோடு அப்பொழுது உரையாடுவதற்கு ஏனோ மந்திரமூர்த்தி விரும்பவில்லை. கை விரல்களால் மணலைக் கிளறிக் கொண்டிருந்தான். பாழடைந்த டச்சுக் கோட்டையும் அந்த மாதிக் குட்டிச் சுவரும் அவனது நினைவுகளைக் கிளறிக் கொண்டிருந்தன; மீண்டும் அவனுடைய நெஞ்சம் கடலாயிற்று; நினைவுகள் அலையுருவம் பெற்றன!

''சாமி! சங்கு வேணுமா?''

மந்திரமூர்த்தி தலைநிமிர்ந்தான். அவன் சிந்தனைகள் உறைந்தன. நாலைந்து வயது மதிக்கத்தக்க பரதவக் குழந்தையொன்று எதிரே நின்று கொண்டிருந்தது.

அழகாக மலர வேண்டிய அந்த அரும்பு, வறுமைப் புழுவால் அரிக்கப்பட்டிருந்த அலங்கோலத்தைக் கொண்டு அவன் மனம் குமுறியது. அதைத் தவிர அவனால் வேறென்ன செய்ய முடியும்?

"வேண்டாம், அப்பா: போ!"

"பால் சங்கு, ஐயா!"

"பார்த்தியா, ஒரு தடவை சொன்னால் கேட்கணும்!"

அந்தப் பேச்சின் அரவத்தால் கண்விழித்தான் கோபாலன். அந்தக் குழந்தையிடமிருந்து சங்கை வாங்கிப் பார்த்தான். அழகிய அந்தப் பால் சங்கு அவனுக்குப் பிடித்திருந்தது. பேரம் பேசாமல் இரண்டணாவை எடுத்துக் கொடுத்தான். வாங்கிக் கொண்ட குழந்தை, குதூகலத்துடன் தன் குடிசையை நோக்கிக் குதித்தோடியது.

கோபாலைக் கேள்விக் குறியோடு நோக்கினான் மந்திரமூர்த்தி. அதைப் புரிந்துகொண்ட கோபால், "மனைவிக்கு இதுதான் மாதம். இன்னும் சில நாள் கழிந்தால்..." என்று கூறி வரும்பொழுதே மந்திரமூர்த்தி குறுக்கிட்டு, "கட்டாயம் வேண்டியதுதான்!" என்று வாக்கியத்தை முடித்தான். சிரித்துக் கொண்டே பிறகு அவர்கள் இருவரும் ஏதேதோ வேடிக்கையாகப் பேசிக்கொண்டே வீட்டுக்குப் புறப்பட்டனர்;

மறுநாள் கிருத்திகை. அன்று பிற்பகல் கோபால் தன் மனைவியுடன் திருப்போரூருக்குச் சென்று முருகப் பெருமானைத் தரிசித்து விட்டு விளக்கேற்றும் சமயத்தில் வீட்டுக்கு வந்தான். கோயிலுக்குப் போகும்பொழுது, மந்திரமூர்த்தியிடம் எங்கேனும் அவன் வெளியே செல்வதாயிருந்தால் வீட்டைப் பூட்டிச் சாவியைப் பக்கத்து வீட்டில் தந்து விட்டுப் போகச் சொல்லியிருந்தான்.

அவ்விதமே வீடு பூட்டியிருந்தது. பக்கத்து வீட்டிலிருந்து சாவியை வாங்கித் திறந்து, உள்ளே நுழைந்தனர், அவனும் அவனுடைய மனைவியும்.

அவனுடைய மேஜையில் கடிதமொன்று மடித்து வைக்கப்பட்டிருந்தது. அதன் மேல் 'நண்பன் கோபாலுக்கு-மந்திரமூர்த்தி' என்றிருக்கவே அதையெடுத்துப் படித்தான்.

அன்புள்ள நண்பன் கோபாலுக்கு,

வணக்கம். சிந்தை குளிரும் வண்ணம் திருப்போரூர் முருகனைத் தரிசித்துவிட்டு வந்திருக்கும் உன்னைத் திடுக்கிட வைக்கும் இந்தக் கடிதத்தை எழுதியதற்கு என்னை மன்னித்துவிடு!

வாழ்க்கைப் போரிலே போராடிப் போராடி என் உள்ளம் வலிமையற்றுப் போய் விட்டது. அதன்பிறகும் நான் உயிர்வாழ விரும்பவில்லை. கடந்த ஆறு மாதங்களாக என்னை வாட்டிய வேலையில்லாத் திண்டாட்டமும், இத்தனை நாளும் சிறுகச் சிறுகச் சேர்ந்து ஆயிரம் ரூபாய் வரை ஆகிவிட்ட கடன் சுமையும் தற்கொலை செய்துகொள்ளும் முடிவுக்கு என்னைக்கொண்டு வந்து விட்டன. அதைத் தவிர எனக்கு வேறு வழியில்லை.

இத்தனை நாளும் எத்தனையோ வகையில் முயன்று இதயம் வெதும்பிக் கருகிப் போன என்னைச் சதுரங்கப்பட்டணக் கடலில் கரைத்துக் கொள்வதற்காகவே இங்கு ஓடி வந்தேன்.

இன்றிரவு ஏழு மணிக்குக் கடற்கரையிலுள்ள கட்டுமரம் ஒன்றில் ஏறிக் கடலுள் சென்று, மாதாகோயிலிலிருந்து மணியோசை கிளம்பியதும் அப்படியே கடலில் மூழ்கி விடுவதாகக் காலையிலேயே முடிவு செய்திருந்தேன். அதனால்தான் திருப்போரூர் செல்கையில் நீ என்னை வற்புறுத்தி அழைத்தும் நான் வரவில்லை. நட்பு மறவாமல் அன்பு காட்டிய உனக்கு நன்றி.

மந்திரமூர்த்தி

கடிதத்தைப் படித்து முடித்ததும் கோபால் "அட, பாவி!" என்று தன்னையறியாமல் வருத்தத்தோடு கூவியபடி உடனே கடற்கரைக்கு வேகமாக ஓடினான்.

*

மந்திரமூர்த்தி தன் எண்ணத்தை நிறைவேற்றிக் கொள்ளக் கடற்கரைக்கு வந்த பொழுது அங்கிருந்த குடிசையருகில் குழந்தையொன்று அழுது கொண்டிருந்தது. தற்கொலை செய்து கொள்ளப் போகும் அவனுக்கு, அந்தக் குழந்தை அழும் காரணத்தை அறிய வேண்டும் என்று ஆவல் ஏற்பட்டது விந்தையிலும் விந்தைதான்!

அந்தக் குழந்தையை அணுகினான். அது நேற்று அவனிடம் சங்கு விற்க வந்ததுதான். அழும் காரணத்தை விசாரித்தான்.

கடலுக்குள் நேற்று மீன் பிடிக்கச் சென்றிருக்கிறான் அதன் தகப்பன். இன்னும் வரவில்லை. பாவம்! நேற்று அந்தப் பால் சங்கை விற்றதில் கிடைத்த இரண்டணாவைக் கொண்டுதான் அந்தக் குழந்தையின் தாய், குருணை வாங்கிக் கஞ்சி காய்ச்சிக் குழந்தைக்குக் கொடுத்துத் தானும் குடித்திருக்கிறாள். இன்று முழுவதும் பட்டினி!

வலையோடு சென்ற தன் கணவனைச் சற்று முன் வரை கரையிலேயே நின்று எதிர்பார்த்திருந்த அந்தப் பரதவப் பெண்—பசியால் அழும் தன் குழந்தைக்குப் பல வகையிலும் சமாதானம் சொல்லிப் பார்த்துவிட்ட அந்த ஏழைத் தாய்-இப்பொழுது எங்கேயோ போயிருக்கிறாள்.

இந்த விவரங்கள் அந்தக் குழந்தையிடம் மந்திரமூர்த்தி இதமாகப் பேசி அறிந்து கொண்டதிலிருந்து யூகித்து உணர்ந்தவை. இவற்றை யறிந்ததும் அவன் நினைவுகள் அலைபாயத் தொடங்கின.

தன்னையறியாமலேயே சட்டைப் பையில் கையை விட்டான். ஏதோ ஒரு நாணயம் இருந்தது. 'கடலில் விழுந்து சாகப் போகிறோம்; இந்தக் காசோடு முழுகுவதில் என்ன

லாபம்? இதைக் குழந்தையிடம் கொடுத்து விட்டால்...ஆம், கடைசி நேரத்தில் இந்தப் புண்ணியமாவது கிடைக்கட்டுமே!'

அந்த அரை ரூபாய் நாணயத்தை எடுத்து அதனிடம் நீட்டிக் கொண்டே "இந்தா, பாப்பா...வைச்சுக்கோ!" என்றான்.

"ஹூம்...வேண்டாம்...அம்மா அடிக்கும்" என்றுகூறி, அதை வாங்க மறுத்தது குழந்தை. மந்திரமூர்த்தி பிரமித்து விட்டான். 'இவ்வளவு தரித்திரத்திலும் எவ்வளவு தன்மான உணர்ச்சி! அது ஏழைக் குழந்தைதான்; ஆனால் பிச்சைக்காரக் குழந்தையன்று. இருந்தாலும் 'பசி வந்திடப் பத்தும் பறந்துபோம்!' என்று பழமொழி ஒன்று இருக்கிறதே.

வற்புறுத்திக் கொடுத்தால் வாங்கிக் கொள்ளும் என்ற நினைவில் "பயப்படாதே, பாப்பா; சும்மா வாங்கிக்கோ!" என்றான்.

குழந்தை என்ன நினைத்ததோ! "அப்படின்னா இரு, வருகிறேன்" என்று குடிசைக்குள் ஓடி நுழைந்தது.

மந்திரமூர்த்தியின் மனமோ, திருச்சிராப்பள்ளியிலுள்ள தன் குடும்பத்தை நோக்கி ஓடியது. தன் மனைவியும் தன்னைக் காணாமல் கலங்கிக் கொண்டிருப்பாள். குழந்தை கமலுவும் அப்படித்தான். அந்த ஆறு மாதக் குழந்தை மணி? அவன் பிறந்ததிலிருந்து தானே தனக்கு வேலையில்லாமல் போய்ச் சிரமப்படும்படி ஆகிவிட்டது!

அவன் வெளியே சென்றிருக்கும் சமயங்களில் அவனுடைய மகள் கமலு, அப்பாவை எண்ணிக் கொண்டு அடம் பிடிப்பாளாம். தாய் ஏதாவது காசு கொடுத்தாலும் வாங்காமல் "காசு வேந்தாம்! அப்பா...தான்... வேணும்...ம்...ம்..." என்று மழலையிலேயே அழுவாளாம்! அடிக்கடி அவன் மனைவி கூறியிருந்ததெல்லாம் அவனுடைய நெஞ்சில் இப்பொழுது நுரைத்தன.

குழந்தை ஒரு சின்ன மண் சட்டியை எடுத்துக் கொண்டு வந்தது.

"இந்தாங்க, நல்ல பால் சங்கு...இந்தக் கிளிஞ்சலெல்லாம் எடுத்துக்குங்க!"

"இதெல்லாம் எனக்கு வேணும், பாப்பா? இந்தா, பணம்..."

"கிளிஞ்சு குடுக்காமே...காசு வாங்க மாட்டோம்!" இந்த மொழி அவன் நெஞ்சைச் சுடுவது போல் இருந்தது.

உண்மையாகவே மந்திரமூர்த்தியின் உள்ளம் வெட்கப்பட்டது. 'லஞ்சம் வாங்குவது எப்படிக் குற்றமோ அப்படியே கொடுப்பதும்!' என்பதைத்தான் முன்பு உணர்ந்திருந்தான் அவன். ஆனால் இப்பொழுதோ 'பிச்சை எடுப்பது எப்படி இழிவோ, அப்படியே பிச்சை தருவதும்!' என்ற புதியதோர் உண்மையை அவன் உள்ளம் புரிந்து கொண்டது.

'சரி, இப்படி வாங்கிக் கொண்டு போய், அப்படி எறிந்து விட்டால் போச்சு!' என்று கருதியபடி, தன்னிடம் மேல் துண்டு இல்லாத தால், சட்டை மடியை ஏந்தினான். தான் கொண்டு வந்த கிளிஞ்சல்களைக் குழந்தை அதில் கொட்டியது.

அப்பொழுது அந்தக் குழந்தையின் தாய் அங்கே வந்தாள். "அம்மா...சங்கும் கிளிஞ்சியும் வித்தேன்..." என்று சொல்லிக் கொண்டே அவளிடம் அந்த நாணயத்தைக் கொடுத்தது குழந்தை. மகிழ்ச்சி மிகுதியால் அந்தக் குழந்தையை வாரி எடுத்து முத்தமிட்டாள் அவள்.

கடலை நோக்கி அடிபெயர்ந்த மந்திரமூர்த்தியை ஏதோ ஓர் உணர்வு கட்டுப்படுத்தியது. அப்படியே திரும்பி அந்தப் பரதவப் பெண்ணை அணுகி, "ஏம்மா, உங்க புருஷன்......" என்று கேட்டான்.

"ஆமாங்க, ஐயா! நேத்துக் காலையிலே போனது. இன்னும் வரல்லே! அவரோடு போனவங்க எல்லாம் வந்துட்டாங்க. அதை விசாரிக்கத்தான் போனேன். அதுவும் வந்து கொண்டு இருக்குதாம்!" என்று பதிலளித்தாள். அப்பொழுது ஏழைமைச் சோகம் இருந்த அவள் முகம், எழில் அல்லியாக மாறியது.

மந்திரமூர்த்தியின் மனத்தில் சிந்தனைக் கிளர்ச்சி ஏற்பட்டது. தன் கணவன் பிழைத்திருக்கிறான் — வந்து கொண்டிருக்கிறான் — என்பதை உணர்ந்ததும் அவளுக்குத்தான் எவ்வளவு ஆனந்தம்? அலைமேல் அலையாக மோதிக் கொண்டிருக்கும் அல்லல்களைத் தவிரச் சுகவாழ்வைக் கனவிலும் கண்டறியாத அவளுக்குத் தன்னுடைய கணவன் மீதுதான் எவ்வளவு காதல்! கல்வியும் நாகரிகமும் இல்லாத அவள், தனக்குச் சகலமும் கணவனே என்பதை அறிந்திரா விட்டால் அவளுக்கு இத்தனை மகிழ்ச்சி ஏற்படுமா?

அப்படியானால் தன் மனைவி?......

இந்த நினைவு அவனுடைய இருதய நரம்பையே பிடித்து ஆட்டி விட்டது. "இந்த இரண்டு நாட்களாக உன்னைக் காணாததால் உன் மனைவிக்கு எவ்வளவு வேதனையாய் இருந்திருக்கும்! கல்வியறிவும், சிந்திக்கும் ஆற்றலும் படைத்த நீயே இப்படிக் கோழைத்தனமாகத் தற்கொலை செய்து கொள்வதற்கு ஓடி வந்திருக்கிறாயே, இதுவா ஆண்மை?" அவனது தெள்ளியஉணர்வின் குரல்தான் அது.

எத்தனை நேரம்தான் மௌனமாகவே நின்று கொண்டிருக்க முடியும்? தன்னைப் பற்றி இன்னும் சற்று ஆழ்ந்து சிந்தித்தான். அவனுடைய பொறுப்பு அப்பொழுதுதான் தெரிய வந்தது. தான் வாழ்ந்துதான் ஆக வேண்டும்! தனக்காக அன்று; தன் மனைவி மக்களுக்காக! கல்வி இருக்கிறது. உழைப்பதற்கு உறுதியான உடலும் இருக்கிறது. பின்பு ஏன் தற்கொலை செய்து கொள்ள வேண்டும்?

மந்திரமூர்த்தியின் நெஞ்சக் கடலின் கொந்தளிப்பு அடங்கியது. நண்பனின் விட்டை நோக்கி நடந்தான்.

"மந்திரமூர்த்தி! மந்திரமூர்த்தி!! மந்திரமூர்த்தி!!!" என்று கூவியபடியே எதிரே ஓடி வந்த கோபால், மந்திரமூர்த்தியைக் கண்டதும் அப்படியே அவனைக் கட்டிப் பிடித்துக் கொண்டான். வேகமாக ஓடி வந்ததால் அவனுக்கு மேல் மூச்சு, கீழ் மூச்சு வாங்கியது. "மந்திரமூர்த்தி, இந்த மாதிரி அறிவீனமான செய்கையில் ஈடுபட எப்படித் துணிந்தாய்?"

"இல்லை, கோபால்! அறிவீனமான மந்திரமூர்த்தி மாண்டு விட்டான்! இப்பொழுது என் அறிவு தெளிந்து விட்டது!" என்றான். மந்திரமூர்த்தி கூறிய இந்த வார்த்தைகள் நிம்மதி நிறைந்த நெஞ்சத்திலிருந்து பிறந்தவையாக இருந்தன.

Printed and Published by T. Sadasivam at the Kalki Press, Kilpauk, Madras-10 for the Proprietors Messrs Bharathan Publications Private Limited
Managing Editor: T. Sadasivam.

REGISTERED No. M. 4392
Registered as a Newspaper in Ceylon

குருதத்தின்
படமாகிய "ப்யாஸா"வில்
நட்சத்திர நடிகை

**வஹீதா ரஹ்மான்**

நாட்டியக் கலைச் செல்வியான வஹீதா ரஹ்மான் தமது மென்மையான மேனியெழிலைப் பராமரிப்பதற்கு மணம்கமழும், தூய, வெண்மை நிறமுள்ள லக்ஸ் டாய்லெட் சோப் உபயோகிக்கிறார்.
நீங்களும் அழகாக விளங்குவதற்கு தினந்தோறும் இந்த சோப்பை உபயோகியுங்கள்.




## லக்ஸ் டாய்லெட் சோப்

சினிமா நட்சத்திரங்களின் அழகு சாதன சோப்

LTS. 535-50 TM